# கல்கி

KALKI 27.5.90 ரூ. 2.50

## கான்கிரீட் காடுகளிடையே தோட்டத் தீவுகள்

இலவச இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்!

கிளுகிளு பரவசக் களி:
லிரில் புத்துணர்வுக் குளி!




லிரில்
புத்துணர்வு சோப்!

லிரில். மனம் குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்

# வீரப்பனின் சாகசமும் காவல் துறையின் திணறலும்!

“அவர் ஒரு கொள்ளைக்காரர் என்பதற்கு அறிகுறியாக, முகத்தில் கொடுவாள் மீசையைத் தவிர வேறெதுவும் கிடையாது... ரொம்ப சராசரியான தோற்றம்தான்...” என்கின்றனர் சந்தனக் கட்டை கடத்தல் புகழ் வீரப்பனை நேரில் பார்த்துள்ளவர்கள்.

கோபிநாதம் — வீரப்பன் பிறந்த ஊர். இவ்வூரிலும் சுற்று வட்டாரங்களிலும் ராபின் ஹூட்டுக்கு நிகரான கதாநாயகனாகப் போற்றி, ஆராதிக்கப்படுகிறான் வீரப்பன். தமது கடத்தல் நடவடிக்கைகளால் இந்தப் பகுதிவாழ் மக்களுக்கெல்லாம் அவன் வேலை வாய்ப்பு ஏற்படுத்தித் தந்துள்ளதே இதற்குக் காரணம். போலீஸ் தனது 'கைவரிசை'யைக் காட்டி விசாரித்தாலும் யாரும் வீரப்பன் பற்றிய தகவல்களை மூச்சு விடக் கூட மறுக்கிறார்கள்.

கர்நாடக — தமிழக எல்லைப் பகுதியில் உள்ள முட்புதர் அடர்ந்த காடுகளிலே பிறந்து வளர்ந்தவன் வீரப்பன். அதனால் அந்த வட்டாரத்து நிலப்பகுதியின் மூலை முடுக்குகளெல்லாம் அவனுக்கு அத்துப்படி. ஆரம்பத்தில் ஒரு சராசரி ரவுடியாகவே இருந்தவன், ஹொகேனக்கல் காட்டுப் பகுதியின் வனத்துறை அதிகாரிகள் சிலர் சந்தனக் கட்டைகளைக் கடத்திய போது, அவர்களுக்கு அடியாளாக இருந்து உதவினான். பிறகு மெள்ள மெள்ளத் தானே தன் சகோதரன் அர்ஜுனனுடன் சேர்ந்து 'தொழிலில்' இறங்கி விட்டான்.

தந்தத்துக்காக முந்நூறு யானைகளையும், 'தற்காப்புக்காக'ப் பன்னிரண்டு வனத்துறை அதிகாரிகளையும் கொன்று குவித்துள்ளான் வீரப்பன். ஆயிரக்கணக்கான சந்தன மரங்களை வெட்டித் தள்ளியிருக்கிறான். தனக்குப் போட்டியாக விளங்கிய மற்றொரு கடத்தல் குழுவைச் சேர்ந்த ஐந்து பேரைச் சமரசம் பேசுவதாகக் கூறி விருந்துக்கு அழைத்து வெட்டித் தீர்த்துவிட்டான். அவனுடன் போட்டியிட்ட மற்றொரு சந்தன மரக் கடத்தல்காரனான பால்ராஜையும் சமீபத்தில் தீர்த்துக் கட்டி விட்டான்.

பெங்களூர் எம். ஜி. ரோடில் வெடி மருந்து மற்றும் ஆயுதங்கள் விற்கும் ஒரு கடையில் வீரப்பனைக் கைது செய்தார்கள் போலீசார். இது நடந்தது 1986 இல். ஆனால் வீரப்பன் சிறை அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்துத் தப்பிச் சென்று விட்டான்! 'அவன் உடம்பில் விளக்கெண்ணெய் தடவிக் கொண்டிருந்ததால் அவனைப் பிடிக்க முடியவில்லை!' என்பது அதிகாரிகள் கூறிய காரணம்.

கர்நாடக, தமிழக மாநிலக் காவல் துறையினருக்குக் கடுக்காய் கொடுத்து வரும் வீரப்பன் குழுவில் சுமார் 150 பேர் இருக்கிறார்களாம். கடந்த ஏப்ரல் 16 இல் இவர்



* ஓவியரின் கற்பனையில் வீரப்பன்!

களில் சிலர் நான்கு காவல் துறை அதிகாரிகளைத் திட்டமிட்டுக் கொலை செய்தனர்; ஆறு அதிகாரிகள் இந்த மோதலின் போது படுகாயம் அடைந்தனர்!

வீரேந்திர பாடீல் அரசாங்கம் வீரப்பனைக் கைப்பற்ற முடியாமைக்காகத் தீவிரமான கண்டனத்துக்கு உள்ளாகியிருக்கிறது. வீரப்பனின் பெயரைச் சொன்னாலே கர்நாடகக் காவல் துறையினர் தர்மசங்கடத்திலும் பயத்திலும் நடுங்குகின்றனர் என்று கூறப்படுகிறது. 'புதர் நிரம்பிய காடுகளைத் துளைத்து உட்செல்ல முடியவில்லை; எங்களிடம் போதுமான அளவு நவீன இயந்திரங்களும் தொலை தொடர்பு சாதனங்களும் இல்லை' என்று வீரப்பனைப் பிடிக்க முடியாமைக்கு இவர்கள் காரணம் சொல்கின்றனராம்.

தமிழ்நாட்டுக் காவல் துறை அதிகாரிகள் வீரப்பன் விஷயத்தைச் சற்று சீரியஸாகவே எடுத்துக் கொண்டுள்ளதாகச் சொல்லப்படுகிறது. சிறப்புப் பயிற்சி பெற்ற ஒரு படையே தர்மபுரி பகுதியில் எப்போதும் தயார் நிலையில் காத்திருக்கிறதாம்.

ஒரு ஹெலிகாப்டரைப் பயன்படுத்தி இரு மாநில போலீஸாரும் முனைந்து தேடினால் வீரப்பனை வளைத்து விட வாய்ப்புக்கள் உண்டு என்கிறார்கள். அத்துடன், வீரப்பனின் ஆதரவாளர்கள் வாழும் கிராமங்களில் வளர்ச்சிப் பணிகளையும் வேலை வாய்ப்புக்களையும் அரசாங்கம் புகுத்தினால், அப்பகுதி மக்கள் தங்கள் வயிற்றுப்பாட்டுக்கு வீரப்பனை நம்பும் நிலை மாறும். காவல் துறைக்கு மக்களின் ஒத்துழைப்பு கிடைக்கக் கூடும்.

தற்போது வீரப்பன் நெஞ்சில் குண்டடிப்பட்டு வெள்ளமலை என்னும் இடத்தில் ஒளிந்திருக்கிறான். நாலா பக்கமும் மலைகளால் சூழப்பட்ட இந்த இடத்தில், வீரப்பனுடன் நிறைமாத கர்ப்பிணியான அவன் மனைவியும் இருக்கிறாள். மருத்துவ உதவி நாடி இவர்கள் வெளியேறினால் 'கப்' பென்று பிடித்துக் கொள்ளத் தயாராய் உள்ளதாம் காவல் துறை.

இதற்கிடையில், சில வாரங்களுக்கு முன்னர்தான் வீரப்பன் ஒரு மைசூர் மாலை இதழுக்கு பேட்டி அளித்ததாகவும், அந்தப் பேட்டியில் தாம் மைசூர் பகுதி எம். எல். ஏக்கள் முதல் கீழ்மட்டக் காவல் துறை அதிகாரிகள் வரை பலருக்குத் தவறாமல் மாமூல் அனுப்பி வருவதாகக் கூறியிருப்பதாகவும் தெரிகிறது!

நன்றி: **ஹிந்துஸ்தான் டைம்ஸ்**

---

# அப்புறம்

என்ன ஆச்சு? என்ன ஆச்சு? என்ன ஆச்சு? என்ன ஆச்சு? என்ன ஆச்சு?

## யூனிட் டிரஸ்ட் செக் விவகாரம்:

சில மாதங்களுக்கு முன்பு, யூனிட் டிரஸ்ட் நிறுவனத்தின் மிகப் பெரிய தொகைக்கான செக்குகள் வி. பி. சிங், எஸ். பி. சவான், ராமகிருஷ்ண ஹெக்டே போன்ற தலைவர்களுக்கு அனுப்பப்பட்டு, அவற்றை யார் அனுப்பியது என்ற விஷயம் பரபரப்பாய்ப் பத்திரிகைகளில் அடிபட்டதல்லவா? அந்த விஷயம் என்ன ஆயிற்று? விசாரித்தோம்.

அந்த செக்குகள், பயன்படுத்தத் தகுதியில்லாத, கேன்சல் செய்யப்பட வேண்டிய செக்குகளாம். சம்பந்தப்பட்ட அதிகாரியின் மேஜையிலிருந்து அவருக்குத் தெரியாமல் எடுக்கப்பட்டு, பிரபல புள்ளிகளின் பெயர்களுக்கு, பெருந்தொகை எழுதி போஸ்ட் செய்யப்பட்டு விட்டன! யூனிட் டிரஸ்ட் நிறுவனம் கேஸை, போலீஸிடம் ஒப்படைத்து விட்டது.

போலீஸ், சுமார் நூற்றைம்பது பேர்களை விசாரித்து யூனிட் டிரஸ்ட் ஊழியர்கள் மூன்று பேர் மீது சென்னை எழும்பூர் கோர்ட்டில், குற்றப் பத்திரிகை தாக்கல் செய்தது. அங்கே வழக்கு விசாரணை நடந்து கொண்டிருக்கிறது. நூற்றுக்குமதிகமான பேர்கள் கோர்ட்டில் சாட்சி சொல்லியிருக்கிறார்கள்.

குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட்ட மூன்று பேரும் வேறு தனிப்பட்ட காரணங்களுக்காகப் பழிவாங்கும் நோக்கில் தங்கள் மீது குற்றம் சுமத்தப்பட்டுள்ளதாக வாதாடுகிறார்கள். கேஸ் நடந்து கொண்டிருக்கையில் இவர்களில் ஒருவர் அப்ரூவராக மாறினார்! ஆனால் அவரே சமீபத்தில், தாம் கட்டாயப் படுத்தப்பட்டதன் பேரில் அப்ரூவர் ஸ்டேட்மெண்ட் தந்ததாகக் கூறியுள்ளார்!

கேஸ் இழுத்துக் கொண்டிருக்கிறது; எப்போது முடியும் எனத் தீர்மானமாய்த் தெரியவில்லை!

— **மௌஷ்மி.**



நடுவே ராஜசேகரன்; பக்கத்தில் 'உழவாரப் படை'யோடு இராமலிங்கஞ் செட்டியார்.

# 'உழவாரம்' அழைக்கிறது

கிணற்றிலிருந்து படு உற்சாகமாகச் சரசரவென்று தண்ணீர் இறைக்கிறார்கள். அண்டா நிறைய நீரைச் சுமந்து கொண்டு ஓடுகிறார்கள். விளையாட்டு மாதிரிச் சிரிப்பும் கும்மாளமுமாக அந்தத் திருப்பணி நிகழ்கிறது.

"இவர் பி. காம். படித்து முடித்திருக்கிறார். இவர் பன்னிரண்டாம்வகுப்பு...இவர் அச்சகம் வைத்திருக்கிறார், இவர் எல். ஐ. சி. ஏஜெண்டு, இவர் மிராசுதார்..." என்று மடமடவென்று அந்தத் திருக்கூட்டத்தைப் பெயர் சொல்லி அறிமுகப்படுத்துகிறார், மயிலாடுதுறை 'உழவாரம்' ஒருங்கிணைப்பாளர் இரா. இராஜசேகரன்.

தண்ணீர் இறைக்கும் வேகத்தைப் பார்த்தால் எங்கே கிணறு வற்றி வறண்டு விடுமோ என்று நம்முடைய 'சென்னைப் புத்தி' மிரள்கிறது. ஆனால் தஞ்சாவூர் மாவட்டம், அதுவும் மயிலாடுதுறை அருள்மிகு மாயூரநாதர் ஆலயத்துப் பிராகாரத்துத் திருக்கிணறு அப்படி வற்றக் கூடியதா என்ன! அதுவும் இளைஞர்கள் திருக்கோவிலின் பிராகாரங்களையும் மேடைகளையும், மண்டபங்களையும் அழுக்குப் போக அலம்பி விட்டுத் தூய்மைப்படுத்தும் பணியில் ஈடுபட்டிருக்கும் போது!

நாமெல்லாம் கோவிலுக்குப் போகிற நேரங்களில் சுற்றுப்புறம் சுத்தமாக இல்லை என்றால் முகம் சுளிப்போமே தவிர இப்படி வரிந்து கட்டிக் கொண்டு செயலில் இறங்கு



* வற்றாத கிணறு



* மாணவர்களின் வற்றாத உற்சாகம்

* ரிஷபக் கொடி ஏற்றி உழவாரம் திருப்பணி தொடங்குகிறார்கள்.



வோமா? 'இது நம்முடைய செல்வம். இதை நாம்தான் காப்பாற்ற வேண்டும். நாம்தான் சுத்தமாக வைக்க வேண்டும்' என்கிற எண்ணம் இளந்தலைமுறையினரின் மனத்தில் ஆழமாகப் பதிந்து செயல்பட ஊக்கமளிக்கிறது 'உழவாரம்' என்கிற பேரியக்கம்.

பிராகாரம் சுத்தம் செய்வது மட்டுமில்லை, கோவில் சுற்றுப்புறத்தில் மண்டிக் கிடக்கும் புதர்கள், மண்மேடுகளை அகற்றுவது, திருக்குளம் தூய்மை செய்வது, சமயச் சொற்பொழிவுகள் நடத்துவது, மாணவர்களுக்குப் போட்டிகள் வைத்துப் பரிசளித்தல் என்று ஆக்கபூர்வமான பல நடவடிக்கைகளை ஊக்குவிக்கிறது "உழவாரம்."

ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் உள்ள பல்வேறு சைவ சமய நிறுவனங்களின் ஒருங்கிணைப்பாக மயிலாடுதுறையில் பிறந்தது இந்த "உழவாரம்." இதற்குத் தலைவர் என்று யாரும் கிடையாது. ஒருங்கிணைப்பாளர் என்று மட்டுமே ஒருவர் உண்டு.

கவனிப்பாரற்றுப் பாழ்பட்டுக் கிடக்கும் திருக்கோவில்கள் கண்களையும் மனசையும் உறுத்தவே, நாயன்மார்கள் வீடு பேறடைந்த நாட்களை ஊர் மக்களுக்கு நினைவூட்டி, அவர்கள் அவதரித்த தலங்களில் திருநாள் கொண்டாடுவது என்று தொடங்கினார்கள்.

ஒவ்வொரு நாயன்மாருக்கும் ஓர் அன்பரை 'ஆயுள் தொண்டர்' என்று அறிவித்துப் பொறுப்பைச் சுமத்தினார்கள். இந்த வரிசையில் இன்று கிட்டத்தட்ட நாற்பது நாயன்மார்களுக்கு ஆயுட் தொண்டர்கள் ஏற்பட்டு விட்டார்கள்.

ஒவ்வொரு நாயன்மார் விழாவுக்கும் ஆயுட் தொண்டர்கள் பத்து, இருபது பேர் சேர்ந்து செல்லும் போது, ஊர் மக்களிடையே பிரமாதமான உற்சாகம் ஏற்படுகிறது. "நம் ஊரில் இந்த நாயனார் பிறந்தாரா? நம் ஊருக்கு இவ்வளவு சிறப்பு உள்ளதா?" என்று அவர்கள் உணர்ந்து உணர்ச்சிவசப்பட்டு, வீதி பெருக்கி, நீர் தெளித்துக் கோலமிட்டு வரவேற்று விருந்தளிக்கும் அனுபவங்கள் இவர்களைப் பெரிதும் ஊக்கப்படுத்தியிருக்கின்றன. கல்லூரிப் பேராசிரியர்கள், பள்ளி ஆசிரியர்கள், வணிகர்கள், அலுவலர்கள் என்று பல துறையினரும் ஆயுட் தொண்டராகச் செயல்படுகின்றனர்.

ஆண்டுக்கு ஒருமுறை நடைபெறும் இந்த நாயன்மார் விழாக்களின் வேகம் ஒன்றிரண்டு நாட்களிலேயே தணிந்து போய்விடுகிறது. தொடர்ந்து திருக்கோவில்களைக் கவனிக்க என்ன வழி என்று சிந்தித்த போது "உழவாரம்" என்ற யோசனை தோன்றியது.

ஆயுள் தொண்டர் என்று அறிவிக்கப்பட்டு விட்டவர் மாதம் ஒரு முறையாவது தாம் தொடர்பு கொண்டுள்ள திருக்கோவில் வழிபாட்டுக்குச் செல்ல வேண்டும். தனித்துச் செல்லாமல் உள்ளூர் அன்பர்களையும் நெறிப்படுத்தி அழைத்துச் செல்ல வேண்டும். உள்ளூர் அன்பர்களைக் கொண்டு அவ்வப்போது புல் புதர்களை அகற்ற வேண்டும். தீபத்திற்கு எண்ணெயிடல், கற்பூரம் எடுத்துச் செல்வது என்று மிகமிகக் குறைவான திட்டங்களே வகுத்துள்ளார்கள். எனினும் அவரவர் ஆர்வத்தைப் பொறுத்து, வார வழிபாடு தினசரி வழிபாடு என இத்திட்டம் வளர்ச்சியுறலாம்.

திருக்கோவில்கள் கவனிப்பாரற்றுப் போய்விட்ட காரணத்தால்தான் சமூக விரோதிகள் சிலைகளையும் சிற்பச் செல்வங்களையும் 'நாடு கடத்தும்' அளவுக்குப் போய் விட்டார்கள். உள்ளூர் மக்கள் பல மைல்கள் கடந்து பிரார்த்தனைக்கு என்று எந்த எந்தக் கோவில்களுக்கோ போகிறார்கள். ஆனால் சொந்த ஊரில் உள்ள பழம் பெரும் ஆலயத்தைப் பற்றி அக்கறை கொள்வதே இல்லை. இந்த நிலைகளை மாற்ற "உழவாரம்" அமைப்பு எல்லா ஊர்களிலும் தோன்றிச் சிறப்பாக இயங்க வேண்டும்.

இந்தத்திட்டங்களுக்குப் பணப் பொறுப்பு என்பதெல்லாம் இல்லை. மயிலாடுதுறையில் நாம் பார்த்த கோவில் சுற்றுப்புறத்

# களைப்பும் தாகமும் உங்களை வாட்டும்போது உங்கள் உடலுக்குத் தேவை உடனடி சக்தி.

(வெறும் தாகம் தணிக்கும் பானம் அல்ல)

- க்ளுகோன்-ஸி யில் உள்ள க்ளுகோஸ், உங்களைச் சுறுசுறுப்புடன் வைக்க உடனடி சக்தி அளிக்கிறது.
- பற்கள், எலும்புகள், உடல் திசுக்கள் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு மிக முக்கியமானது, விட்டமின்-ஸி. அதன், ஒரு நாளைய தேவையின் மூன்றில் ஒரு பங்கை இது அளிக்கிறது.
- தயாரிப்பதும் சுலபம். நாலு முழு தேக்கரண்டி க்ளுகோன்-ஸி யை குளிர்ந்த தண்ணீரிலே கலக்கவும். ஆரஞ்சுச் சுவை கொண்ட, புத்துணர்ச்சியூட்டும் பானம் தயார்.

விலைமிக்க சர்க்கரை சேர்க்க தேவை இல்லை




ஆரஞ்சுச் சுவைகொண்ட, சக்தி பானம்

# க்ளுகோன்-ஸி

அருந்திய உடனே அளித்திடும் 'புத்துயிர்'

HTA 1648

திருப்பணியில் ஈடுபட்ட இளைஞர்கள் ஆளுக்கு ஐந்து, பத்து என்று சொந்தப் பணத்தைப்போட்டு அன்றையப் போதுக்குத் தாங்களே உணவு தயாரித்துச் சாப்பிட்டுப் பணியாற்றினார்கள். ''உழவாரம்'' உடலுழைப்பை மட்டுமே முக்கியமாகக் கொண்டு செயல்படுகிறது.

நாயன்மார் விழாவைப் பற்றிக் குறிப்பிட்ட தவத்திரு குன்றக்குடி அடிகளார் இப்படிக் கூறியிருக்கிறார்: ''வழிபாடு, சொற்பொழிவு என்பதோடு நின்றுவிடாமல் நாயன்மார் செய்த தொண்டினைச் செய்வது ஆயுள் தொண்டரின் கடமையாகும். தண்டியடிகள் தனி மனிதராக நின்று கண்ணற்ற நிலையிலும் திருவாரூர்த் திருக்குளத்தைத் தூர் எடுத்துத் தூய்மை செய்தார். தண்டியடிகள் திருநாளைக் கொண்டாடும்போது திருக்குளம் தூர் எடுக்கும் பணியினைச் செய்தல் வேண்டும். இதுபோல, அந்தந்த நாயன்மார்கள் மேற்கொண்ட பணியினை ஆயுட் தொண்டர்கள் செய்ய வேண்டும்.''

''கும்பாபிஷேகம் கூட எப்போது வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். ஆனால் சிதிலமடைந்துள்ள திருக்கோவில்களை 'இப்போதுள்ள நிலையிலாவது காப்பாற்றுவோம்; மேலும் சேதப்படாமல் கவனித்துக் கொள்வோம்' என்கிற உறுதியோடு செயல்பட எண்ணுகிறோம். பாடல் பெற்ற தலங்களில் பாதிக்குமேல் தஞ்சாவூர் மாவட்டத்திலேயே இருக்கின்றன. முப்பது திருக்கோவில்களுக்குச் சென்று பார்த்து வந்திருக்கிறோம். தலச்சங்காடு — கோபுரம் முற்றிலும் போய் விட்டது. இதைப் புதுப்பிப்பது மிகப் பெரிய வேலை. திருவாளப்புத்தூர், இராமனந்தீசுவரம் கோவில்களின் இடிபாடுகள் உடனடிக் கவனம் பெற வேண்டியவையாக உள்ளன. இந்த இரண்டு கோவில்களுக்கும் உள்ளதைக் காப்பாற்றவே நாற்பதாயிரம் வரை செலவாகும் என்று தோன்றுகிறது. பொறியாளர்களை அனுப்பி மதிப்பீடு போட்டிருக்கிறோம். உரியவர்களின் அனுமதி பெற்று அவசரத் திருப்பணிகளை உடனே செய்ய எண்ணியுள்ளோம்'' என்கிறார் இராஜசேகரன்.

ஆண்டுக்கு ஒருமுறை மாநில அளவிலான மாநாடு நடத்தி, சிந்தித்துச் செயல்படுகின்றனர். இந்த ஆண்டு ஜூன் கடைசி வாரத்தில் சைவ சமய மன்றங்களின் ஏழாவது மாநாடு சிதம்பரத்தில் நிகழவிருக்கிறது. இதற்கு முன்னோடியாக வரும் ஜூன் மூன்றாம் தேதி மயிலாடுதுறையில் ''உழவாரம்'' மாவட்ட அளவிலான மாநாடு ஒன்றை நடத்தவிருக்கிறது. ''தெய்வத் தமிழ்'' என்ற பெயரில் செய்தி மடல் ஒன்றும் மயிலாடுதுறையிலிருந்து வெளியிடப்படுகிறது.

வளர்ந்து செழிக்க வேண்டிய ஒரு சிவத் தொண்டு. ''ஆர்வமே நெய்யாக''க் கொண்டு சுடர்விடும் அனைவரையும் நோக்கி நமது கரங்கள் குவிகின்றன. ''உழவாரம்'' ரிஷபக் கொடி, தமிழகம் முழுவதும் பறக்கட்டும், பறந்து சிறக்கட்டும்!

தொடர்பு கொள்ள விரும்புவோருக்கு:

''உழவாரம்,''
31, நகர் விரிவு,
மயிலாடுதுறை.
— 609 001.

— 'யெஸ்பால்'

படங்கள்: சாந்தி ஸ்டுடியோ

---

ஒருவன் குத்துச்சண்டை கற்றுக் கொள்ளச் சென்றான். முதல் நாளே அவன் முகம் ரணகளமாகியது. சொல்லித்தரும் ஆசிரியரிடம் சோகமாகப் போய் ''ஏன் சார்! இதுக்கு 'போஸ்டல் டியூஷன்' கிடையாதா?'' என்றான்!

— ப்ரசன்னா.



''இந்த வங்கியிலே நான் மேனேஜரா பொறுப்பேற்ற பிறகு டெபாசிட் பத்து கோடியா ஆயிருக்கு!''

''அப்படியும் ஏன் உங்களுக்குப் பதவி உயர்வு கிடைக்கலை?''

''நான் வர்றதுக்கு முந்தி டெபாசிட் இருபது கோடியா இருந்திச்சே?''

— வி. ரேவதி.



# கல்கியின் விமர்சனமும் கலைஞரின் ரசனையும்! - II

“‘எய்தவன் இருக்க அம்பை நோவா னேன்? தூர்தர்ஷன் மீது — அதன் அதிகாரி கள் மீது —, முதல்வர் பாய்வது சரியல்ல; ‘அன்று ‘தூதா’ என்று ஒதுக்கிய தூர்தர்ஷன் இன்று அழைப்பு அனுப்பியது’ என்று சொல்வது ரசனைக் குறைவு’’ என்பதாக நாம் நமது விமர்சனத்தில் சுட்டிக் காட்டி னோம். அதிகாரிகள் எப்போதுமே ஆட்சி யில் உள்ளவர்களைத் திருப்திப் படுத்ததான் முயற்சி செய்வார்கள் என்று எடுத்துக் காட்டினோம். இதற்குப் பதில் கூறினாரா கலைஞர் என்றால், இல்லை! மாறாக, கல்கி பத்திரிகைக்கு ரசனை பற்றி பாடம் போதிக்க முற்பட்டிருக்கிறார். போதாக் குறைக்கு இந்த உபதேசத்தில் அவர் ராஜா ஜியை வேறு வம்புக்கு இழுக்கிறார்.

கவர்னர் ஜெனரல் ராஜாஜி பற்றி எழுதும் போது, ‘‘அரியாசனத்தில் ஜனக மகாராஜர்’’ என்று தலைப்புத் தந்தார் அமரர் கல்கி. ஜனகரைப் போலவே, தாமரை இலை நீராக, பற்றற்ற நிலையில் அதிகார பீடத்தை அலங்கரித்தார் ராஜாஜி. அப்பேற்பட்ட அரசியல் ஞானியை, மகானை அவரது மகன் ஸி. ஆர். நரசிம்மனோடு சேர்த்து வம்புக்கு இழுத்திருக்கிறார் கருணா நிதி.

இன்று கலைஞருக்குப் பதில் சொல்ல ராஜாஜியும் இல்லை; ஸி. ஆர். நரசிம்மனும் இல்லை. பதில் கூற உயிருடன் இல்லாதவர் களை வம்புக்கு இழுப்பதுதான் கலைஞரின் ரசனை போலும்! இருக்கட்டும், என்ன சொல்கிறார் பார்ப்போம்:

ராஜாஜி கவர்னர் ஜெனரலாகவும் சென்னை ராஜதானியின் முதலமைச்ச ராகவும் இருந்தாராம். அதனால் அவர் மகன் நரசிம்மன் அரசியலில் புகாமல் இருந்து விட வில்லையாம்; நாடாளுமன்ற உறுப்பினர் ஆனாராம். ஆக, ஸ்டாலின் அரசியலில் புகுவதில் என்ன தவறு? என் பது இவர் வாதம்.

கலைஞர் கூறுவது உண்மைதான்; ஆனால் முழு உண்மை அல்ல. அரைகுறை உண்மை பொய்யை விட மோசமானது. ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருந்தவரை நரசிம்மன் அரசியலில் புகவில்லை. ராஜாஜி அரசியல் வாழ்க்கையிலிருந்து ஓய்வு பெற்று சென்னை திரும்பிவிட்டார். இதன் பிறகு அவர் மத்தியில் அமைச்சரானதும் சென்னை மாநிலத்தின் முதல்வரானதும் காலத்தின் கட்டாயமாக ஏற்ற தாற்காலிகப் பதவிகள். ஓய்வு பெற்றவரை அங்கே நேரு ஜியும் இங்கே காமராஜரும் நெருக்கடி நேரங் களில் அணுக, ராஜாஜி பெருந்தன்மை யுடன் உதவ முன்வந்தார். அவ்வளவே. இது சரித்திரம் கூறும் உண்மை. நரசிம்மன் எம்.பி. ஆனது ராஜாஜி அதிகார பூர்வ மாக ஓய்வு பெற்ற பின்னர்தான். ஒரு கட்டத் தில் நேருஜி, நரசிம்மனுக்கு உ த வி அமைச்சர் பதவி தரத் தயாராக இருந்த போது, நரசிம்மன் அதனை மறுத்து வேறு ஒரு தமிழருக்கு அதனை அளிக்குமாறு சிபாரிசு செய்தார். ராஜாஜியின் மகன் என் பதற்காக மந்திரி பதவி கொடுக்கப்பட்ட தாகப் பேசுவார்கள் என்பதே காரணம்!

‘‘நான் அரசியல் வாழ்க்கையில் ரொம்பக் கண்டிப்பானவனாக இருந்ததினாலேயே என் மகன் நரசிம்மனின் முன்னேற்றத் துக்குத் தடையாகவும் இருந்து விட்டேன்’’ என்று ராஜாஜி மிக நெருங்கிய நண்பர் களிடம் கூறியதுண்டு.

நரசிம்மன் எம். பியாக இருந்த போது அதிகாரிகளைக் கூட்டி வைத்துத் தமது தொகுதியில் மக்களுக்குப் பதில் கூறக் கூட் டங்களுக்கு ஏற்பாடு செய்தாரா? அல்லது ராஜாஜிதான் தமிழகத்தின் ஒரு பக்கத்தில் கலவரத் தீ பரவிக் கொண்டிருந்த போது வேறு ஒரு பக்கத்தில் மகனை வாரிசாக்க ஊர்வலம் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந் தாரா?

**ந**மக்கு ஸ்டாலின் மீது விரோதம் கிடையாது. அவரது அரசியல் பிரவேசத்



மு. க: ரசனையோ ரசனை!



ராஜாஜி: ''அரியாசனத்தில் ஜனகமகாராஜர்''

துக்கு நாம் எதிரியும் அல்ல. விரோதம் இருந்தால் அவரை அட்டைப்படத்தில் போட்டு பேட்டி கண்டிருக்க மாட்டோம். கலைஞர், குங்குமத்தில் ராஜாஜியைப் பழித்து எழுதிய அதே வாரம், கல்கியில் ஸ்டாலினின் சட்ட சபைப் பேச்சைப் பாராட்டி தலையங்கம் எழுதியிருக்கவும் மாட்டோம். எந்தக் கட்சி? யார்? என்றெல்லாம் பாராமல் நல்லதைப் பாராட்டுவதும் தவறுகளைச் சுட்டிக் காட்டுவதும் தான் கல்கியின் மரபு. அதைத்தான் இன்றும் பின்பற்றி வருகிறோம்.

அரசினர் தோட்டத்தில் உள்ள மண்டபத்துக்கு ராஜாஜி உயிரோடு இருந்த காலத்தில்தான், ''ராஜாஜி ஹால்'' என்று பெயர் சூட்டப்பட்டது என்று ஒரு மாபெரும் உண்மையைக் கண்டு பிடித்துக் கூறியிருக்கிறார் கலைஞர். ராஜாஜியைக் கேட்டுக் கொண்டா செய்தார்கள்? அவர் விரும்பியதாலா அப்படி பெயர் சூட்டினார்கள்? சென்னை ராஜதானியை அன்றைக்கு ஆண்ட காங்கிரஸ் அரசு அந்தக் காரியத்தைச் செய்தது. அதற்குமுன் அதற்கு ''பாங்குவெட்டிங் ஹால்'' என்று பெயர். நம்மை ஆண்ட ஆங்கிலேயர்கள் அங்கே விருந்துண்டு 'ஆர்கெஸ்ட்ரா' இசைக்கு ஏற்ப 'பால் டான்ஸ்' ஆடுவார்கள். சுதந்திரத்துக்குப் பிறகு அந்தப் பெயர் பொருத்தமற்றதாகப் போயிற்று. அங்கே பெரும்பாலும் பொதுக் கூட்டங்கள்தான் நடந்தன. 'ராஜாஜி மண்டபம்' என்று பெயர் சூட்டினார்கள்.

ஆனால் இதுவும் ராஜாஜிக்கு விருப்பமில்லாததுதான். ஊர்கள், மண்டபங்கள், சாலைகள் இவற்றின் பெயர்கள் வெறும் பெயர்கள் மட்டுமல்ல. அவற்றுக்குச் சரித்திர முக்கியத்துவம் உண்டு என்பார் அவர். சேத்துப்பட்டு 'மன்ரோ பால'த்தை 'ராஜாஜி பாலம்' என்று பெயர் மாற்றம் செய்த போது மனம் நொந்து சுயராஜ்யாவில் எழுதினார். 'இப்படி நினைத்தபடியெல்லாம் பெயர்களை மாற்றுவது தவறு. இன்று ஆட்சியில் இருப்பவர்களுக்கு மன்ரோவின் முக்கியத்துவம் தெரியவில்லை என்றால் அதைத் தெரிந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டுமே அல்லாது, பெயர்களை மாற்றி சரித்திர நினைவுகளை அழித்து விடக் கூடாது' என்றார்.



வி. ஆர். நரசிம்மன்: ''அமைச்சர் பதவி வேண்டாம்.''

ஏன், சிலை வைப்பது, தபால் தலை வெளியிடுவது எல்லாம் கூட ராஜாஜிக்குப் பிடிக்காத விஷயங்கள்தாம். 'சிலைகளைப் பாதுகாக்க நமக்குத் தெரியாது; காக்கை எச்சம் வழிந்து கொண்டிருக்கும்' என்றும், 'போஸ்ட் மாஸ்டருக்கு வீட்டிலே மனைவியிடம் கோபம் என்றால், தபால் தலையில் உள்ள தலைவரின் முகத்தில் ஓங்கி ஓங்கி முத்திரை குத்துவார்' என்றும் மெலிதான நகைச்சுவையுடன் எழுதினார்.

ஆனால் இத்தகைய நளின நகைச்சுவையை ரசிக்கும் திறன் கலைஞருக்குக் குறைந்து வருவதாகத் தோன்றுகிறது. இல்லையெனில், 'தயாளு அம்மாவுக்கோ ராஜாத்தி அம்மாவுக்கோ முதல்வராகும் ஆசை இருப்பதாகத் தெரியவில்லையே' என்று தராசு எழுதியதைக் கலைஞர் 'ரசனைக் குறைவு' என்று கூறியிருக்க மாட்டார்.

எம். ஜி. ஆர். உயிருடன் இருந்த போதே இங்கே சக்களத்திப் போராட்டம் நடந்ததும் அவர் மறைவுக்குப் பிறகு அது தீவிர மடைந்ததும் அனைவரும் அறிந்தவை. வருந்தத்தக்க அந்த நிகழ்ச்சிகளைக் கூறாமல் கூறி நினைவூட்டுவதிலும் இன்று அத்தகைய அபாயமில்லை என்று சொல்லாமல் சொல்லி நிம்மதிப் பெருமூச்சு விடச் செய்வதிலும் மெலிதான ஹாஸ்ய ரசனை இருக்கவே செய்கிறது. விஷயம் இலைமறை காயாக ரசனையோடு கூறப்பட்டிருப்பதைக் கல்கி வாசகர்கள் புரிந்து கொண்டிருக்கும் போது, கலைஞர் புரிந்து கொள்ளாதது நமக்கு வியப்பே.

ஒருவேளை டெக்கமரான் கதைகளும், கிளு கிளு இலவச இணைப்புக்களும், கலைஞரின் மாணவப் பருவத்தில் தலைமை ஆசிரியர் குறிப்பிட்ட மேடு பள்ளங்களும் தான் ரசனை என்று கருணாநிதி கருதுகிறாரோ என்னவோ! அத்தகைய ரசனை கல்கிக்கு இல்லைதான். எங்களுக்கு வேண்டவும் வேண்டாம். இதனை மீண்டும் ஒரு முறை உறுதிப் படுத்திக் கொள்ள கலைஞரின் ''ரசனையோ ரசனை'' போதனை உதவியிருக்கிறது. அதற்காக முதல்வருக்கு மனமார்ந்த நன்றி.

**ஆசிரியர், கல்கி.**

# இப்போது மேலும் பல நலன்களுடன்

# டோட்டல்

## நீல நிற டிடர்ஜன்ட் பார்

**வசதியான நான்கு வில்லைகள்:**
எளிதில் ஒவ்வொரு பகுதியாக பிரித்து சிக்கனமாக உபயோகிக்க வகை செய்கிறது.

**அதிகமான டிடர்ஜன்ட் சக்தி:**
இதிலுள்ள ஆப்டிகல் வைட்னர் பிரகாசமான வெண்மையை கொடுக்கும் திறன் கொண்டது.

**பொங்குகின்ற நுரைவளம்:**
சிறிதளவு தேய்த்தாலும் அதிக நுரைவளத்தை கொடுத்து அழுக்கை எளிதில் போக்குகிறது.

**உயர்தரமான மதிப்பு:**
மற்ற டிடர்ஜன்ட் கட்டியை விட இரு மடங்கு (300 கிராம்) உள்ளதால் கூடுதலான சலவையையும் பளிச்சிடும் வெண்மையையும் கொடுத்து உங்கள் பணத்திற்கு ஏற்ற உயர்தர மதிப்பையும் கொடுக்கிறது.

MCA TDB 58/TAM




**சிக்கனமான சலவை**
**பளிச்சிடும் வெண்மை**

MSIL
மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு


ஐயோ பாவம்! மறுபடியும் தலைவர் எதுக்கு உண்ணாவிரதம் இருக்காரு?
சும்மாவா? நாகாலாந்துல காங்கிரஸ் ஆட்சி கவிழ்ந்துடுச்சே... அதுக்காகத்தான்!
ஆறு மணி நேர உண்ணாவிரதம்
हे राम


கத்தரிக்கோலைத் தீட்டியிருக்கேன்... வன்முறை உதவாது... ஆபாசம் கூடாது...
ஷெனாய்
உபேந்திரா
ஐயய்யோ! ஆபாச வசனம்... வன்முறைக் காட்சி!
பத்திரிகைகள்


இந்தா, எல்லாத்திலேயும் முட்டைதான் வாங்கியிருக்கே!
0/100
1. அமைதிப் படை — கட்டுரை வரைக
2. 'ரா' சிறுகுறிப்பு தருக!
3. போராளிகளுடன் பேச்சு வார்த்தை — விளக்குக.




# கல்கி

1990 மே 27
மலர் : 48 இதழ் : 43
பிரமோதூத வைகாசி : 13




## வில்லனாக மாறிய பல்லவன்

மருத்துவத்துறை, மின் விநியோகம், உணவு விநியோகம் போன்று பஸ் போக்குவரத்தும் மக்களின் அன்றாட வாழ்வுடன் தொடர்பு கொண்ட இன்றியமையாத ஓர் அம்சம். அதில் தடங்கல் ஏற்பட்டால் மக்களுக்குச் சொல்லமுடியாத் துன்பம் உண்டாகும். அத்தகைய கஷ்டத்தை மே 14 மாலை சென்னை வாசிகள் நன்றாகவே அனுபவித்தார்கள். பல்லவன் போக்குவரத்துக் கழக டிரைவர்கள் — கண்டக்டர்கள் திடீர் வேலை நிறுத்தம் செய்யப் போக, பாவம், ஆட்டோவுக்குப் பத்தும் இருபதுமாக அழுது வீடு திரும்பினார்கள் பலர். கால் கடுக்க நடந்து போனார்கள் பலர். ரயிலையும் விமானத்தையும் தவற விட்டார்கள் பலர். இன்னும் டாக்டரை அவசரத்துக்கு அழைக்க முடியாமல் தோற்று வேதனைப்பட்டார்கள் பலர். காரணம், பஸ் ஊழியர்களின் திடீர் வேலை நிறுத்தம், பஸ் ஓடுவதை மட்டும் நிறுத்த வில்லை; சாலைப் போக்கு வரத்தையே ஸ்தம்பிக்கச் செய்து விட்டது. அப்படி பஸ்களைத் தாறுமாறாக நிறுத்திச் சாலைகளை அடைத்து விட்டார்கள்! இவ்வாறு பொது மக்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டு, அவர்கள் சாபத்தையும் சம்பாதித்துக் கொள்ளும்படியாக அப்படி என்ன பெரிய விஷயம் நடந்து விட்டது?

பல்லவனைச் சேர்ந்த ஊழியர்கள் பலர், புறநகர்ப் பகுதிகளிலிருந்து, மற்ற போக்குவரத்துக் கழக பஸ்களில் அன்றாடம் சென்னை வந்து சேர்கிறார்கள். இலவசமாக வருகிறார்கள். 'இவர்கள் தங்கள் கையில் பாஸ் வைத்துக் கொள்ள வேண்டும், அல்லது டிக்கெட் வாங்க வேண்டும்' என்று பல்லவன் அதிகாரிகள் ஒரு சுற்றறிக்கை அனுப்பி விட்டார்களாம். இது கூட உத்தரவு அல்ல; ஒரு கோரிக்கையை உள்ளடக்கிய சுற்றறிக்கை, அவ்வளவே. இதற்குத்தான் திடீர் ஸ்ட்ரைக் பண்ணி, பல்லாயிரக் கணக்கான மக்களைப் பாடாய்ப்படுத்தி விட்டார்கள்!

'பாஸும் இல்லாமல் டிக்கெட்டும் இல்லாமல்தான் பயணம் செய்வோம்; யாரும் கண்டு கொள்ளக் கூடாது, தட்டிக் கேட்கக் கூடாது' என்று பல்லவன் ஊழியர்கள் அடம்பிடிப்பது முறையேயல்ல என்பது ஒரு புறமிருக்க, 'இத்தனை நாளாக இல்லாமல் இன்று திடுதிப்பென்று இப்படி ஒரு சுற்றறிக்கை அனுப்புகிறோமே, இதன் பின் விளைவு என்னவாக இருக்கும்?' என்று பல்லவன் அதிகாரிகள் சிந்தித்து இருக்க வேண்டாமா? 'இது உணர்ச்சிகளைத் தூண்டிவிடக் கூடிய, தவறாகப் புரிந்து கொள்ள இடமளிக்கக் கூடிய சுற்றறிக்கையாயிற்றே' என்று நிதானித்து யோசித்திருக்க வேண்டாமா? பல்லவன் யூனியன் தலைவர்களுடன் கலந்தாலோசித்து, ஊழியர்களுக்கான ஒரு கூட்டம் நடத்தி, விஷயத்தை விளக்கி, மாற்றுக் கருத்துக்கள் இருப்பின் அவற்றையும் கேட்டறிந்து கொண்டு, பிறகு அதற்கேற்பச் சுற்றறிக்கை தயாரித்து அனுப்பியிருந்தால் இந்த விபரீதம் நேர்ந்திருக்குமா?

இந்தச் சம்பவத்தினால் யூனியன் தலைவர்களும் நமது மதிப்பிலே தாழ்ந்து போகிறார்கள். ஊழியர்கள் இம்மாதிரி திடீர் வேலை நிறுத்தம் செய்வதை உங்களால் தடுக்க முடியாது என்றால், அதற்குத் துணைபோகத்தான் வேண்டும் என்றால் எத்தகைய தலைவர்கள் நீங்கள்? ஊழியர்களின் உரிமைகளைப் பெற்றுத் தருவது மட்டும்தான் உங்கள் வேலை என்று எண்ணாதீர்கள். அடிக்கடி ஊழியர்களைச் சந்தித்துப் பேசி, கடமைகளை உணர்த்தும் பொறுப்பும் உங்களுக்கு உண்டு.

போராடுவதில் தவறில்லை; ஆனால் அதற்கு உரிய முறைகள் இருக்கின்றன. முதலில் கோரிக்கை, பிறகு எச்சரிக்கை, அப்புறம் முன்னறிவிப்புடன் கூடிய வேலை நிறுத்தம்; அதிலும் ஓர் ஒழுங்குமுறை — எல்லாம் இருக்க வேண்டும்.

பல்லவன் ஊழியர்கள் வில்லன்களாக விளங்கி, பிளாக்மெய்ல் செய்வது போல் நடந்து கொண்டு மக்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொள்ளக் கூடாது. ஹீரோக்களாக, கடமை வீரர்களாகப் பணியாற்றி, மக்களின் பாராட்டையும் நன்றியையும் சம்பாதிக்க வேண்டும். சம்பளத்தைவிட இந்தச் சன்மானமே முக்கியமானது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# கான்கிரீட் காடுகளிடையே தோட்டத் தீவுகள்

**அ**க்னி நட்சத்திர வெயில் உக்கிரமாகக் காய்ந்து கொண்டிருந்தது. சென்னை லஸ் கார்னர் நாற்சந்தியில் சின்னதும் பெரிசுமான வாகனங்கள் புகையும் புழுதியும் கிளப்பியபடி விரைந்தன. இவற்றுக்கு மத்தியில், வாகனங்கள் சுற்றிக் கொண்டு செல்லும் டிராஃபிக் ஐலண்டில் நின்றபடி சில வேலையாட்களிடம் மும்முரமாகப் பேசிக் கொண்டிருந்தார் அந்தப் பெண்மணி – மஞ்சுளா ராவ்.

அந்த டிராஃபிக் ஐலண்டை இந்தியன் வங்கி தத்து எடுத்துக் கொண்டு, அதனை வடிவமைக்கும் பொறுப்பை மஞ்சுளா ராவுக்குத் தந்திருந்தது.

''இத்தனை போக்குவரத்துக்கு இடையே உள்ள இந்தச் சிறிய தீவில் என்ன செய்வீர்கள்...?''

''எத்தனை சிறிய இடமானால் என்ன? அதனை அழகுபடுத்தி விடலாம்....... இங்கே மையத்தில் இந்தியன் வங்கியின் சின்னம் அமைக்கப்படும். ஷஹாபாத் கற்களையும் டைல்களையும் கொண்டு சின்னத்தை அமைப்போம். நடுவில் ஒரு சின்ன பொங்கு புனல் இருக்கும். மையத்திலிருந்து தண்ணீர் பொங்கி, மூன்று பக்கங்களில் சலசலத்து ஓடி சின்னஞ்சிறு முக்கோண வடிவக் குளங்களை அமைக்கும். இடை இடையே பச்சைப் பசேல் என்று குட்டைச் செடிகள் வங்கியின் சின்னத்தை மறைக்காத உயரத்தில் இருக்கும். இந்தச் சிவப்பு, பச்சை வண்ணச் சேர்க்கையுடன் கூடிய வடிவமைப்பைச் சுற்றிலும் பொடிப் பொடியான, மின்னும் வெள்ளை நிறக் கற்களை (mosoic chips) பதித்து விடுவோம். வெள்ளை வட்டத்தைச் சுற்றி மீண்டும் விதவிதமான பச்சை வண்ணங்களில் செடிகள். இந்த அலங்காரத் தீவுக்கு 'டைல்'களால் கரை கட்டி, சுற்றிலும் அழகான டிசைனில் இரும்புக் கம்பி வேலியும் அமைத்து விடுவோம்...''

''உங்கள் வர்ணனையைக் கேட்கவே ரம்யமாகத்தான் இருக்கிறது... ஆனால் குடி தண்ணீருக்கே பஞ்சமாக உள்ள இந்தக் காலத்தில் இத்தகைய அலங்கார, ஆடம்பரங்களுக்கெல்லாம் தண்ணீர்?''

''சுற்றிலும் வறட்சியும் வெயிலும் அதிகமாக இருக்கும் போது இதைப் போன்ற பசுமையான இடங்கள்தான் கண்ணையும் மனசையும் குளிர்விக்கும் இல்லையா...? மேலும் இந்த பொங்கு புனலில் உபயோகிக்கப்படும் தண்ணீர் வீணாக ஓடுவதில்லை.



* மஞ்சுளா ராவ்

இந்த traffic island இன் அடியில் ஒரு தண்ணீர்த் தொட்டி அமைத்திருக்கிறோம். ஒரு பம்ப் ஸெட்டை வைத்து ஃபவுன்டனை இயக்குவோம். அதே தண்ணீர்தான் மீண்டும் மீண்டும் நிலத்தடித் தொட்டிக்குள் சென்று வெளிப்படும். அது மட்டுமல்ல, நடும் செடிகளுக்குக் கூட அதிகம் தண்ணீரோ பராமரிப்போ தேவைப்படாது... அத்தகைய செடிகளைத்தான் தேர்ந்தெடுப்போம்...''

''இதற்கென்று நீங்கள் விசேஷப் பயிற்சி பெற்றிருக்கிறீர்களா?''

''ஆமாம், தோட்டக் கலை இயல் மற்றும் மலர்ப் பயிர் இயல் (Horticulture and Floriculture) ஆகியவற்றை அயல்நாடுகளில் கற்றேன். என் கணவர் ஒரு இஞ்ஜினியர். நான் தோட்டங்களை அலங்கரிக்க திட்டம் தீட்டினால் அதனைச் செயல்படுத்துவதற்கு அவர் உதவுவார்'' என்று கூறிய மஞ்சுளா ராவ் தமது கணவரை அறிமுகப்படுத்தி வைத்தார்.

**F**oliage and Flowers என்ற பெயர் கொண்ட தமது அலுவலகத்துக்கு அழைத்துச் சென்று மேலும் விவரங்கள் கூறினார் மஞ்சுளா.

''லஸ் கார்னர் டிராஃபிக் ஐலண்டுக்கு இரண்டு டிசைன்கள் தீட்டினேன். அவற்றுள் ஒன்றை இந்தியன் வங்கி தேர்ந்தெடுத்தது. அதை அட்டையில் மாடலாகச் செய்து காட்டி அவர்களுடைய ஒப்புதல் பெற்றேன். பிறகு அந்த டிசைனைப் பெரிய துணியில் வரைந்து லஸ் கார்னருக்கு அதை எடுத்துச் சென்று, மண் திட்டில் டிரேஸ் செய்து, வேலைகளைத் துவங்கினேன்... பல்வேறு நிறுவனங்களுக்காகச் சென்னை நகரில் இருபத்தைந்து டிராஃபிக் ஐலண்டுகளைச் சிறிய அலங்காரத் தோட்டங்களாக வடிவமைத்துள்ளேன். சென்னை நகரமே அழகான பூங்காவாக விளங்க வேண்டும் என்பது என் ஆசை.''

''இது சாத்தியம் என்று நினைக்கிறீர்களா?''

''நிச்சயமாக! பெரிய நிறுவனங்கள் எல்லாம் interior decorator களை அழைத்து ஏராளமான பொருள் செலவில் தங்கள் அலுவலகங்களின் உட்புறங்களை அலங்கரிக்கிறார்கள். அதே போல் அலுவலகத்தின் வெளிப்புறத்திலும் இருக்கிற சிறிய இடத்தை அழகுபடுத்துவது இப்போது ஃபாஷன் ஆகி வருகிறது. கான்க்ரீட் காடுகளிடையே பசுமையான தோட்டத் தீவுகள் தென்பட்டுக் கண்களைக் குளிர்விக்கின்றன...''

''தோட்டம் போட்டுப் பராமரிப்பது ஒன்றும் புதிதில்லையே...?''

''சாதாரண தோட்டத்திலிருந்து மாறுபட்ட அலங்காரத் தோட்டம் இது. வெறுமே



* தோட்டத் தீவு தயாராகிறது...

பூஞ்செடிகள், புல்தரை, மேலும் இடமிருந்தால் ஓரிரு மரங்கள் என்று சம்பிரதாயமாக அமைக்காமல், தோட்டத்தின் ஒரு பக்கத்தில் சரிவான புல் தரை, மற்றோர் இடத்தில் சிறு பாறைகளால் ஆன மேடான குன்று, அதிலிருந்து சலசலத்து வரும் சிற்றோடை, அது ஒரு வளைவைக் கடக்கும் இடத்தில் சிறு நாணல் புதர், வேறொரு பக்கத்தில் அழகான கள்ளிச் செடி, கூழாங்கற்களின் குவியலுக்கு இடையே ஒரு தம்பு நடப்பட்டு அதில் படரும் கொடி... என்று கற்பனையைக் கொஞ்சம் ஓட விட்டு அமைப்போம். இதைத்தான் landscaping என்று குறிப்பிடுவது... இயற்கையாய்க் காணும் காட்சிகளையெல்லாம் செயற்கையாய்ச் சிறிய இடத்தில் மினி அளவில் தோற்றுவிக்க முயல்கிறோம். இயற்கையின் கம்பீரம் முழுவதையும் ஒரு தோட்டத்துக்குள் கொண்டு வந்து விட முடியாது என்றாலும் ரம்மியமான சூழலை உருவாக்க முடியும்...''

''இந்தத் துறையில் உங்களுக்கு எப்படி ஆர்வம் ஏற்பட்டது...?''

''எனக்குச் சின்ன வயசிலேயே கல்யாணம் ஆகி விட்டது. ஆரம்பத்தில் சராசரி இல்லத்தரசியாகத்தான் இருந்தேன். என் மாமனார் தோட்டக் கலையில் ஆர்வம் உள்ளவர். அவர் ஆர்வம் என்னிடம் தொற்றிக் கொண்டது. பிறகு, கணவர் வேலை விஷயமாக அயல்நாடு சென்ற போது அவருடன் சென்று ஹாலண்டிலும் பிறகு ஃப்ளாரிடாவிலும் இக் கலையை முறைப்படி பயின்றேன். சென்னை திரும்பி, செடிகள் விற்கும் நர்ஸரி ஆரம்பித்தேன்; பெரிய நிறுவனங்களுக்கு அலங்காரப் பூங்கொத்துக்கள் அமைத்துக் கொடுக்கும் வேலையைச் செய்தேன். எம். ஆர். எல். நிறுவனத்துக்கு பூந்தொட்டிகளால் ஆன partition (தடுப்புச் சுவர்)களை அமைத்துக் கொடுத்தேன். நிறுவனத் தலைவர் திரு. தீனதயாளுவுக்கு இந்த நூதன யோசனை ரொம்பப் பிடித்துப் போய் விட்டது. அதற்குப் பிறகு அந் நிறு

**மஞ்சுளா ராவ் கூறுகிறார்:**



# வீட்டுத் தோட்டத்திடம் அன்பைக் காட்டுங்கள்!

● கள்ளிச் செடிகள், கனமான இலைகளை உடைய சில வகைச் செடிகள், நிழலில் தழைக்கும் ரப்பர் செடி, தென்னம் பிள்ளை போன்ற தோற்றமுடைய செடிகள் (palms) ஆகியவற்றுக்கு அதிகம் தண்ணீர் தேவையில்லை. இவை பசுமையாக இருப்பதோடு அலங்காரத் தோற்றத்தையும் அளிக்கும். தொட்டிகளில் கலப்பமாக வளர்க்கலாம்.

● ஆறு அங்குல உயரத் தொட்டிகளின் அடியில் இரண்டு அங்குல உயரம்வரை உடைந்த மண் தொட்டிச் சில்லுகளைப் போட்டு, அதன் மேல் செம்மண் — நாட்டு எரு கலவையைப் போட வேண்டும். இப்படித் தயாரித்த தொட்டியில் செடிகளை நட்டால் நன்றாக வளரும்.

● செம்பருத்தி, பூகன்வில்லா, அரளி, நித்ய மல்லி போன்ற பூஞ்செடிகள் கலபமாக வளர்க்கக் கூடியவை.

● புல் தரை (lawn) உருவாக்க விரும்புவோருக்கு... 'கொரியன் கிராஸ்' என்ற வகைப் புல் மெதுவாக வளரும் — ஆனால் பச்சைக் கம்பளம் மாதிரி அடர்த்தியாகப் பரவி, மிக அழகாகக் காட்சியளிக்கும். இந்தப் புல் தரையில் அந்நிய புல் பூண்டு அதிகம் வளராது — பராமரிப்பது கலபம். புல்தரை நன்றாக வளர நல்ல வெயில் வேண்டும்.

● வேலையாட்களைக் கொண்டு செடிகளையோ தோட்டத்தையோ பராமரிப்பதைக் காட்டிலும் நாமே நமது செடிகளைப் பராமரிப்பது நிச்சயம் அதிகப் பலன் தரும். அன்பான கவனிப்பு செடிகளுக்கு நல்ல டானிக். ஒரு சிறு தோட்டத்தில் தினமும் அரை மணி நேரம், விடுமுறை நாட்களில் இரண்டு மணி நேரம் — செலவிட்டால் செடிகள் செழிக்கும். உடலுக்குப் பயிற்சி, மனசுக்கு இதம்.

● பத்து நாட்களுக்கு ஒரு முறை கொத்திவிட்டு, புல் பூண்டுகளை நீக்க வேண்டும். இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை பூச்சி கொல்லி மருந்து ஸ்ப்ரே செய்ய வேண்டும். இருபது நாட்களுக்கு ஒரு முறை எருவிடலாம்.

● யூரியா, கடலை, வேப்பம் புண்ணாக்கு தவிர 'மிராகுலான்' போன்ற டானிக்குகளும் குதிரை சாணம், வெங்காயத் தோல் போன்றவையும் செடிகளைச் செழித்து வளரச் செய்யும். கடைகளில் ரெடிமேட் ஆகக் கிடைக்கும் NPK கலவையையும் பயன்படுத்தலாம்.

● எறும்புகளை ஒழிக்க கமாக்ஸின் பவுடரும், பூச்சி, பூஞ்சாளனை ஒழிக்க முறையே ரோகார், பென்கார்ட் மருந்துகளும் பயன்படுத்தலாம்.

---

வனத்தின் தோட்டக்கலை ஆலோசகராக என்னை நியமித்தார்கள். எம். ஆர். எல். லின் புதிய ஆராய்ச்சிக் கூட வளாகத்தில் landscaping செய்யும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இதே சமயத்தில் என் கணவருக்கு அஹமதாபாதுக்கு வேலை மாற்றலாகி விட்டது! என் மகன்கள் ஹாஸ்டலில் தங்கி, படித்துக் கொண்டிருந்தனர். கணவரை ஊருக்கு அனுப்பி விட்டு நானும் இங்கு ஹாஸ்டலில் தங்கி எம். ஆர். எல். வேலையைச் செய்ய ஆரம்பித்தேன். இந்த காண்ட்ராக்ட்தான் என் பணி வாழ்க்கையில் திருப்புமுனையாக அமைந்தது. இறுதிக் கட்ட வேலைகளை அவசரமாகப் பதினைந்தே நாட்களில் முடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. வேலையாட்களுக்கு இரு மடங்கு கூலி கொடுத்து, மத்திய அமைச்சர் வருகைக்கு முன் பணியை முடித்துக் கொடுத்தேன். தீனதயாளு அளித்த ஊக்கம் எனக்குப் பக்கபலமாக இருந்தது. இந்த காண்ட்ராக்ட் முடிந்த பிறகு வேறு பல வாய்ப்புக்கள் என்னைத் தேடி வந்துள்ளன...''

'கற்பனைக்கும் அழகுணர்ச்சிக்கும் வடிகாலாக அமைந்து, விதவிதமான செடி கொடிகளுடன் உறவாடும் வாய்ப்பைத் தந்து, நல்ல வருமானத்தையும் பெற்றுத் தரும் landscaping தொழிலில் கை தேர்ந்து விளங்கும் மஞ்சுளா ராவ் கொடுத்து வைத்தவர்தான்' என்ற எண்ணம் மனத்தில் எழ, அதை அவரிடம் தெரியப்படுத்தினோம்.

''நீங்கள் நினைப்பதில் பாதிதான் சரி...'' என்றார் மஞ்சுளா.

''ஒவ்வொரு வேலையையும் செய்து முடிக்கும் போது ஓர் அலாதியான மன நிறைவு கிடைப்பது உண்மைதான். என் மூத்த மகனைத் திடீரென்று இழந்த சோகத்தை இத் தொழில் செய்துதான் கரைத்து வருகிறேன்... ஆனால் செடி கொடி

களுடன் உறவாடுவதற்கும் அப்பால் பல கடினமான வேலைகளை நான் செய்தாக வேண்டும். ஒவ்வொரு தோட்டத்துக்கும் தேவையான பொருட்களை வாங்கி, சரியான நேரத்துக்குள் அவை வந்து சேர்ந்ததா என்று கவனித்து, பணியாட்களை நிர்வகித்து, வேலை வாங்கி, காலக் கெடுவுக்குள் வேலையை முடித்துக் காட்ட வேண்டும்; பட்ஜெட் வகுக்கும் எல்லைகளையும் தாண்டக் கூடாது! சில சமயம் இரவு பகல் பாராமல் வேலை செய்ய வேண்டி வரும். குறிப்பாகச் சாலை மத்தியில் இருக்கும் **traffic island** களைத் தோண்டி, கொத்தி, சீர்செய்யும் வேலைகளை இரவில் போக்குவரத்து அதிகம் இல்லாதபோது தான் செய்ய முடியும். வெயில், மழை என்று பார்க்காமல் தினந்தோறும் திறந்த வெளியில் மணிக்கணக்கில் நிற்க வேண்டும்.

''இவ்வளவு கஷ்டப்பட்டு வேலையை முடித்த பிறகு 'அவள் பெண் என்பதால் தான் இந்த காண்ட்ராக்ட் அவளுக்குக் கிடைத்திருக்கிறது' என்ற ஏளனத்தை வேறு சகித்துக் கொள்ள வேண்டும்! போட்டியும் பொறாமையும் இந்தத் துறையிலும் உண்டு. எல்லாவற்றையும் நேர்மையின் துணையுடன் சந்தித்துப் போராட வேண்டும். இதற்குத் தேவைப்படுவது மனோதிடம். அதுதான் முக்கியம்!'' என்றார் மஞ்சுளா ராவ், புன்னகையுடன்.

**— சீதா ரவி.**

அட்டை வண்ணப்படம் மற்றும் படங்கள்: **ரமணன்.**



# ஆயிரம் பூக்கள் மலர...

ஆயிரம் விளக்குகள் எரிய
ஒரு தீக்குச்சி
போதும்.

ஆயிரம் பூக்கள் மலர
ஒரு விதை
போதும்.

தியாகத்தின்
முடிவில்தான்
திசைகளே தெரிகின்றன.

கடமையில்..

தீக்குச்சியாய்
தன்னை
எரித்துக் கொண்டால்
விதையாய்த்
தன்னைப்
புதைத்துக் கொண்டால்
ஓர் ஆசிரியர் போதும்
ஒவ்வொரு பள்ளியிலும்
ஆயிரம் மாணவர்கள்
பிரகாசிப்பார்கள்.

**— ஆரூர் சேகர்**



20

# மணல்வெளி மான்கள்

**ப**ம்ப் பிழியப் பிழிய வேலை வாங்கி விட்டது. கௌதமை மட்டுமல்ல. கிணற்றுக் காரனையும் சேர்த்து. அவன் பக்கத்து வீட்டுக்காரனிடம் கடன் வாங்கி வந்திருந்த பைப், பொருந்து வாயில் நூலிழை அளவுக்குச் சிறியது.

துணிக்கந்தல் சுற்றி, லெதர் வாஷர் மாட்டி, 'இப்போ போடு' என்றால் கிணற்றுக்காரன் படிக்கட்டு ஏறி மோட்டாருக்கு ஓடுவான். மோட்டார் போட்டதும் பொருந்துவாயில் தண்ணீர் பீய்ச்சியடிக்கும். மறுபடி போராட்டம். மறுபடி மோட்டார் போடு. ஏழெட்டு ஓட்டம். கிணற்றுக்கும் மோட்டாருக்கும்.

ஒருவழியாகப் பொருந்துவாய், இணைக்கும் பைப்பில் உட்கார்ந்து, தண்ணீர் தேசிங்கு ராஜா அடக்கிய குதிரை மாதிரி நிலைப்பட்ட போது, அந்தி இருளின் முதல் படலம் கிணற்றில் படர்ந்தது.

''ரொம்ப நன்றி தம்பி!'' கிணற்றுக்காரன் குரல் நெகிழ்ந்தது.

மோட்டாரின் உறுமலை மீறி, கிணற்றின் மேலே தண்ணீர் பைப் கொப்புளித்துப் பாய்வது கேட்டது.

பயிர் நனைந்திருக்கும். முதலில் வந்தது அந்த எண்ணம்தான். ஒரு வெளியிட முடியாத நன்றி வயல் வயலாய்ப் பரவியிருக்கும்; பயிர்க் கால்களின் புல்லரிப்பில் சின்னச் சின்னக் குமிழிகளாய்க் கோர்த்து நிற்கும்.

என்ன நிம்மதி அது! தாகத்தில் பயிர் கருகும் போது உயிர்த் தண்ணீர் பாய ஒரு துரும்பு கிள்ளிப் போட்ட ஒத்தாசைதான். எனினும் என்ன நிம்மதி!

அதை அனுபவிக்கவே அவனுக்கு அந்தக் கிணற்றில் டைவ் அடித்துக் குளிக்கத் தோன்றியது.

''நான் குளிச்சுடறேனே!''

''தாராளமா குளியேன். தோ நீ குளிச்சிட்டே இரு. வூட்டுக்குப் போயி சோப்பும் டவலும் எடுத்தாரேன்'' என்று படியேறப் போனான் கிணற்றுக்காரன்.

ஆடைகளை அவிழ்த்து விட்டு ஜட்டி

யோடு நின்ற கௌதம் குறுக்கிட்டான்.

''சோப்பு டவலு ஒண்ணும் வேணாம்.''

கிணற்றுக்காரனுக்கு நன்றிப் பெருக்கு.

''அஞ்சு நிமிசம் தம்பீ!''

அவன் தலை மறைந்து விட்டது. கௌத முக்கு அடுத்தவர் சோப்போ துண்டோ பிடிக்காது. பனியனை நாலு தப்பு தப்பி அலசி முறுக்கிப் பிரிந்து விட்டு அதிலேயே துவட்டிக் கொள்ளலாம்.

போனவன் வரட்டும். சமாதானம் சொல்லலாம். சோப் டவல் உபயோகிக்காததற்கு.

கௌதம் தாவி ஒரு டைவ் அடித்தான். ஜிலீரென்று தண்ணீர் முகத்தில் அறைந்தது. வயிற்றைத் தழுவியது. அடியாழம் வரை போய்ச் சிலுப்பித் திரும்பினான்.

கிணற்றின் ஒரு கரை தொட்டு மறு கரை முட்டி வீசிப் போட்ட கைகளை ஓய விட்டு நிதானமாக மிதந்தான். அவனே ஏற்படுத்திய அலைகள் முதுகையும் கால்களையும் ஏந்தி ஏந்திக் கீழே புரண்டன.

மனம் ஒரு நிர்ச்சலனத்தில் சில விநாடி நின்றது. அப்படிச் சில விநாடி தான் லயிக்கிறது. தண்ணீரோடு தண்ணீராய், காற்றோடு காற்றாய் அணுவோடு அணுவாய். சில விநாடி. போதும். இந்த வயசுக்கு இந்த வேளைக்கு. இந்தத் தொழிலுக்கு.

ரஞ்சிதம். துளசிங்கம். மாசிலா. ஆதி. மங்கலட்சுமி. நித்யா. பிலோமினா. சவுந்தரம்மாள்.

மல்லாந்து மிதந்த அவன் பார்வையில் தெரிந்தது அந்தி நேர வானம். அதன் வெளிச்சப் புள்ளிகள் போல் அந்தப் பெயர்கள் தூரப் புள்ளிகளாய்த் தோன்றின.

இந்தக் கணம் அந்தப் புள்ளிகளோடு தனக்குள்ள தொடர்பு வெறும் பழக்க வாசனை போல் தோன்றுகிறது.

தண்ணீர். அதற்குத் தவிக்கும் மண். இது தான் அறுக்க முடியாத ஜீவத் தொடர்பு. ஆழத்திலிருந்து அதை ஒரு நெருக்கத்திற்குக் கொண்டு வருவதில் — ஒரு துளி சம்பந்தமாவது தனக்கிருப்பதில் — வாழ்ந்து கொண்டிருக்கிற நிறைவு வருகிறது.

கௌதம் மிதந்து கொண்டிருக்கும்போதே கிணற்றுக்காரன் வந்து விட்டான். கையில் உறை பிரிக்காத சோப்பு. ஸீல் போகாத புது டவல்.

''புதுசா வாங்கினா வந்தே?''

''புதுசா வாங்கியாரலை. எங்கக்கா பொண்ணு குளிகுளிச்சதுக்கு சம்பந்தி வீட்டிலே வரிசை வச்சிருந்தாங்க. எடுக்கவே இல்லே.''

கௌதம் விட்டுக் கொடுத்தான். கரையேறி உறை பிரித்து சோப் தேய்த்தான்.

''தம்பீ பக்கத்து வூட்டுக்காரு யார் தெரியுமில்லே?''

''தெரியாதே!''

''மகமாயி கோவிலுக்குத் தர்மகர்த்தா.''



''ஓஹோ!'' கௌதம் முதுகுக்குப் பின்னால் கை நீட்டிச் சோப்பு தேய்த்தான்.

மகமாயி கோவில் — விட்டலாபுரத்திற்கு தெற்கே பூந்துறை ஸ்டேஷன் அருகில்...

''அங்கே கெணறு வெட்டியிருக்காரு.''

கௌதம் குனிந்து கால்களைத் தேய்த்தவாறே கேட்டான்.

''கேள்விப்பட்டேன். நெறய ஜனப் போக்குவரத்து வந்துடுச்சாமே?''

''அதான். அங்கே ஒரு பம்பு ஷெட் போட்டுடணும்னுதான் பைப் கொழா, வயலு மோட்டாரு எல்லாம் வாங்கி வச்சிருக்காரு. எவனோ எலக்ட்ரிஷியன் எலக்ட்ரிக் சாமான் கடையிலே கமிஷனை வாங்கிட்டு தோ போட்டுத் தர்றேன்னுட்டுக் கம்பி நீட்டிட்டானாம்.''

கௌதம் டைவ் அடித்துக் கிணற்றில் பாய்ந்தான். கிணற்றுக்காரன் படி மீது உட்கார்ந்து அவன் நீந்தித் திரும்புவதை வேடிக்கை பார்த்தான்.

''நீ வந்து முடிச்சுக் குடுக்க முடியுமான்னு கேட்கச் சொன்னாரு.''

மீண்டும் தண்ணீரைத் தரையேறவைக்கும் பணித் தொடர்பு.

''ஓர்த்தர் தொட்ட வேலையை நாம பூர்த்தி பண்றது நல்லாயில்லியே.''

''அவன்தான் கமிஷனுக்கு வந்தவனாச்சே. ஓடிட்டான். திரும்பியே வர மாட்டான்.''

''எப்ப வேலையை ஆரம்பிக்கணுமாம்?''

''உன் சௌகரியம். நாளைக்கே ஆரம்பிச்சுக்கலாம்.''

''கெணத்தைப் பாத்துட்டுச் சொல்றேன்!''

''இப்பவே போய்ப் பார்க்கலாமே. நானும் வரவா?''

''நீ வேணாம். நாளைக்கு பதில் சொல்றேன்னு சொல்லு. நான் போய்ப் பாத்துக்கறேன்.''

பூந்துறை ஸ்டேஷனிலிருந்து புல் மேட்டுக்குப் போகும் சாலையில்தான் மகமாயி கோயில். அன்னவாசலிலிருந்து பத்து நிமிஷம் சைக்கிள் மிதித்தால் போதும். இப்போதே கூடப் பார்த்து விட்டு வரலாம். கிணற்றுக்காரனிடம் விடைபெற்றுக் கொண்டு அவன் சைக்கிள் எடுத்தான்.

பூந்துறை ஸ்டேஷனுக்குப் பிரிந்த பாதை முனையில் இறங்கி ஒரு டீக்கடையில் கௌதம் டீ குடித்தான். ட்யூப் விளக்கொளியில் கடையில் உட்கார்ந்திருந்த முகங்கள் அவனை வெறித்துப் பார்த்தன. பரிச்சய முகங்கள்தான். அன்னவாசல்... விட்டலாபுரம் முகங்கள். ஆனால் பார்வையில் வித்தியாசம் தெரிந்தது. எல்லாம் இளவயசுக்காரர்கள். இந்த வயசுக்கு இந்த விரோதம் பொருந்தவில்லை.

டீ குடித்துக் கொண்டே காரணம் தேடினான்.

இவர்களையெல்லாம் நான் என்னையறியாமல் எங்கோ இடிக்கிறேன். எங்கே? ஆதி விவகாரமா? நித்யாவோ? இருக்கலாம். அன்னவாசலிலும் விட்டலாபுரத்திலும் எல்லோருக்கும் இல்லையென்றாலும் இளைஞர்களுக்கு அவன் மீது ஒரு பொறாமை உண்டு. அதைக் கௌதம் உணர்ந்திருக்கிறான்.

நித்யா அவர்களின் தோல்வி.

டீ குடித்த கிளாஸை நீட்டி, கௌதம் சில்லறை கொடுக்கும்போது ஒருவன் குரல் கொடுத்தான்.

''எங்கே ஸார் இவ்வளவு தொலவு?''

''மகமாயி கோயில் வரிக்கும்.''

''இன்னா ரிப்பேரா?''

கேட்டவன் குரலில் கிண்டல்.

''வந்து சொல்றேன்.''

மேலும் தாமதிக்காமல் அவன் சைக்கிள் ஏறினான்.

ரயில்வே லைனை விட்டுச் சிலமீட்டர் தூரத்தில் ஒதுங்கி ஓடும் பாதை ஓரத்தில் மகமாயி கோயில். டாப் லைட் வெளிச்சத்தில் கிணறு தெளிவாய்த் தெரிந்தது. பெரிய கிணறுதான். துணையாள் வைத்து வேலை செய்தால் 'காண்ட்ராக்டை' முடிக்க மூன்று நாள் ஆகலாம்.

இப்போது நேரமில்லை. நாளை மறுநாள் வக்கீல் வரச் சொல்லியிருக்கிறார். ஆதி விவகாரம் முடியட்டும். அப்புறம்தான் இந்த வேலையை ஒப்புக் கொள்ள வேண்டும்.

கௌதம் சைக்கிளைத் திருப்பினான். ஏறுவதற்காகப் பெடலில் கால் வைத்த போது எதிரே சற்றுத் தொலைவில் சாலையை அடைத்துக் கொண்டு மூன்று சைக்கிள்கள் வருவது தெரிந்தது. மூன்றிலும் இரட்டை இரட்டையாய் ஆட்கள் டபிள்ஸ் உட்கார்ந்திருந்தார்கள்.

அவர்கள் கடந்து செல்லட்டும் என்று காத்திருந்தான். அவர்கள் கோயிலின் டாப் லைட் வெளிச்ச எல்லை முடிந்த புளியமரச் சாலையில் இறங்குவது தெரிந்தது.

இன்னும் நிலா வரவில்லை. முகம் தெரியாத இருட்டு.

இறங்கியவர்கள் அங்கேயே நின்றார்கள். யார் வருகையையோ எதிர்பார்ப்பது போல்.

ஏறுவதற்குக் காலை உயர்த்திய கௌதம் கீழே இறக்கினான். தூரத்தில் அவர்களுக்கு மகமாயி கோயிலின் டாப் லைட் வெளிச்சம் தெரியும். தான் சைக்கிளில் ஏற முனைந்து இறங்கியதும் தெரியும்.

அவனுக்காகவே அவர்கள் காத்திருப்பதாக உள்ளுணர்வில் பொறி தட்டியது.

யார் அவர்கள்? டீக் கடையில் பார்த்தவர்களா, இல்லை வேறு ஆட்களா? தெரியவில்லை.

வெளிச்சத்திற்கு வர விரும்பாதவர்கள். நிச்சயம் தான் அவர்களைக் கடந்துதான் போக வேண்டும் என்று தெரிந்துதான் நிற்கிறார்கள். துளசிங்கத்தின் ஆட்களா? ரஞ்சிதம் ரோஷமுற்று ஏவி விட்ட ஆட்களா?

யாரானால் என்ன... அவர்கள் உத்தேசம் எதுவானால் என்ன... நாம் சந்திக்கத்தான் வேண்டும்.

சைக்கிள் ஹாண்டில் பாரில் அவன் வைத்த கை உறுதியாயிற்று.

அடியாட்கள்தான். அது நிச்சயம். இவர்களுக்கு இருட்டில் பதுங்குகிற கோழைத்தனம் இருக்கும்போது நமக்கு இவர்களுக்கு மிரள்கிற கிலி வேண்டாம்.

அவன் பதறாத உறுதியோடு சைக்கிளில் ஏறி உட்கார்ந்தான். சக்கரம் புளிய மர இருளைத் தொடும் போது ''நில்லுடா!'' என்ற அதட்டல் கேட்டது.

அதற்குக் கட்டுப்பட வேண்டிய அவசியமில்லை. அவன் வேகத்தைச் சற்று கூட மிகுதிப்படுத்தாமல் ஒரே நிதானத்தில் மிதித்தான்.

எவனோ ஒருவன் சைக்கிள் ஏறி வேகமாக வளைத்து, கௌதம் சைக்கிளை மோதினான். சைக்கிள் சாய்ந்தது. தான் விழுந்து விடாமல் இடது காலை அவன் ஊன்றி நிற்கும் போது வலது தோள் மீது ஒரு வலுவான குத்து விழுந்தது.

கௌதம் சைக்கிள் பிடியை விடாமல் கீழே சாய்ந்தான். எதோ ஒரு கால் அவன் வலது காலை எட்டி உதைத்தது. சைக்கிள் அவன் கை விட்டு நழுவி கிணிங்கென்று விழுந்த வேகத்தில் ஒரு மணி ஒலித்துக் கொண்டே தரையில் விழுந்தது.

அப்புறம் அவன் மீது சரமாரியாக உதைகளும் குத்துக்களும் வெவ்வேறு திசையிலிருந்து விழுந்தன.

சிவுக்கென்று ஓர் ஆதி மனிதன், மிருக வெறியோடு அவனுள் கட்ட விழ்ந்து நிற்பதை கௌதம் உணர்ந்தான். கீழே விழுந்து நிற்கும் சைக்கிளை இரண்டு கையாலும் தூக்கி எவன் தலை மீதோ எறிகிற எண்ணம் கூட மேலெழுந்தது.

பற்களைக் கடித்துத் தன்னைச் சமாளித்தான். அப்படி ஒரு முயற்சி கூட இவர்கள் மிருகத்தனத்திற்கு மேலும் ஊக்கம் தந்து விடும்.

இவர்கள் ஆயுதம் எதுவும் கொண்டு வரவில்லை. இவர்கள் நோக்கம் கொலை முயற்சியல்ல. புரண்டு எழுந்து விழுந்து அங்கத்திற்கு அங்கம் இம்சையான வேதனையோடு அவர்கள் தாக்குதலை வாங்கிக் கொள்ளும் போதும் கௌதம் தன் கட்டுப்பாட்டை இழக்காமல் கவனித்தான்.

இவர்களை எதிர்த்து ஒரு தாக்குத் தாக்கினால் கூட கொலை வெறி இவர்களிடம் பரவி விடும்.

கௌதம் இந்தக் கூட்டத்தில் உயிருக்கு

அஞ்சவில்லை. எனினும் ஓர் அற்ப திருப்திக்காகத் தாக்கியவர்களைத் திருப்பித் தாக்கி விடுகிற 'தற்காலிக சாந்திக்காக இழக்க வேண்டிய பொருள் உயிர் அல்ல.

பார்க்கலாம். இவர்கள் வெறி எவ்வளவு நேரம் கழித்துத் தணிகிறது என்று; தன்னாலும் எவ்வளவு தாக்குப்பிடிக்க முடிகிறது என்று.

தலை மீது எவனோ உதைத்தது தானே சிதறி வானில் பறப்பது போல் ஒரு பிரமையளித்தது. அது பலமான தாக்குதல். காது ரீங்கரித்தது.

அந் நேரத்தில் தான் தொலைவில் ஹெட்லைட் வெளிச்சமும் வாகனம் ஒன்று வரும் ஓசையும் ஒன்றையொன்று தொடர்ந்தன.

''டேய் புல்மேட்டு பஸ்ஸுடா'' என்று எவனோ உரக்கக் கூவியது கேட்டது.

''சைக்கிள்ளே ஏறுங்கடா'' என்று பதற்றமான குரல் ஒன்று உத்தரவிட்டது.

ஒரே நிமிஷத்தில் மூன்று சைக்கிள்களும் பெடல் ஓசை கடகடக்க சாலையில் வேகமாகப் புறப்பட்டது கௌதமுக்குக் கேட்டது.

அவன் தடுமாறிக் கொண்டு எழுந்து நிற்க முயன்றான். தலை ஜெயண்ட் வீல் சவாரியில் சுழல்வது போல் சுழன்றது. கைகளும் கால்களும் பின்னி இழுத்தன. சாலை நடுவே அவன் சரிந்து விழுந்தான். அவனது சைக்கிள் ஓரமாக விழுந்திருப்பது பஸ்ஸின் ஹெட் லைட் வெளிச்சத்தில் தெளிவாய்ப் புலப்பட்டது.

புல்மேட்டு பஸ் ஹார்ன் ஒலி தூரத்தில் ஒருமுறை கேட்டதுமே கௌதம் நினைவிழந்தான்.

இடது புஜத்தில் சுருக்கென்று ஓர் ஊசி இறங்கியதும் கௌதமுக்கு நினைவு வந்தது. ஸிரிஞ்சை வெளியே இழுத்து நர்ஸ் ஸ்பிரிட் நனைத்த பஞ்சால் ஊசி நுழைந்த கையைத் தேய்த்துத் தேய்த்து விடும் போது அவன் எழுந்து உட்கார முயன்றான்.

''எழாதே கௌது! படு படு'' என்று குரல் கேட்டது. சவுந்தரம்மாள்.

ஒரு நிமிஷத்தில் நினைவு முழுவதும் சுதாரிப்புக்கு வந்தது.

படுத்திருப்பது விட்டலாபுரம் பிரைமரி ஹெல்த் சென்டர் ஆஸ்பத்திரி. எதிரில் டாக்டரும் பக்கத்தில் புல்மேட்டு டிரைவரும் நிற்பது தெரிந்தது.

சட்டென்று அவன் புரிந்து கொண்டான். அவன் சாலையில் விழுந்து கிடந்த போது வந்த புல்மேட்டு பஸ்ஸை கோணி ஊசிதான் ஓட்டி வந்திருக்கிறான்.

உடம்பில் அங்கங்கே ஜென்ஸன் வயலட் நீலம் நீலமாய்ப் பூசப்பட்டிருந்தது தெரிந்தது.

படுக்கையில் படுத்திருப்பது அவமானமாக இருந்தது. அவன் எழுந்து உட்கார முயற்சி செய்தான். கை கால்கள் பயங்கரமாக வலித்தன.

''படுத்துகினு இருன்னுதானே சொல்றோம். அதுக்குள்ளே இன்னா அவுசரம்!'' புல்மேட்டு டிரைவர் கண்டித்தான்.

உதட்டைக் கடித்துக் கொண்டு கௌதம் மீண்டும் படுக்கையில் சாய்ந்தான்.

டாக்டர் அவன் அருகே வந்து தோளை ஆறுதலாகத் தட்டிக் கொடுத்தார்.

''கம்ப்ளீட் ரெஸ்ட் தேவை! தட்ஸ் ஆல்.''

''அடி ரொம்பப்பட்டிருக்கா டாக்டர்?'' டிரைவர் டாக்டரை விசாரிப்பது கௌதம் காதில் விழுந்தது.

''வெளியே தெரியலே. உள் அடிதான் இருக்கணும். பி. பி. நார்மலா இருக்கு. எங்கியுமே ஸ்டிச்சஸ் போடலே.''

விழிப்பு வந்த சிறிது நேரத்திற்கெல்லாம் கண்ணைக் கிறக்கிக் கொண்டு ஒரு மயக்கம் வருவதை உணர்ந்தான் கௌதம். வலி உணராமல் இருக்க ஸெடடிவ் தரப்பட்டிருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருக்கும் போதே மீண்டும் அவன் நினைவிழந்தான்.

அதிகாலை ஐந்து மணிக்குச் சுத்தமாய் நினைவு வந்து விட்டது. விட்டலாபுரத்தின் பஞ்சாயத்து சங்கு ஒலிப்பதும், மசூதிகளின் பாங்கொலியும் ஒன்றைத் தொடர்ந்து ஒன்றாய்க் கேட்டன. களைப்பாக இருந்தது. வெளியே நெடுஞ்சாலையின் நித்திய சஞ்சாரம் தொடங்கி விட்டது.

அவனது மாணவன் ஹுஸேன்தான் முதலில் அவனைப் பார்க்க வந்தவன். அப்போது மணி ஆறு.

''என்ன ஹுஸேன்?''

''காப்பி ஸார்.'' அவன் ப்ளாஸ்கை எடுத்து வந்திருந்தான்.

''நான் இங்கே இருக்கேன்னு யார் சொன்னது?''

''இன்ஸ்பெக்டர்தான் ஸார்!''

''போலீஸ் இன்ஸ்பெக்டர் இருதயராஜா?''

''ஆமா ஸார்! அவர்தான் பிளாஸ்கிலே காப்பி வாங்கிட்டுப் போகச் சொன்னாரு.''

கௌதமுக்குள் இனம்தெரியாத ஒரு நெகிழ்வு புரண்டு கொடுத்தது.

அவன் கட்டிலிலிருந்து எழுந்து வாய் கொப்புளித்துக் கொண்டு வரப் போனான்.

(தொடரும்)

''என்னது உங்க கட்சி இரண்டு கோஷ்டியானா சந்தோஷப்படுவீங்களா?''

''ஆமாங்க. இப்ப கட்சி நாலு கோஷ்டியா இருக்கே!''

— மணியன் தர்மலிங்கம்.



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1990



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1500 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 750 |
| மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 375 வீதம் | ரூ | 750 |

ஆக மொத்தம் ரூ. 3000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 5 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.

"ஜயம் ஜயம்!''

''இதோ வரேன் மன்னி!''

வாய் பதில் சொல்லிற்றே தவிர உடம்பு சட்டென்று எழுந்திருக்கவில்லை.

''ஜயம், ஏண்டி, காதிலே விழல்லியா?'' ஜயம் எழுந்து கூடத்தைக் கடந்து இடப்புறம் இருந்த அறை வாசலில் நின்றாள். நிலைப் படியைக் குத்திட்டுப் பார்த்தபடி மன்னி படுத்திருந்தாள். கழுத்து ருத்திராட்ச மாலை சரிந்து நிலத்தில் பதிந்திருந்தது. நார் மடி முக்காடு விலகி வெள்ளைமயிர் பிரஷ்ஷின் முனை போல துருத்திக் கொண்டு நின்றது. ஜயத்தைக் கண்டதும்,

''பசி பிராணம் போறதுடி. எங்கே போயிட்டே?'' என்றாள் எரிச்சலுடன்.

''இங்கேதான் ரேழியிலே இருந்தேன். சாப்பாடு இதோ கொண்டு வரேன்.''

''மடியாத்தானே இருக்கே?''

''மடிதான். பின்னே?'' என்றாள் ஜயம் வியப்புடன். ''விழுப்புங்கறதுக்கு என்ன இருக்கு இங்கே?''

''ஆபீஸ் போறவ உன் மேல பட்டிருப்பா ளோன்னு கேட்டேன்.''

இன்று இதற்குப் பதில் சொல்ல ஜயத் துக்கு அலுப்பாக இருந்தது.

''இல்லே. என்ன சாப்பிடறே சொல்லு?''

''என்ன சமையல்?''

''சுண்டைக்கா வத்தக்குழம்பு, ஆத்திக் கீரைக் கறி, பருப்பு ரசம்.''

''துவாதசியா இன்னிக்கு?'' என்றாள் மன்னி, எழுந்து உட்கார்ந்து. ''ஏகாதசி விரதம் இருந்தான்னா துவாதசி ஞாபகம் இருக்கும்? இப்படிக் கடத்திட்டானே பகவான்!''

''ஏக விரதம் இருந்தாச்சு. எல்லாம் போறும்போ'' என்றபடி ஜயம் அடுக் களைக்கு நகர்ந்தாள்.

சாப்பாடு கொண்டு வைத்ததும், ''வசந்தா போயாச்சா?'' என்றாள் மன்னி.

''ஆச்சு. சாப்பிடு. இதோ ஜலம் வெச் சிருக்கேன். கையை இப்படி ஓரமா அலம் பிக்கோ.''

மன்னி கையை அலம்பிக் கொண்டு சாப் பிட ஆரம்பித்தாள்.

''இதென்ன இது கூட்டுமாதிரி?''

''ஆமாம் பூசணிக்காக் கூட்டு. வசந்தா வுக்கு ஆத்திக்கீரைப் பிடிக்காதேன்னு பண்ணினேன்.''

''பண்ணு, பண்ணு. துரைசாணியம் மாளுக்கு. அப்படி என்ன நாக்குங்கறேன், ஒரு பொம்மனாட்டிக்கு?''

''அவ ஒண்ணும் பண்ணச் சொல்லல்லே. நானாத்தான் பண்ணேன். கார்த்தாலே போனா சாயந்திரமாத்தான் வர்றா. சாப் பிடறதே நெல்லிக்காயளவு சாதம். சரியான படி காய்கறி இல்லேன்னா உடம்பு என்னத் துக்கு ஆகும்?''

''நன்னா சலாம் போடறேடி நீ அவளுக்கு!''

ஜயம் சற்று நிதானித்துச் சொன்னாள்.

''அண்ணா இருந்தபோது, ராஜா இருந்த போது துவாதசியன்னிக்கு வேற செய்ய மாட்டமா?''

''அவளும் இவளும் ஒண்ணா? ரெண்டு காசு சம்பாதிக்க ஆரம்பிச்ச உடனே அவா ஸ்தானத்துக்கு இவ போயிட்டாளா?''

''ஸ்தானத்தைப் பத்தி என்ன பேச்சு மன்னி? ராஜா இருந்தபோது என்ன செஞ் சானோ அதைத்தான் இவளுஞ் செய்யறா.''

''அதனாலே அவனுடைய இடத்தை இவ நெறப்ப முடியுமா சொல்லு. இவ இப்படி எதுவுமே நடக்காத மாதிரி சிங்காரிச்சுண்டு எதிரிலே நிக்கும் போது எனக்கு எப்படி வயத்தைப் பத்திக்கிறதுன்னு உனக்குத் தெரி யுமாடி ஜயம்? சரி, மடி ஆசாரம் தான் உனக்கு வேண்டாம். பழக்க வழக்கங்கள் அனுஷ்டானங்கள், பெரியவா பெருந்தலை எதுவும் வேண்டாம். கொஞ்சம் கூச்சமா வது வேண்டாமா?''

''சின்ன வயசுதானே மன்னி. முப்பது கூட ஆகல்லே. உன்னையும் என்னையும் போல இருக்கணுங்கறியா?''

''என்ன சின்ன வயசு? நா கல்யாணமாகி வந்து நாலு வருஷத்திலே நீ இப்படி ஆயிட்டே. ஞாபகம் இருக்கா? அப்ப என்ன வயசு உனக்கு?''

வழக்கத்துக்கு விரோதமாக இன்று ஜயத் திற்கு எரிச்சல் வந்தது.

''அதைப்பற்றி என்ன மன்னி இப்ப? நம்ம காலம் வேற இவா காலம் வேற.''

''அதனாலேதான் எத்தனையோ விஷயத் துக்குக் கண்ணை மூடிண்டு இருக்கேன். நீ இருக்கியோ பிழைச்சேன். செய்யறதெல் லாம் அநாச்சாரம். அவ கையிலேர்ந்து தீர்த்தம் வாங்கிக் குடிக்க முடியுமாடி?''

''எனக்குந்தான் தள்ளல்லே.''

''என்னைவிட திடமா இருக்கியோ இல்லையோ?''

''ரசம் கொண்டு வரவா?''

''கொண்டா.''

— மன்னி ருசித்துத்தான சாப்பிட்டாள்.

''நாக்கு ருசியை அடக்க முடியல லேன்னா வேற எந்த ருசியையும் அடக்க முடியாது. அதான் புத்தி பேயாட்டம் அலை யறது.'' என்றாள்.

''வேற ஏதாவது வேணுமா மன்னி?''

''வேண்டாம். எனக்கு மருந்தைக் கொடுத் துட்டு நீ சாப்பிடப்போ.''

மருந்தைக் கொடுத்து மன்னி சாப்பிட்ட இடத்தைச் சுத்தம் செய்யும் போது,

''சாணம் தெளிக்கிறியோ இல்லையோ?'' என்றாள் மன்னி.

''என் மேலயே சந்தேகமா உனக்கு?''

என்றாள் ஜயம் அலுப்புடன்.

மன்னி தனக்குள் முனகிக் கொண்டாள். ''என் இரத்தத்திலே ஊறிப் போயிடுத் துடிம்மா ஆசாரம். நா என்ன செய்வேன். எந்தக் கண்றாவியையும் பாக்கறதுக்கு முன்னாடி எமன் தூக்கிண்டு போனான்னா தேவலை.'' என்றாள் வேறு எதையோ நினைத்துக் கொண்டு.

இதற்கெல்லாம் பதில் சொல்லப் பொறு மையில்லை ஜயத்துக்கு. பசித்தது. நேற்று ஒரு போது சாப்பாடு.

ஆனால் இலையில் அன்னத்தை வைத்துச் சாப்பிட ஆரம்பித்ததும் சாப்பாடு இறங்க வில்லை. சூடாகக் கொஞ்சமாக ரசம் சாதம் சாப்பிட்டாள். கரைத்த மோர்தான் எப்ப வுமே. அதாவது பதினாறு வயசிலிருந்து.



இன்றுதான் முதல் முறையாக ருசியாகத் தெரிந்தது.

'அப்ப என்ன வயசு உனக்கு?'

பதினாறு வயசு!

இப்ப என்ன புதுசா கரிசனம்? அப்பவே யாருக்கும் நினைவிருக்கல்லே. இப்பவும் உனக்கு நினைவிருக்கோ? உன்னைவிட ரெண்டு வயசுதான் சின்னவ நா.

மனுஷ சரீரத்திலே நாக்கு ருசியோ, வேற எந்த ருசியோ, பதினாறு வயசிலேயும் இரு பத்தி எட்டு வயசிலேயும் நீ அடக்க நினைச் சாப்பலே அடங்கிடாது. எனக்கு அடங்கல்லே ரொம்ப நாளைக்கு.

அதுக்கென்ன, எல்லாம் அனுபவிச்ச வாளுக்கு நீட்டி முழக்கிண்டு பேசறது சுலபம். பதினாறு வயசிலே இங்கே அடுக் களையிலே நுழைஞ்சேன். இப்ப வயசு எழு பத்தி அஞ்சு. இன்னும் இங்கேதான் இருக் கேன். ஏன்னா உன் ஆசாரத்துக்கு நாதான் மடியா சமைக்கணும்.

பாத்திரங்களை ஒழித்து முற்றத்தில் போட்டுச் சமையல் மேடையைத் துடைப் பதற்குள் முதுகு விண்டு போயிற்று.

''நீங்க ஒண்ணும் செய்யாதீங்கோ அத்தே. நா சாயங்காலமா வந்து செய்யறேன். அம்மாவுக்குத் தெரியவாப் போறது?'' என்று வசந்தா தினமும் சொல்கிறாள்.

''உங்க மாமியாரை ஏமாத்த முடியாது டிம்மா. அவளுக்கு சூட்சுமம் ஜாஸ்தி.''

''நீங்க இல்லேன்னா அம்மா என்ன பண்ணியிருப்பா? என் கையாலே சாப்பிட்டு நரகத்துக்குப் போயிருப்பார்!''

"ஜயம் ஜயம்!''

''வரேன் மன்னி.''

மன்னி சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந் திருந்தாள்.

''என்ன மன்னி, இன்னிக்குப் படுத்துக் கல்லியா?''

''தூக்கம் வராது எனக்கு, மண்டையெல் லாம் யோசனை கொடையும் போது தூக்கம் எங்கேந்து வரும்?''

''என்ன யோசனை இப்ப?''

''நம்ம தலையெழுத்து இப்படி ஆச்சு பாத்தியான்னு.....! பூவும் பொட்டுமா போக ணும்னு நினைச்சேன். இந்த மனுஷன் முந் திண்டுட்டார். நாப்பத்தி அஞ்சு வயசு வரை தபஸ் பண்ணி பிள்ளை பிறந்தான். அவன் மடியிலே சாகணும்னு நினைச்சேன். அவனையும் தெய்வம் வாரிண்டு போயி டுத்து. அனாதைப் பொணமா போணும்னு இருக்கு பாரேன்!''

பிள்ளைக்குப் பதிலா மாட்டுப்பெண் பார்த்துக்கறா. நீ எப்படி அனாதை? என்று கேட்க நினைத்துக் கேட்காமல் ஜயம் படுத் திருந்தாள்.

''எப்படியோ சீக்கிரம் போயிடறதுதான் தேவலை. இனிமே எதையும் தாங்கிக்க சக்தி யில்லே. ராஜா மாதிரி இருந்த புருஷன் செத்து நாலு வருஷம் ஆகல்லே இன் னொருத்தனைக் கல்யாணம் பண்ணிக் கறேங்கறாளே, எத்தனை தைரியம் இருக் கணும் அதை எங்கிட்ட வந்து சொல்ல! ...உங்கிட்ட மறுபடி அதைப் பத்தி ப் பேசினாளா வசந்தா?''

''இல்லே நீ கோவிச்சுண்டப்புறம் பேசல்லே. அந்தப் பிள்ளையாண்டானைக் கூடக் காணும்.''

''எங்கேயாவது பாத்துக்காமயா இருக்கப் போறா? தூ, அது என்ன வெட்கம் கெட்ட ஜென்மமடி நீ பதினாறு வயசிலே வீணாப் போய் வந்தே. என்னிக்காவது நினைச்சுப் பார்த்திருப்பியோ இப்படியெல்லாம்?''

ஜயம் கண்ணைத் திறக்காமலே தனக்குள் பேசிக் கொள்வது போல் சொன்னாள்.

''நினைச்சுப் பார்க்காம என்ன, நிறைய நினைப்பேன்.''

''சிச்சி உளறாதே. அப்படியெல்லாம் நினைச்சிருக்க முடியாது நிச்சியமா!''

மூர்க்கமான உற்சாகம் பிறந்தது ஜயத் துக்கு.

''ஏன் முடியாது? எனக்குள்ள இருக்கற யோசனையை யாராலேயாவது கட்டுப் படுத்த முடியுமா என்ன?''

''புருஷன் செத்துப் போய் அப்படியெல் லாம் நினைக்கிறது பாவம்னு தெரிஞ்சும் நினைச்சேங்கறே,'' என்றாள் மன்னி கடு மையாக.

''ஆமாம்.''

''நீ ஒரு பாபாத்மாடி ஜயம்!''

''ஆமாம். என்ன செய்யட்டும்?''

''உனக்குள்ள இத்தனை அசிங்கமா மனசு இருக்கும்னு நா நினைக்கல்லே.''

''அசிங்கமோ என்னவோ, எனக்கும் உணர்ச்சிகள் இருந்திருக்கு... அண்ணாவும் நீயும் குடித்தனம் பண்ண ஆத்திலதானே நான் ஆயுசைக் கழிச்சிருக்கேன்... இத் தனைக்கும் உன்னைவிட இரண்டு வயசுச் சின்னவ... அண்ணாவுக்கோ உனக்கோ என் உணர்ச்சி பத்தின பிரக்ஞை என்னிக்கு இருந்திருக்கு.....?''

மன்னியின் முகத்தில் அதிர்ச்சி தெரிந் தது.

''அடிப்பாவி. இதையெல்லாம் இத்தனை

---

மதுரை சக்தி தியேட்டருக்குப் 'புது வசந்தம்' படம் பார்க்கப் போயிருந்தேன். டிக்கெட் கிடைக்காத ஒருவர் தியேட்டர் மானேஜரிடம் தாம் காவல் துறையைச் சேர்ந்தவர் எனக் கூறி டிக்கெட் கேட்டார். மானேஜர் அவரைத் தீவிர மாக விசாரித்த போது, சி.பி.ஐ.யைச் சார்ந்தவர் என்று கூறினார்! பின்னர் தமக்குத் தெரிந்தவர் சி.பி.ஐ.யில் இருப்ப தாகக் கூறினார். அவமானப்படுத்தப்

நாளா நீ சொன்னதே இல்லையே. இப்பச் சொல்றே பழி வாங்கற மாதிரி.''

ஜயத்துக்குச் சிரிப்பு வந்தது.

''இப்பத்தான் சொல்லமுடியும். அப்பச் சொல்லியிருந்தா வீட்டை விட்டுத் துரத்தின்னா இருப்பே. இப்ப எனக்கிருக்கிற நாதி கூட அப்ப இல்லையே.''

''நரகம் தாண்டி உனக்கு.''

''கிடைச்சுட்டுப் போகட்டும்போ.''

''உன்னை என்னவோ சுத்தமானவன்னு நினைச்சிண்டிருக்கேன் ஏமாளியா. தப்புப் பண்ணதாவே உனக்குத் தோணல்லே பாரேன்! ரொம்ப நெஞ்சழுத்தம்டீ உனக்கு. அதான் வசந்தாவுக்குப் பரிஞ்சுண்டு வரே...!''

''வசந்தா வேற கல்யாணம் பண்ணிண்டாலும் இதே வீட்டிலே இருந்துண்டு உன்னையும் என்னையும் பெத்த பெண்ணாட்டம் பார்த்துப்பேங்கறா. ஜயராமன் இருப்பான் உனக்கும் எனக்கும் கொள்ளி போட.''

''என் எதிரிலே அந்தப் பேச்சைப் பேசாதே.'' என்றாள் மன்னி கோபத்துடன்.

''சரி பேசல்லே. அது போகட்டும் நமக்குக் கொள்ளி போட யார் இருக்கா சொல்லேன்.''

''என் நாத்தனார் பேரன் ஒருத்தன் இருக்கான், திருச்சியிலே.''

''இதுவரை நீ இருக்கியா செத்தையான்னு கேட்காதவன்!''

ஜயத்துக்கு மேற் கொண்டு பேச அலுப்பாக இருந்தது. தூக்கம் மெல்ல மெல்ல கண்ணை மூடிற்று. புலன்கள் எல்லாம் தளர்ந்து அதில் அமுங்கிப் போயின.

**மீ**ண்டும் கண் விழித்த போது வெயில் இறங்கி விட்டிருந்தது. மன்னி சுவரில் சாய்ந்த நிலையிலேயே உட்கார்ந்திருந்தாள்.

''காப்பி கொண்டு வரட்டுமா? எழுப்பக் கூடாதோ?'' என்றபடி ஜயம் எழுந்தாள்.

''குடிச்சா போச்சு'' என்றாள் மன்னி அசிரத்தையுடன்.

காப்பி கொண்டு வந்த போதும் மன்னி தீவிர யோசனையில் இருந்தாள்.

காப்பியை வாங்கிக் கொண்டு ''ஏண்டி ஜயம், வசந்தா ஆபீஸ் விட்டதும் நேர வீட்டுக்கு வராளோ?'' என்றாள்.

''வராளே. சில நாளைக்கு வேலை ஜாஸ்தின்னா நாழியாகும்.''

''வேலை ஜாஸ்தியா அவனோட சுத்தறாளான்னு யாருக்குத் தெரியும்? யாரையும் நம்ப முடியல்லே இப்ப.''

''அதுக்காக என்ன பண்ணப் போறே?''

''ஒண்ணுலே ரெண்டு சொல்லிட வேண்டியதுதான்... இந்த வீட்டிலே இருந்துண்டு என் மானத்தை வாங்காதே. வெளியிலே நடன்னு சொல்ல வேண்டியதுதான்.''

ஜயத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''உனக்குப் பைத்தியம் பிடிச்சுப் போச்சா? அப்புறம் நமக்கு யார் இருக்கா?''

''உனக்கு நா, எனக்கு நீ போறுமே. இந்த வீடு ராஜா கட்டினது. நம்ம சாப்பாட்டுக்குப் பணம் இருக்கு. வீட்டுப் பொறுப்பை எப்படியும் நீதான் பார்த்துக்கறே.''

பகபகவென்று அடிவயிற்றில் தீமூண்டது ஜயத்துக்கு. அந்த ஜ்வாலையில் மூச்சுத் திணறி வார்த்தைகள் தடுமாறின.

''மன்னி, நீ மனுஷியில்லே நிச்சியமா. நமக்காக இங்கே தங்கியிருக்கிற அந்தக் குழந்தையையா விரட்டப் போறே? நா மட்டும் உனக்கு உழைச்சுப் போடுவேன்னு எப்படி எதிர்பார்த்தே? நா எதுக்கு உழைக்கணும்?''

''என்னடி இப்படிப் பேசறே?'' என்றாள் மன்னி அதிர்ந்து. ''பதினாறு வயசிலேந்து உன்னை இந்த வீட்டிலே வெச்சிண்டிருக்கேண்டி. கொஞ்சமாவது நன்றி இருக்கா?''

மன்னியின் பேச்சு காதில் விழவில்லை. உள்ளே சுருண்டிருந்ததெல்லாம் சீறிக் கொண்டு வந்தது.

''இனிமே எனக்குத் தாங்காது. அந்தக் குழந்தையோட துக்கம் உன் மனசுக்கு எட்டாது. துரத்து. நானும் கிளம்பிப் போறேன் அவளோட.''

''நீ ஒரு வெட்கம் கெட்டவ, ரெண்டு வேளை சோறு போடறான்னா யாருக்கு வேணாலும் தம்மய்யா போடுவே.''

''இருந்துட்டுப் போறேன். இப்ப எனக்கு சோறு முக்கியமோ இல்லையோ நிழல் முக்கியம். நீ இருந்துக்கோ, மடியா ஆசாரமா, எந்த அழுக்கும் மேல படாம....''

ஜயத்துக்குத் திடீரென்று எல்லாம் வெறுத்துப் போயிற்று. புதிய ஆக்ரோஷத்துடன் வார்த்தைகள் வெடித்தன:

''இதப்பாரு, இன்னிக்கு ரெண்டுலே ஒண்ணு தீர்மானம் பண்ணிடுவோம். என்னைத் தண்டிச்சேள். என் தலையெழுத்து அதுன்னு நம்ப வெச்சேள். போக்கெட்டில்லே எனக்கு. நம்பினேன். அதே திமிரை வசந்தா மேல காட்டாதே. நீ போறதுக்கு முந்தி நா போயிட்டேன்னா என்ன பண்ணுவே?''

மேற் கொண்டு அங்கு நிற்கக் கூட அலுப்பாக இருந்தது. எதுவும் செய்யத்தோன்றாமல் ஊஞ்சலில் சென்று அமர்ந்து கொண்டாள். அன்று பிறகு மன்னியின் அறைக்கே போகவில்லை. 'ஜயம் ஜயம்' என்று கூப்பிடக் கூப்பிடப் போகவில்லை. வசந்தா வந்ததும், 'எனக்குத் தள்ளல்லே வசந்தா. சமையல்

---

பட்டு வெளியேறினார். ஒரு சினிமா பார்ப்பதற்காக இப்படியெல்லாம் போலித்தனமாய்ப் பேசுகின்றனரே என நினைக்கையில் வேதனையாய் உள்ளது.

— ஆர். ரத்தினசாமி.



கட்டிலே எல்லாம் அப்படியே கிடக்கு. சித்தப்பாரு' என்றாள்.

வசந்தா கவலையுடன் அருகில் வந்தாள். ''டாக்டரைக் கூப்பிடட்டுமா?'' என்றாள்.

''வேண்டாம் கொஞ்சம் படுத்திண்டிருந்தா சரியாயிடும்.''

''சாப்பிட ஏதாவது கொண்டு வரட்டுமா?''

''வேண்டாம்மா.''

''நா உங்களைத் தொட்டுப் பார்க்கலாமா?''

''நன்னாத் தொட்டுப்பாரு.''

மிருதுவான கை நெற்றியில் ஜில்லென்று பட்டது. மெல்லிய புன்னகையுடன் ஜயம் அதைப் பற்றினாள்.

''என்ன அத்தே?''

''என்னை யாரும் தொட்டதாவே எனக்கு ஞாபகமில்லே குழந்தே.''

வசந்தா சங்கடத்துடன் சிரித்தாள்.

''எப்படித் தொடறது? நீங்க எப்பவும் மடி, சுத்தம்.''

''ஆமாம், ஒதுக்கி வெச்சதுக்கு அப்படி ஒரு பேரு. என் விஷயத்திலே மடின்னா, உன் விஷயத்திலே விழுப்பு.''

வசந்தா சற்று நேரம் அவளை வினோதமாகப் பார்த்தபடி நின்றாள். ஜயம் கண்களை மூடிக் கொண்டாள்.

''அத்தே!'' என்ற குரல் கேட்டு ஜயம் லேசாகக் கண் திறந்தாள். விடிந்திருந்தது. வசந்தா நின்றிருந்தாள்.

''அம்மா போயிட்டார் அத்தே. தூக்கத்திலேயே போயிட்டாப் போலிருக்கு.'' என்றாள் பதைப்புடன்.

திக்கென்றது. நேத்து நா பேசின பேச்சே கொன்னுடுத்தா? உலுக்கி எடுத்திருக்கும்.... குற்ற உணர்வே சாகடிச்சிருக்கும்.

தானாகச் சதை அசைந்து கண்ணில் நீர் நிறைந்தது! 'போயிட்டியா' என்று அனுதாபம் சுரந்தது. காய்ந்து கண்மூடிக் கிடந்த மன்னியின் உருவத்தைக் கண்டு மு து கு குலுங்கிற்று. கடைசி நேரத்திலே என்ன சொல்லணும்னு நினைச்சியோ.

''ராத்திரி பலகாரம் பண்ணாளா மன்னி?'' என்றாள் குற்ற உணர்வுடன்.

''பலகாரமா? என் கையாலே ஒரு வாய் தீர்த்தம் சாப்பிட மாட்டேன்னுட்டார். அத்தைக்குத் தள்ளலை படுத்திண்டிருக்கார்னேன். அவ எழுந்தப்புறம் சாப்பிட்டுக்கறேன்னுட்டார். சாகற சமயத்திலே கூடத் தன் கொள்கையை விடல்லே. ஆச்சரியமா இருக்கு.'' என்றாள் வசந்தா.

''அவ மாறியிருந்தாத்தான் ஆச்சரியம்'' என்றாள் ஜயம் மெல்ல. ''டயரியிலே நாராயணசுவாமின்னு திருச்சி அட்ரெஸ் இருக்கும். அவனுக்குத் தந்தி குடு. அவன் வரணும். இவளுக்குக் கொள்ளி போட.''




அத்தியாயம் 78

## நண்பர்கள் பிரிவு

கொள்ளிடப் பெருநதியின் படகுத் துறையை நெருங்கி நாலு குதிரைகள் வந்து கொண்டிருந்தன. நாலு குதிரைகள் மீதும் நாலு வீரர்கள் இருந்தார்கள். அவர்கள் நமக்குத் தெரிந்தவர்கள்தான். பார்த்திபேந்திரன், கந்தமாறன், வந்தியத்தேவன், பொன்னியின் செல்வர் ஆகியவர்கள்.

இவர்களில் முதல் இருவரும் படகில் ஏறிக் கொள்ளிடத்தைக் கடந்து வடதிசை நோக்கிப் பிரயாணம் செய்ய ஆயத்தமாக வந்தனர். மற்ற இருவரும் அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்புவதற்கு வந்தார்கள்.

படகுத் துறையை அடைந்ததும் நண்பர்கள் நால்வரும் குதிரை மேலிருந்து கீழே இறங்கினார்கள்.

''கந்தமாறா! உன் பழைய நண்பனிடம் உன் கோபமெல்லாம் போய்விட்டதல்லவா? இன்னமும் ஏதாவது மிச்சம் வைத்துக் கொண்டிருக்கிறாயா?'' என்று பொன்னியின் செல்வர் கேட்டார்.

''ஐயா! அவன் மீது கோபம் வைத்துக் கொள்ளக் காரணம் என்ன இருக்கிறது? என் அறிவீனத்தை நினைத்து நினைத்துப் பச்சாத்தாபப் படுவதற்குத்தான் நிறையக் காரணம் இருக்கிறது. நான் அவனுக்கு இழைத்த தீங்குகளையெல்லாம் மறந்து என்னிடம் பழையபடி சிநேகமாயிருக்க முன் வந்தானே, அந்தப் பெருந்தன்மைக்கு இணையே கிடையாது. என் சகோதரியை நதி வெள்ளத்தில் முழுகிச் சாகாமல் காப்பாற்றினானே, அதற்கு நான் இந்த ஜன்மத்திலே நன்றிக் கடன் செலுத்த முடியுமா? என் புத்தி எதனால் எப்படிக் கெட்டுப் போயிற்று என்பதை நினைத்துப் பார்த்தால், எனக்கே வியப்பாயிருக்கிறது. முதலில் உத்தேசித்தபடி மணிமேகலையை இவனுக்கு மணம் செய்து வைக்காமற் போனேனே? அப்படிச் செய்திருந்தால், இன்றைக்கு அவள் இவ்வாறு பிச்சியாகப் போயிருக்க மாட்டாள் அல்லவா?'' என்றான் கந்தமாறன்.

''அது ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? நதி வெள்ளத்தில் விழுந்த அதிர்ச்சியினால் சிறிது நினைவுத் தவறு ஏற்பட்டிருக்கிறது. சில நாள் போனால் சரியாகி விடாதா?'' என்றார் இளவரசர்.

''சாதாரண நினைவுத் தவறுதலாகத் தோன்றவில்லை. மற்ற எல்லாரையும் அவளுக்கு ஞாபகமிருக்கிறது; எல்லா விஷயங்களும் நினைவில் இருக்கின்றன. என்னையும் வந்தியத் தேவனையும் மட்டும் அவளுக்கு அடையாளம் தெரியவில்லை. என்னிடம் அவள் வைத்திருந்த அன்பு எத்தகையது என்பதை எண்ணும் போது என் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது.

அமரர் **கல்கி**

''ஐயோ! என் அருமை அண்ணனை என்னுடைய கையினாலேயே கொன்று விட்டேனே?' என்று அவள் ஓலமிடும் குரல் என் காதிலேயே இருந்து கொண்டிருக்கிறது...''

''அது ஏன் அப்படி அவள் ஓலமிட வேண்டும்? நீதான் உயிரோடு இருந்து வருகிறாயே?''

''நான் உயிரோடு தானிருக்கிறேன்! இறந்து போயிருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும். ஆம், ஐயா! வந்தியத் தேவனை நான் கொன்று விட்டதாகவும், அதற்காக என்னை அவள் கொன்று விட்டதாகவும் அவள் உறுதி கொண்டிருக்கிறாள். ஒரு சமயம் என்னை நினைத்துப் புலம்புகிறாள். இன்னொரு சமயம் என் சிநேகிதனை நினைத்துக் கொண்டு, 'ஆற்று வெள்ளம் திரும்பி வருமா? இறந்து போனவர்களைக் கொண்டு தருமா?' என்று புலம்புகிறாள். எவ்வளவு தான் சொன்னாலும், என்னை அவளுடைய அண்ணன் என்றும் ஒப்புக் கொள்வதில்லை; வந்தியத் தேவனையும் அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. 'நீ யார்? வல்லத்து இளவரசரை நீ பார்த்தது உண்டா?' என்று இவனிடமே கேட்கிறாள்!....''

''அப்படியா?'' என்று பொன்னியின் செல்வர் திரும்பிப் பார்த்த போது, வந்தியத் தேவன் கண்களில் கண்ணீர் ததும்புவதைக் கண்டார்.

''அடாடா! இப்போது வந்தியத் தேவர் வல்லத்து இளவரசரல்ல, வல்லத்து அரசராகவே ஆகிவிட்டார் என்று தெரிந்தால் அவளுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும்? அதற்குக் கொடுத்து வைக்காமல் போய் விட்டதே?'' என்றான் பார்த்திபேந்திரன்.



தைக் கேட்ட கந்தமாறன் முகத்தில் வியப்புக் குறியுடன் பொன்னியின் செல்வரை நோக்கினான்.

''ஆம், அப்பா! உன் நண்பனுக்கு வாணகப்பாடி நாட்டைத் திரும்பக் கொடுத்து வல்லத்து அரசனாக்கி விடுவதென்று சக்கரவர்த்தி தீர்மானித்திருக்கிறார். அம்மாதிரியே உனக்கும் வாணகப்பாடிக்கு அருகில் வைதும்பராயர்கள் ஆண்ட பகுதியைத் தனி இராஜ்யமாக்கி அளிக்க எண்ணியிருக்கிறார். இனி, நீங்கள் இருவரும் அக்கம் பக்கத்திலேயே இருந்து வாழ வேண்டியவர்கள். எப்பொழுதும் உங்கள் சிநேகத்துக்கு பங்கம் நேராதபடி நடந்து கொள்ள வேண்டும்'' என்றார் பொன்னியின் செல்வர்.

''சக்கரவர்த்தியின் கருணைக்கு எல்லையே இல்லை போலிருக்கிறது. அப்படியானால், நான் மறுபடி கடம்பூருக்கே போக வேண்டியதில்லை அல்லவா?'' என்று கந்தமாறன் சிறிது உற்சாகத்துடன் கேட்டான்.

''வேண்டியதில்லை. அங்கே உங்களுடைய பழைய அரண்மனை தான் அநேகமாக எரிந்து போய் விட்டதே? மறுபடியும் அவ்விடத்துக்கு நீங்கள் போனால் பழைய ஞாபகங்கள் வந்து கொண்டேயிருக்கும். பாலாற்றின் தென் கரையில் புதிய அரண்மனை கட்டிக் கொள்ளுங்கள். உன் சகோதரிக்கு உடம்பு சௌகரியமானதும் அங்கே வந்து அவளும் இருக்கலாம்.''

''கோமகனே! இனி மணிமேகலை எங்களுடன் வந்து இருப்பாள் என்று நான் கருதவில்லை. தங்கள் பாட்டியார் செம்பியன்மாதேவியார் அவளைத் தம்முடன் ஸ்தல யாத்திரைக்கு அழைத்துப் போவதாகச் சொல்லியிருக்கிறார். மணிமேகலைக்கும் பெரிய பிராட்டியை ரொம்பவும் பிடித்துப் போயிருக்கிறது. இன்றைக்குக் கூடப் பெரிய பிராட்டி திருவையாற்றுக்கு என் சகோதரியை அழைத்துப் போயிருக்கிறார்.''

''ஆமாம்; பெரிய கோஷ்டியாகத்தான் போயிருக்கிறார்கள். புது மணம் புரிந்து கொண்ட என் சித்தப்பாவும் சிற்றன்னையும் கூடப் போயிருக்கிறார்கள். இந்த வேடிக்கையைக் கேளுங்கள். சமுத்திர குமாரியை இனிமேல் என் சிற்றன்னையாக நான் கருதி வர வேண்டும்!''

''சோழர் குலத்தில் இவ்வளவு அடக்கமாக ஒரு திருமணம் இது வரையில் நடந்ததே கிடையாது; மதுராந்தகருக்கும் பூங்குழலிக்கும் நடந்த திருமணத்தைப் போல்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''என்னுடைய மகுடாபிஷேகங்கூட அவ்வளவு அடக்கமாகத்தான் நடக்கப் போகிறது!'' என்றார் அருள்மொழி.

''அது ஒரு நாளும் நடவாத காரியம்!...'' என்றான் வந்தியத்தேவன்.



ன்னியின் செல்வர் திடுக்கிட்டது போல் நடிப்புடன், ''எது நடவாது என்று கூறுகிறாய்? என்னுடைய பட்டாபிஷேகமா?'' என்றார்.

வந்தியத் தேவன் சிறிது வெட்கத்துடன், ''இல்லை, ஐயா! அடக்கமாக நடப்பது இயலாத காரியம் என்றேன். இப்போதே மக்கள் தங்கள் மகுடாபிஷேகத்தைப் பற்றி விசாரிக்கவும் பேசவும் ஆரம்பித்து விட்டார்கள்!'' என்றான்.

''கோமகனே! தங்களுடைய முடிசூட்டு

விழாவுக்கு நாங்கள் இருக்க வேண்டாமா? இந்தச் சமயம் பார்த்து எங்களை வட திசைக்கு அனுப்புகிறீர்களே! தைமாதம் பிறந்ததும் பட்டாபிஷேகத்துக்கு நாள் குறிக்கப்படும் என்று தஞ்சையில் பேசிக் கொண்டிருந்தார்களே! வந்தியத் தேவன் கொடுத்து வைத்தவன்; அதிர்ஷ்டசாலி!...." என்றான் கந்தமாறன்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. வந்தியத் தேவரையும் நான் சீக்கிரத்தில் ஈழத்துக்கு அனுப்பப் போகிறேன். நண்பர்களே! ஒன்று நிச்சயமாக நம்புங்கள்! என் அருமை நண்பர்களாகிய நீங்கள் இல்லாமல் என் மகுடாபிஷேகம் நடை பெறாது!" என்று பொன்னியின் செல்வர் திடமாகக் கூறினார்.

"மிக்க நன்றி, ஐயா! மகுடாபிஷேகத்துக்கு நாள் குறிப்பிட்டவுடனே குதிரை ஆட்களிடம் ஓலை கொடுத்து அனுப்புங்கள். உடனே வந்து சேருகிறோம்" என்றான் கந்தமாறன்.

"நண்பா! அதைப் பற்றி என்ன கவலை? நீங்கள் வராமல் நான் பட்டாபிஷேகம் செய்து கொள்ளப் போவதில்லை. இதை நிச்சயமாக நம்புங்கள். நான் பட்டாபிஷேகம் செய்து கொள்வது எதற்காக என்பதை மறந்து விடாதீர்கள். அரண்மனை நிலா மாடங்களிலும் உத்தியான வனங்களிலும் உல்லாசப் பொழுது போக்குவதற்காக நான் முடி சூட்டிக் கொள்ளப் போவதில்லை. நண்பர்களே! ஈழ நாடு சென்றதிலிருந்து நான் கண்டு வரும் கற்பனைக் கனவுகளை உங்களிடம் முன்னமே சொல்லியிருக்கிறேன். இன்னும் ஒரு முறை சொல்லுகிறேன், கேளுங்கள்! என் பாட்டனாரின் தந்தையான பராந்தகச் சக்கரவர்த்தியின் காலத்தில் சோழ சாம்ராஜ்யம் அடைந்திருந்த மகோந்நதத்தைக் காட்டிலும் நம்முடைய காலத்தில் அதிக மேன்மையை அடைய வேண்டும். நாலா புறத்திலும் இராஜ்யத்தை விஸ்தரிக்க வேண்டும். வடக்கே கங்கை நதிக்கரை வரைக்கும், கிழக்கே கடல் கடந்து ஸ்ரீவிஜய ராஜ்யம் வரைக்கும் சோழ நாட்டுப் படைகள் சென்று புலிக் கொடியை நாட்ட வேண்டும். மேற்கே மலை நாட்டையும் அப்பால் கடலில் உள்ள லட்சத் தீவுகளையும் கைப்பற்றி நமது படைகளையும் அங்கே நிலைத்து இருக்கச் செய்ய வேண்டும். மலை நாட்டில் 'சேர அரசன்' ஒருவன் எங்கிருந்தோ கிளம்பியிருக்கிறான். பாண்டிய நாட்டிலும் யாராவது ஒரு பாண்டியன் திடீரென்று கிளம்புவான். இந்தப் புதிய சேர, பாண்டியர்களுக்குப் பலம் அளிப்பவர்கள் இலங்கை மன்னர்கள். ஆகையால் ஈழ நாட்டு மலைக் குகைகளில்



ஒளிந்திருக்கும் மகிந்தனையும் அவனுடைய படைகளையும் தேடிப் பிடித்து அவர்களுடைய பலத்தை அடியோடு அழித்து விட வேண்டும். இலங்கைத் தீவு முழுவதையும் நம் ஆட்சிக்குக் கொண்டு வர வேண்டும். இராஜ்யம் விஸ்தாரமானால் மட்டும் போதுமா? ஈழ நாட்டிலுள்ள புத்தரின் ஸ்தூபங்களைத் தோற்க அடிக்கும்படியான பெரிய பெரிய சிவாலயங்களையும் விஷ்ணு ஆலயங்களையும் இந்தப் புண்ணிய பூமியில் எழுப்ப வேண்டும். இந்த வீரத் திரு நாட்டில் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பாடு வரப் போகிறவர்கள் நாம் நம் காலத்தில் செய்த திருப் பணிகளைக் கண்டு பிரமிக்க வேண்டும். நண்பர்களே! இக் கனவுகள் எல்லாம் என் காலத்தில் நிறைவேறத்தான் போகின்றன; நிறைவேற்றியே தீர்வேன். அதற்கு நீங்கள் ஒவ்வொருவரும் உதவி செய்ய வேண்டும். பார்த்திபேந்திரரே! சோழ நாட்டிலேயே மிக உயர்ந்த சைன்யப் பதவியை, என் தமையனார் கரிகாலர் வகித்து வந்த வடதிசை மாதண்ட நாயகர் பதவியைத் தங்களுக்கு அளித்திருக்கிறேன். அந்தப் பொறுப்பை நீர் சரிவர நிறைவேற்ற வேண்டும். என் தமையனாரின் அகால மரணம் நம் பகைவர்களிடையே பலவித ஆசைகளை மூட்டி விட்டிருக்கும். வேங்கி அரசனும் இராட்டிரகூட மன்னனும் சோழ நாட்டில் உள் குழப்பங்கள் நேரிடும் என்றும், சிற்றரசர்களுக்குள்ளே போர் மூளும் என்றும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். ஆகையால் வட பெண்ணைக் கரையில் நம் வீரர்கள் இரும்பு அரணைப் போல் நின்று காவல் புரிய வேண்டும். பல்லவர் குலத் தோன்றலே! வடபெண்ணைக் கரையில் வேண்டிய ஏற்பாடுகள் செய்து விட்டு, கந்தமாறனை அங்கே தளபதியாக நிறுத்தி வைத்து விட்டு, தாங்கள் உடனே காஞ்சிக்குத் திரும்புங்கள். அங்கே, என் வீரச் சகோதரர் எடுப்பித்த பொன் மாளிகையைச் சக்கரவர்த்தி வந்து தங்குவதற்கு உகந்ததாகச் செய்து

வையுங்கள்; என்னுடைய தலையில் கிரீடத்தை வைத்தவுடனே, சக்கரவர்த்தி காஞ்சிக்குப் பிரயாணமாவதற்கு விரும்புகிறார்!''



தைக் கேட்டுக் கந்தமாறன் கண்களில் நீர் ததும்ப, ''கோமகனே! போர்க்களத்தில் நான் எனது போர்த் திறமையை இன்னும் நிரூபித்துக் காட்டவில்லையே? எல்லைக் காவல் படைக்கு என்னைத் தளபதியாக நியமிக்கிறீர்களே? நான் தகுதி உள்ளவனா?'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டான்.

''நண்பா! எல்லாம் வல்ல இறைவன் எனக்குச் சில சக்திகளை அளித்திருக்கிறார். யார் யார் எந்த எந்தப் பணிக்குத் தகுதியுள்ளவன் என்பதை எளிதில் கண்டு பிடிக்கும் சக்தியையும் அளித்திருக்கிறார். உன்னை வடக்கு எல்லைப் படைக்குத் தளபதியாக நியமித்திருப்பது போல், உன் நண்பர் வல்லத்தரசரை ஈழப் படைக்குத் தளபதியாக நியமித்திருக்கிறேன்! இரண்டு பேரும் உங்கள் கடமைகளை நன்கு நிறைவேற்றுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது!'' என்றார் பொன்னியின் செல்வர்.

''இன்னும் சில காலத்துக்கு இவர்களில் ஒருவரை வடக்கு எல்லையிலும் இன்னொருவரைத் தெற்கு எல்லையிலும் வைத்திருப்பது நல்ல யோசனைதான். எங்கேயாவது சேர்ந்திருந்தால், தாங்களும் அங்கே இல்லாமலிருந்தால், பழைய ஞாபகம் வந்து இருவரும் மோதிக் கொண்டாலும் மோதிக் கொள்வார்கள்'' என்றான் பார்த்திபேந்திரன்.

''ஐயா! இனி அம்மாதிரி ஒரு நாளும் நேரவே நேராது!'' என்று கந்தமாறன் சொல்லிக் கொண்டே வந்தியத் தேவன் அருகில் சென்றான்.

''நண்பா! என்னுடைய தவறுகளையெல்லாம் மன்னித்து விட்டாய் அல்லவா?'' என்று கேட்டான்.

வந்தியத்தேவன் அதற்கு வாயினால் மறுமொழி கூறாமல், இரு கரங்களையும் நீட்டிக் கந்தமாறனை மார்புறக் கட்டித் தழுவிக் கொண்டான்.

நண்பர்கள் இருவரும் சிறிது நேரம் மௌனமாகக் கண்ணீர் உகுத்தார்கள்.

பின்னர், பார்த்திபேந்திரனும் கந்தமாறனும் சென்று ஆயத்தமாக இருந்த படகில் ஏறிக் கொண்டார்கள்.

படகு நதியில் பாதி தூரம் போகும் வரையில் பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பொன்னியின் செல்வரும் வந்தியத்தேவனும் தஞ்சையை நோக்கிக் குதிரைகளைத் திருப்பி விடுத்தார்கள்.

## அத்தியாயம் 79

## சாலையில் சந்திப்பு

பொன்னியின் செல்வரின் முடி சூட்டு விழா விரைவிலேயே நடைபெறப் போகிறது என்று நாடு நகரமெல்லாம் தெரிந்து போயிருந்தது. மக்கள் ஒரே ஆர்வத்துடன் அந்த வைபவத்தை எதிர் நோக்கியிருந்தார்கள்.

ஆதித்த கரிகாலரின் அகால மரணம், மந்தாகினியின் உயிர்த் தியாகம், பெரிய பழுவேட்டரையரின் சபத நிறைவேற்றம் ஆகிய நிகழ்ச்சிகள் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் உள்ளத்தைப் பெரிதும் துன்புறச் செய்திருந்தன. ஆயினும், இராஜ்ய உரிமை சம்பந்தமான சச்சரவுகள் ஒரு மாதிரி தீர்ந்து போய், அருள்மொழி வர்மருக்கு முடிசூட்டுவதைச் சிற்றரசர்கள், பொது மக்கள் அனைவரும் ஒரு முகமாக ஆதரித்தது, அவருடைய நொந்து போன உள்ளத்துக்கு ஓரளவு ஆறுதல் அளித்து வந்தது.

தை மாதம் பிறந்தவுடனே நல்ல நாள் குறிப்பிட்டுப் பொன்னியின் செல்வரின் தலையில் சாம்ராஜ்ய பாரத்தைச் சுமத்தி விட்டுக் காஞ்சிக்குப் புறப்பட்டுச் செல்லச் சக்கரவர்த்தி முடிவு செய்திருந்தார். அங்கே தமது வீரப் புதல்வன் கரிகாலன் தமக்



கென்று நிர்மாணித்த பொன் மாளிகையிலே மிச்சமுள்ள தம் வாணாளைக் கழித்து விடவும் தீர்மானித்திருந்தார்.

முடிசூட்டு வைபவத்தை அதிக ஆடம்பரமில்லாமல் நடத்தி விட வேண்டும் என்று சுந்தர சோழர் எண்ணியதிலும் வியப்பில்லை அல்லவா?

இந்த விஷயத்தில் அருள்மொழி வர்மரும் பரிபூரணமாகத் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்ற எண்ணியிருந்தார். ஆகையால், முடிசூட்டு விழா முடியும் வரையில் நாடு நகரங்களில் பொது மக்களிடையில் அதிகமாகப் போவதில்லையென்று தீர்மானித்திருந்தார்.

கொள்ளிடத்தின் படகுத் துறையிலிருந்து தஞ்சைக்கு நேர் வழியாகப் போவதென்றால், திருவையாறு நகரின் வழியாகப் போக வேண்டும். அந்த நகருக்குள் சென்றால், மக்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு ஆரவாரம் செய்வார்கள் என்பது நிச்சயம். ஆகையால் நண்பர்கள் இருவரும் அந்த நகர் வழியே புகாமல், சிறிது மேற்கே ஒதுங்கிச் சென்று காவேரி நதியைக் கடந்தார்கள். குடமுருட்டி நதியை அடைந்ததும், அதன் கரையோடு தஞ்சை ராஜ பாட்டையை நோக்கிச் சென்றார்கள்.



ந்து நதிகள் அடுத்தடுத்துப் பாயும் அந்த அற்புதமான பிரதேசத்தின் நீர்வளமும் நிலவளமும் மார்கழி மாதத்தில் கண் கொள்ளாக் காட்சியாகத் திகழ்ந்தன. இரு கரையும் தொட்டுக் கொண்டு வெள்ளம் ஓடும் காலத்தைக் காட்டிலும், அரை ஆறு இனிய புனலும் அரை ஆறு மணல் திடலுமாகத் தோன்றிய காட்சி வனப்பு மிகுந்ததாயிருந்தது.

நதியின் இரு புறங்களிலும் தென்னையும், கமுகும், கதலியும், கரும்பும் செழித்து வளர்ந்திருந்தன. தோப்புகள் இல்லாத இடங்களிலெல்லாம் நன்செய் வயல்களில் பொன்னிற நெற் பயிர்கள் செந்திறக் கதிர்களின் பாரந் தாங்காமல் தலை சாய்ந்து கிடந்தன.

இடையிடையே வாவிகளிலும் ஓடைகளிலும் தலை நிமிர்ந்து நின்ற தாமரைகளும் குமுதங்களும் செங்கழுநீர்களும் வர்ண சித்திரக் காட்சியாகத் திகழ்ந்தன.

இவற்றையெல்லாம் பார்த்துப் பார்த்து வியந்து கொண்டு வந்த வந்தியத் தேவனை நோக்கிப் பொன்னியின் செல்வர், ''நண்பரே! இவ்வளவு வனப்பும் வளமும் பொருந்திய இடம் இந்த உலகில் வேறு எங்கேனும் இருக்க முடியுமா? இப்படிப் பட்ட நாட்டின் சக்கரவர்த்தியாக முடி சூட்டிக் கொள்வது எவ்வளவு பெரிய பாக்கியம்? இந்தப் பாக்கியத்தைச் சில காலத்துக்கு முன்பு வரையில் நான் வேண்டாம் என்று மறுதளித்துக் கொண்டிருந்ததை நினைத்தால் எனக்கே வியப்பாயிருக்கிறது!'' என்றார்.

''எனக்கு அதில் வியப்பு ஒன்றுமில்லை, ஐயா! அரச குலத்தவர்களின் சஞ்சல உள்ளத்தைப் பற்றி அடிக்கடி பெரியோர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

''நீர் ரொம்பவும் பொல்லாதவர்; அதோடு நன்றியும் இல்லாதவர். ஈழ நாட்டுப் போர்ப் படைக்கு உம்மைத் தளபதி ஆக்கியதற்கு இன்னும் நன்றி கூடச் செலுத்தவில்லை. என்னைச் சஞ்சல புத்தியுள்ளவன் என்று வசை கூறுகிறீர்!''

''சாதாரண மக்கள் விஷயத்தில் வசையாக இருப்பது அரச குலத்தவரிடையில் புகழுக்குக் காரணமாயிருக்கக் கூடும் அல்லவா? இன்றைக்கு ஒருவனுக்கு மரண தண்டனை விதிக்கிறீர்கள்; மறு நாள் அவனை மன்னித்துத் தளபதி ஆக்குகிறீர்கள். இத்தகைய சஞ்சல புத்தியினால் அரசர்களுடைய புகழ் அதிகமாகத்தானே செய்யும்? 'ஆகா! நம் மன்னர் எத்தனை கருணை உள்ளவர்?' என்று மக்கள் புகழ்வார்கள் அல்லவா?''

''ஆம், ஆம்! ஆனால் இன்றைக்குத் தளபதியாகச் செய்தவனுக்கு நாளைக்கு மரண தண்டனையும் விதிக்கலாம். அப்போது ஜனங்கள் என்ன சொல்வார்கள்?''

''நடுநிலைமை தவறாமல் நீதி வழங்கும் மன்னர் பெருமான் என்றும் மனுநீதிச் சோழரின் புனர் அவதாரம் என்றும் சொல்லிப் பாராட்டுவார்கள்!''

பொன்னியின் செல்வர் கலகலவென்று சிரித்து விட்டு, ''அப்படியானால், உமக்கு அளித்த வாணகப்பாடி இராஜ்யத்தையும் ஈழத்துச் சேனையின் தளபதி பதவியையும் நான் திரும்பப் பிடுங்கிக் கொண்டால், உமக்கு அதில் அதிசயம் ஒன்றுமே இராதல்லவா?'' என்றார்.

''அதிசயப்படவும் மாட்டேன்; துயரப் படவும் மாட்டேன். இப்போது கூடத் தாங்கள் என்னை ஈழ நாட்டுக்கு அனுப்புவது எனக்குப் பெரிய தளபதி பதவி தரும் நோக்கத்துடனா அல்லது என்னை இந்த அழகிய சோழ நாட்டில் இருக்கக் கூடாது என்று தேசப் பிரஷ்டனாக்கும் நோக்கத்துடனா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருக்கிறது!''

''உண்மையில் இவ்வளவு சாமர்த்தியசாலியான உம்மை எனக்கு முதன் மந்திரி

யாக்கிக் கொண்டு என் அருகிலேயே வைத்துக் கொள்ளவே எனக்குப் பிரியமாக இருக்கிறது. ஆனால் முதன் மந்திரி அநிருத்தர் உமக்காகத் தமது பதவியை விட்டு விலகிக் கொள்வார் என்று தோன்றவில்லை.''

''அது ஒன்றுதான் காரணமாயிருந்தால், நானே முதன் மந்திரி அநிருத்தர் அவர்களிடம் கேட்டுக் கொள்கிறேன்.''

பொன்னியின் செல்வர் நகைத்து விட்டு, ''இல்லை; வேறு காரணமும் இருக்கிறது!'' என்றார்.

''அப்படித்தான் நானும் நினைத்தேன்.''

''என்ன நினைத்தீர்?''

''தாங்கள் இப்போதெல்லாம் மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு, வெளியில் ஒன்று சொல்கிறீர்கள் என்று.''

''வல்லத்தரசரே! தங்களுடைய குற்றச்சாட்டை மெய்ப்பிக்க ஓர் உதாரணம் சொல்ல முடியுமா?''

''நன்றாக முடியும். தங்களுடைய மகுடாபிஷேக வைபவத்துக்குத் தை மாத ஆரம்பத்திலேயே நாள் வைத்திருக்கிறது. அது தங்களுக்குத் தெரியும். அப்படியிருக்கும் போது, சற்று முன் நம்மைப் பிரிந்து சென்றவர்களிடம் 'நீங்கள் இல்லாமல் என் மகுடாபிஷேகம் நடைபெறாது' என்றீர்கள். அதைப் பற்றி நான் வேறு என்ன நினைப்பது?'' என்று கேட்டான்.

பொன்னியின் செல்வர் மறுபடியும் நகைத்துவிட்டு, ''ஆமாம்; முன்னேயெல்லாம் நான் மனத்தில் தோன்றுவதை அப்படியே வெளிப்படையாகச் சொல்வது என்றுதான் வைத்துக் கொண்டிருந்தேன். வந்தியத்தேவரோடு சிநேகமான பிறகு மந்திர தந்திரங்களில் பயிற்சி பெற்று வருகிறேன்!'' என்றார்.

''வீணாக எனக்குப் புகழ்ச்சி கூறுகிறீர்கள்! தங்களுக்குத் தெரியாத மந்திர தந்திரம் உலகில் வேறு என்ன இருக்க முடியும்? யானையின் காதில் ஓதிய மந்திரத்துக்கும் யானைப்பாகன் வேஷம் போட்டு உலகை ஏமாற்றிய தந்திரத்துக்கும் இணையானவை என்ன உண்டு?''

''அப்படியே இருக்கட்டும்! என்னிடமே நீர் இனி மந்திர தந்திரங்களைக் கற்றுக் கொள்ளலாம்.''

''அவ்வாறு நான் அதிகமாகக் கற்றுக் கொண்டு விடப்போகிறேனே என்றுதான் என்னை இலங்கைக்கு விரட்டி விடப் பார்க்கிறீர்களோ?''

''நண்பரே! ஈழ நாட்டுக்குப் போவதில் தங்களுக்குஒருவேளைவிருப்பம்இல்லையா, என்ன?''

''யார் சொன்னார்கள்? இலங்கைக்கு அப்பால் இன்னும் தூரத்திலுள்ள இடங்களுக்குப் போகும்படி கட்டளையிட்டாலும் புறப்பட ஆயத்தமாயிருக்கிறேன். எவ்வளவு சீக்கிரம் அனுப்புகிறீர்களோ, அவ்வளவுக்கு மகிழ்ச்சி அடைவேன்!''

''என்னை விட்டுப் பிரிந்து போவதில் அவ்வளவு மகிழ்ச்சியா தங்களுக்கு?''

''ஆம், ஐயா! பேரரசர்களிடமிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்கிறோமோ, அவ்வளவுக்கு நல்லது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். தூரத்தில் இருந்தால், அரசர்களுடைய சிநேகத்தை இழந்து விடாமல் காப்பாற்றிக் கொள்ளலாம்.''

''அப்படியானால், தாங்கள் ஏமாற்றத்துக்கு உள்ளாக நேரிடும்.....''

''எவ்வளவு தூரம் போனாலும் தங்கள் சிநேகத்தை நீடித்துக் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்கிறீர்களா?''

''இல்லை; இல்லை. அதிக காலம் என்னைத் தாங்கள் பிரிந்திருக்க முடியாது என்று சொல்கிறேன். சில தினங்களுக்கெல்லாம் நானும் ஈழத்துக்கு வந்து தங்களுடன் சேர்ந்து கொள்வதாக உத்தேசித்திருக்கிறேன். தங்களை உடன் அழைத்துக் கொண்டு கடல்களைக் கடந்து அப்பாலுள்ள தீவாந்தரங்களுக்கெல்லாம் போகத் திட்டமிட்டிருக்கிறேன். நம்முடன் சமுத்திர குமாரியையும் அழைத்துப் போக முடியவில்லையே என்றுதான் வருத்தமாயிருக்கிறது!''

''ஐயா! என்னுடன் சேர்ந்து தாங்கள் தந்திர மந்திரங்கள் கற்றுக் கொண்டீர்கள். தங்களுடன் சிநேகமானதிலிருந்து நான் உண்மையைப் பேசுவது என்று விரதம் எடுத்துக் கொண்டேன். இப்போது என்னுடைய மனத்தில் உள்ளதைத் தங்களிடம் சொல்லட்டுமா?''

''தாராளமாகச் சொல்லுங்கள்!''

''என் நண்பர் சேந்தன் அமுதனாரிடமிருந்து, — தங்கள் சித்தப்பா மதுராந்தகத் தேவரிடமிருந்து, — சோழ சாம்ராஜ்யத்தைத் தாங்கள் எடுத்துக் கொள்கிறீர்கள். அதற்கு ஒரு மாதிரி நியாயம் உண்டு. தாங்களே முடி சூட வேண்டும் என்பது மக்களின் விருப்பம் என்று காரணம் காட்டலாம். ஆனால் அவரி



டமிருந்து பூங்குழலியை அபகரித்திருந்தால், அது போன்ற பெருந் துரோகச் செயல் வேறு எதுவும் இருக்க முடியாது. அதற்கு நியாயமே சொல்ல முடியாது. சமுத்திர குமாரி இப்போது மதுராந்தகத் தேவரின் தர்ம பத்தினி என்பதைத் தாங்கள் நினைவு வைத்துக் கொள்ளுங்கள்!'' என்றான் வந்தியத் தேவன்.

பொன்னியின் செல்வர் கலகலவென்று சிரித்து விட்டு, ''என்னை தசகண்ட இராவணனோடு சேர்த்து விடுவீர்கள் போலிருக்கிறதே!'' என்றார்.

பின்னர், ''தங்களுடைய நண்பருக்குப் பரிந்து தாங்கள் பேசுவது நியாயந்தான்! ஆனால், பூங்குழலியின் நிலைமை என்ன? அவள் என் சித்தப்பாவை மனமுவந்து கல்யாணம் செய்து கொண்டாளா?'' என்று கேட்டார் அருள்மொழி வர்மர்.

''அதற்கு என்ன சந்தேகம்? கோமகனே! தாங்கள் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாகலாம். இந்தப் பூ மண்டலம் முழுவதையும் வென்று ஒரு குடை நிழலில் கொண்டு வந்து ஆட்சி புரியலாம். ஆனால் பூங்குழலி அம்மையை மட்டும் அவருடைய விருப்பத்துக்கு விரோதமாக எந்தக் காரியமும் செய்யும்படி கட்டாயப்படுத்த முடியாது. செம்பியன் மாதேவியின் செல்வப் புதல்வரிடம் பூங்குழலி அம்மை கொண்டிருந்த அன்பின் ஆழத்தை நான் அறிந்து கொள்ளும் பேறு பெற்றேன். அதற்கு இணையான அன்பை இன்னும் ஓரிடத்திலே தான் கண்டிருக்கிறேன்!''

''அது எங்கே கண்டீர்கள்? என்னிடம் அதைப் பற்றிச் சொல்லலாம் என்றால், சொல்லுங்கள்!''

''கொடும்பாளூர் இளவரசி வானதியிடந்தான் கண்டேன்! அத்தகைய அன்பை வேறு எங்கே காண முடியும்?''

''பொய்! பொய்! உண்மை பேசும் விரதத்தை அதற்குள்ளே மறந்து விட்டீரோ? மனத்தில் ஒன்றை ஒளித்து வைத்துக் கொண்டு வெளியில் ஒன்றைத் திரித்துச் சொல்லுகிறீரே?''

''இல்லவே இல்லை, ஐயா! மனத்தில் எண்ணியதைத்தான் சொல்கிறேன்!''

''வேறு எங்கேயும் அத்தகைய காதலை நீர் கண்டதில்லையா?''

''இல்லை என்றுதான் சொல்கிறேனே?''

''அடே பாதகா! இரக்கமற்ற அரக்கனே! உனக்காக ஒரு பெண் தன் உயிரைத் தியாகம் செய்ய முன் வந்து மதியை இழந்து பிச்சியாகியிருக்கிறாள்! அவளுடைய காதல் உனக்குப் பெரிதாகத் தோன்றவில்லையா?'' என்று பொன்னியின் செல்வர் உண்மையான கோபத்துடன் கேட்டார்.

வந்தியத் தேவன் சிறிது நேரம் வரை மௌனமாக இருந்தான். பின்னர், ''ஐயா! தாங்கள் காரண காரியங்களை மாற்றிச் சொல்கிறீர்கள். மணிமேகலையிடம் எனக்கு இரக்கம் இல்லாமற் போகவில்லை. அவளை நினைத்து நினைத்துக் கண்ணீர் வடிக்கிறேன். ஆனால் அவள் 'பிச்சி'யாகப் போனதற்குக் காரணம் நான் அல்ல; அவளுடைய சகோதரன் கந்தமாறன்தான்! மேலும் நாங்கள் இருவருமே அந்தப் பெண்ணுக்கு இறந்தவர்களாகிவிட்டோம். இனி அதைப் பற்றிப் பேசி என்ன பயன்?'' என்றான்.

''நான் சற்று முன் கோபமாகப் பேசியதற்காக வருத்தப்படுகிறேன்...'' என்று பொன்னியின் செல்வர் ஆரம்பித்தார்.

''எனக்கு அதில் வருத்தமும் இல்லை; வியப்புமில்லை. இம்மாதிரி திடீர்க் கோபத்தை எதிர்நோக்கித்தான் சீக்கிரமே இலங்கைக்குப் புறப்பட விரும்புவதாகச் சொன்னேன்.''

''தங்களை இலங்கைக்கு அனுப்புவதற்கு இன்னொரு காரணமும் உண்டு என்று சொன்னேன் அல்லவா?''

''ஆம், பிரபு!''

''சில காலம் தாங்கள் தூர தேசத்தில் இருந்து விட்டுத் திரும்பி வந்தால், ஒரு வேளை தங்களை மணிமேகலை அடையாளம் கண்டு கொள்ளலாம் என்று என் தமக்கையார் கருதுகிறார்!''

''தெரிந்து கொண்டேன், ஐயா! என்னைத் தூர தேசத்துக்கு அனுப்புவதில் தங்களை விட இளைய பிராட்டிக்கு அதிக சிரத்தை இருப்பதைத் தெரிந்து கொண்டேன்! நாம் யாரைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோமோ, அவர்களே அதோ வருகிறார்கள்!'' என்று வந்தியத் தேவன் சுட்டிக் காட்டினான்.

குடமுருட்டி நதிக் கரையோடு வந்த அந்த நண்பர்கள் இருவரும் அச்சமயம் திருவையாற்றிலிருந்து தஞ்சாவூர் போகும் இராஜ பாட்டையை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த இராஜ பாட்டையில் முன்னும் பின்னும் பரிவாரங்கள் புடை சூழப் பல்லக்கு ஒன்று வந்து கொண்டிருந்தது. அதில் குந்தவை தேவியும் கொடும்பாளூர் இளவரசியும் வீற்றிருந்தார்கள். குதிரைகள் மீது வந்த நண்பர்கள் இருவரையும் பார்த்ததும் அப் பெண்மணிகளின் கண்கள் வியப்பினால் விரிந்தன; அவர்களுடைய முகங்கள் மகிழ்ச்சியால் மலர்ந்தன.

(தொடரும்)

# சினிமா மழையால் கிரிக்கெட் பாழ்!

●● முதலில் 'இதய கீதம்' படம் பற்றி விட்டுப் போன கொஞ்சம் 'கொசுறு' நியூஸ்... ஒவ்வொரு பாடலுக்கும் பதினைந்து லட்சம் செலவாயிற்று என்று சொன்னோம் அல்லவா...? காஷ்மீர் பனிப்படுகையில் ஒரு பாடல், கிருஷ்ணராஜ சாகர் அணையில் ஒரு பாடல், பெங்களூர் கிரிக்கெட் ஸ்டேடியத்தில் ஒரு பாடல் என்று தூள் கிளப்பியிருக்கிறார்களாம். பெங்களூர் ஸ்டேடியத்தில் தொடர்ந்து பத்து நாட்கள் ஷூட்டிங் நடந்த கையோடு மறுநாள் கிரிக்கெட் மாட்ச் நடக்கவிருந்ததாம். படக் காட்சிக்காகச் செயற்கை மழை பெய்யச் செய்ததில் கிரவுண்ட் பாழாகி, மாட்ச் நடக்க முடியாமல் போய், பேப்பரில் கோபமான செய்திகள் அமர்க்களப்பட்டனவாம்! இந்தப் படத்தில் ஹிந்தி நடிகர் அம்ஜத்கானும் உண்டு என்பது பலருக்குத் தெரியாது.

●● இப்போது அமலா — நாகர்ஜுனா இருவரும் 'உதயம்' பட டைரக்டர் ராம் கோபால் வர்மா இயக்கும் தெலுங்கு படத்தில் நடிப்பதற்காக வெளிநாடு சென்றுள்ளார்கள். அப்படியே தம் சொந்த ஊருக்கும் சென்று வரும் திட்டத்துடன் கிளம்பியிருக்கிறார் அமலா. எப்படியும் திரும்ப மூன்று மாதங்கள் ஆகுமாம். நாகர்ஜுனா ராம் கோபால் வர்மாவிடம் எனக்குப் பாதிச் சம்பளம் கொடுத்தால் கூடப் போதும் எப்படியாவது 'என் பேர்' உயரும்படி ஏதாவது செய்ய வேண்டும் என்று மிக அழுத்தமாகக் கூறியிருக்கிறார்.

* இப்போது அயல்நாட்டில்...





* சந்தோஷம்! சந்தோஷம்!

மற்றொன்றிற்காக வருத்தப்படுகின்றார் சீதா: லண்டனில் ஒரு தியேட்டரில் ''புதிய பாதை'' படம் நூறு நாட்கள் ஓடியதற்காக விழா எடுக்க வேண்டும் என்று சீதாவிடம் தேதி கேட்டார்களாம். ஜனவரி — பிப்ரவரி — ஏப்ரல் என்று கால்ஷீட் காரணமாகத் தள்ளித் தள்ளிப் போய்க் கொண்டிருந்ததாம். ஒருவழியா இந்த 'மல்லு வேட்டி மைனர்' படம் முடிந்தவுடன் தேதி கொடுத்து விடலாம் என்று நினைத்துக் கொண்டிருந்தாராம். இப்போது ''ஐந்து மாத கர்ப்பிணி; நீ பிளைட்லே எல்லாம் போகக் கூடாது'' என்று கூறுகின்றார்களாம்!

●● ஒச்சாயிக் கிழவி (மண் வாசனை) யிலிருந்து ஒப்பாரிக் கிழவி (மனித ஜாதி) வரை நிறையக் கிழவி பாத்திரங்களிலே நடித்துள்ள காந்திமதிக்கு, நாயகனுடன் டூயட் பாடி நடிக்கும் இளம் மங்கை வேடத்தில் நடிக்க வேண்டும் என்று ஓர் ஆசை மனசுக்குள்ளே இருந்ததாம். (வெளியில் சொல்ல பயம்!) இப்போது அந்த ஆசை நிறைவேறியுள்ளது. பட்டுப் பாவாடை, இரட்டைப் பின்னல் சகிதம் 'இளம்' சிட்டாக, சத்தியராஜுக்கு ஜோடியாக நடிக்கிறார்! இப்படி ஒரு கதாபாத்திரத்தைக் காந்திமதிக்கென்றே படைத்துள்ளார் கலைமணி.



* 'இளம் சிட்டு!'

●● நடிகை சீதா மிகவும் குதூகலமாக இருக்கிறார். அவரும் கணவர் பார்த்திபனும் இணைந்து நடித்த 'புதிய பாதை' படத்திற்கு மத்திய அரசு விருது கிடைத்த போது இருவரும் சேர்ந்து டெல்லி போய் விருது வாங்கி வந்ததுதான் வாழ்க்கையில் ரொம்பவும் சந்தோஷமான விஷயமாம்.

●● 'வண்ணக் கனவுகள்', பூந்தோட்டக் காவல்காரன்' போன்ற படங்களில் இரண்டாவது மூன்றாவது கதாநாயகன் என்று வந்து போய்க் கொண்டிருந்த ஆனந்த் முதல் முறையாகப் பிரதான கதாநாயகனாக நடிக்கின்றார். தமக்கென்று ஒரு பாணியை உருவாக்கி நடிக்க முனைந்துள்ளார் ஆனந்த். தம் வாழ்க்கையின் திருப்புமுனையாக 'நிலாப் பெண்ணே' என்ற படம் அமையும் என்று கூறுகின்றார்.

— ஜூலி, எஸ். பாலு

நிக்கோலேவ், செவஸ்டனோவ் இருவரும் சூயெஸ் — 9 விண்வெளிக் கப்பலில் உலகைச் சுற்றியபடியே, ஒரு செஸ்போர்டை வைத்துக் கொண்டு வெள்ளைக் காய்களை நகர்த்தினார்கள்.



கீழே பூமியில், ஆணை அலுவலகத்தில் ஒரு ராணுவ வீரரும் மற்றொரு விண்வெளி வீரரும் கறுப்புக்காய்களை நகர்த்தினார்கள். விண்வெளிக்கும் பூமிக்கும் இடையே செய்தித் தொடர்பு மூலம் நடந்த இவ் விளையாட்டு ஆறு மணி நேரத்துக்குப் பின் வெற்றி தோல்வி இல்லாமல் முடிந்தது. விண்வெளியில் நடந்த முதல் விளையாட்டு இதுதான்!

ஆதாரம்: ''சோவியத் ஸ்போர்ட்''
தகவல்: தக்கோலம் அ. முஸ்தபா.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே
ஓய்வு நேரத்தில் விவேகானந்தா
கல்வி நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள
எனது முகவரிக்கு தபால்
முறைப் பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப மனுவையும்
உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு
எஸ். செல்வகணேஷ்

WRITE PIN CODE IN ADDRESS




விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு,
சென்னை PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

**"நேர்முகப் பயிற்சியும் உண்டு"**

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால் பெட்டி எண் : 4986, 9. மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.

# அதிர்ஷ்ட தேவதை

## 7

தனம் ஒரிரு விநாடிகள் ஆடிப் போனாள். ரமணி அவளுடைய வீட்டு வாயிலில் வந்து நிற்பான் என்று கனவில் கூட நினைத்துப் பார்த்ததில்லை. ரங்கன் ஆபீஸில் இருக்கும் போது, இவன் என்ன காரணமாய் இங்கே வர வேண்டும்?

அவளுடைய நெஞ்சு, குற்ற உணர்வில் படபடப்பது போல படபடத்தாலும், இயல்பான முரட்டுத்தனத்தில், ''வாங்கய்யா, உள்ளே வாங்க!'' என்றாள்.

ரமணியின் புன்முறுவல் லேசான சிரிப்பாக மாறி ஒலித்தது.

''பிராட்வேயில் ஒரு கம்பெனிக்குப் போக வேண்டியிருந்தது. நான் பார்க்க வேண்டிய ஆள் வர இன்னும் அரை மணி நேரத்துக்கு மேலே ஆகும்னாங்க. திடீர்னு உன் ஞாபகம் வந்தது. அதான் வந்தேன்.''

தனம் ஒரு பாயைப் போட்டாள்.

''நீங்க ஒக்கார நாற்காலி, ஏன் ஒரு முக்காலி கூட இல்லீங்க...''

''பரவாயில்லே... ஹங், உன் ஆபரேஷன் நல்லபடியா முடிஞ்சுதுன்னு ரங்கன் சொன்னான். ஆண்டவனுக்கு நன்றி சொன்னேன். நான் வேறு என்ன செய்ய முடியும்?''

''நீங்க இன்னும் உட்காரலீங்க...''

''விட மாட்டே போலிருக்கு!'' ரமணி உட்கார்ந்தான்.

''ஒரு நிமிஷம் இருந்தீங்கன்னா, ஓடிப் போய் சோடா கலர் ஏதானும் வாங்கிட்டு வந்திருவேன்'' என்றாள் தனம். இவனைப் பகைத்துக் கொள்ளக் கூடாது என்பதை அவள் அறிவாள்.

''ஓடறதா? நீயா? ஒரு மாசத்துக்கு நீ வேலையே செய்யக் கூடாதே? இதை உன் டாக்டர் சொல்லலியா?''

''மொதல் மொதலா நம்ப ஆட்டுக்கு வந்திருக்கீங்க... எதுவுமே சாப்பிடாமப் போனா எப்படி?''

''யார் சொன்னா, நான் முதல் தடவையா வர்றேன்னு? மயில்சாமியைப் பார்க்க ரெண்டு மூணு தடவை வந்திருக்கேனே? ஆனா அப்பவெல்லாம் நீ வீட்லே இருக்கலே.''

''அப்பா சொன்னதே இல்லே.''

''சரி, அதை விடு. தனம், ரங்கன் எப்படி இருக்கான்? உன்னைத்தான் கட்டிப்பேன்னு ஒத்தக் கால்லே நின்னான். உன் உடம்பிலே நன்னா சதை பிடிக்கட்டும், அப்புறம் பார்க்கலாம்னு புத்தி சொன்னேன். அவன் கேட்கலே. நீ ஆக்கிப் போடற சோத்திலே வஸ்தாது மாதிரி ஆயிடுவேன்னு மார் தட்டினான். ஆனா பாவம் நீ! ஒரு மாசத்துக்கு அவன்தான் உனக்குச் சோறாக்கிப் போடணும்.''

''அவரு ரொம்ப நல்லவரு, ஐயா.''

''எங்கிட்டேயே சொல்றியா?''

ரமணி சிரித்தான்.

''நான்னா உசிர்'' என்றாள் தனம்.

''தெரியும். இத்தனை நாளா அவன் உசிர் பணத்து மேலே இருந்தது. இப்ப அது உன்கிட்ட வந்துடுத்து.''

''அவர் பணத்தை நீங்கதான் பத்திரப்படுத்தி வைச்சிருக்கீங்களாம். அப்பா கலியாணத்துக்கு முன்னாடியே சொல்லிச்சு.''

''ஆமாம். மொதல் மொதலா சம்பளம் வாங்கினதும் அதை என் கையிலேதான் கொடுத்தான். அவன் பேர்ல பாங்க்ல கட்டச் சொன்னான். இந்த நாலு வருஷத்தில ஒரு தடவை கூட எடுத்ததில்லே. கலியாணம் நிச்சயமானப்புறம்தான்...''

அவன் முடிக்கவில்லை.

''இப்ப எவ்வளவு இருக்கு, ஐயா?''

''மொதல்ல ஒரு ஆயிரம். அப்புறம் ஒரு ஆயிரம். போன வாரம் ஆயிரத்து இருநூறு. பாக்கி ஐந்நூறோ அறுநூறோ இருக்கும். ஏன் கேட்கறே?''

''இல்லே கேட்டேன்.''

''இன்னிக்குக் கூட ஒரு ஐந்நூறு வேணும்னு வந்தான். நான் எதுக்குன்னு கேட்டேன். நீ கொண்டு வரச் சொன்னேன்னான்.''

''குடுத்தீங்களா?''

''இல்லே.''

தனத்தின் முகம் சுருங்கியது. ஆனால் கோபமும் கண்ணில் பிரதிபலித்தது.

''ஏன் குடுக்கலே?''

''என்ன செலவு ஐந்நூறுக்குன்னு தெரிஞ்சுக்கத்தான். அவன் சொல்லலே.''

''அவரு பணம். அவரு கேட்டாக் கொடுக்க வேண்டியதுதானே?''

''இன்னிக்கு ஐந்நூறு கேட்டவன் நாலு நாளுக்கு அப்புறம் இன்னும் ஆயிரம் ரெண்டாயிரம்னு வந்து நின்னா?''

''பாக்கி ஐந்நூறோ அறுநூறோன்னு சொன்னீங்களே... எப்படி ஆயிரம்

ரா.வி.ஆர்.

ரெண்டாயிரம்னு கேட்க முடியும்?''

''முடியுமே? இந்தப் பணம் அவனுடைய சேவிங்ஸ் அகௌண்ட்ல இருக்கிற பணம். இது தவிர ஆறாயிரம் ரூபா மூணு வருஷத்துக்கு எடுக்க முடியாதபடி பிக்சட் டெபாசிட்ல போட்டு வைச்சிருக்கான்.''

''பாவி சொல்லவே இல்லியே?''

''அவன் சொல்லாமப் போனா என்னம்மா? நான்தான் சொல்லிட்டேனே!''

''இத்தனை நாளா அவருக்கு நீங்க ஆதரவா இருந்தீங்க. இப்ப நான் அவரோட ஒய்ப்பு. இனிமே நான் அவர் விவகாரங்களைக் கவனிச்சுக்கறேன். அதனாலே...''

''அதனாலே?''

''ஆறாயிரம் ரூபா கணக்குப் புத்தகத்தையும் என் கையிலே குடுத்துடுங்க.''

''அது புஸ்தகம் இல்லே. பாங்க் ரசீது!''

''அது என்னவா இருந்தா என்ன. என் கையிலே குடுத்துடுங்க.''

''அதான் முறை. ஆனா அவன் பேர்ல எனக்கு ரொம்ப அக்கறை இருக்கு.''

''என்ன சொல்றீங்க?''

''இந்தக் கம்பெனியிலே வேலை கொடுத்தவனே நான்தான், தனம்.''

''அதுக்காக?''

''ரசீது என் கையிலேயே இருக்கட்டும்.''

''குடுக்க மாட்டீங்களா?''

''நீ ஊதாரித்தனமா செலவு செய்யாத பெண்ணா இருந்தா, கலியாணம் முடிஞ்ச கையோட நானே வந்து கொடுத்திருப்பேன்.''

''யோவ், மரியாதை கெட்டுப் பூடும். நீ யார்யா நான் ஊதாரின்னு சொல்றதுக்கு.''

ரமணி சிரித்தான்.

''உனக்கு ஆபரேஷன் பண்ணினாங்களே, டாக்டர் அம்புஜம். அவங்க எனக்கு உறவுக்காரி.''

''யோவ்!''

''இது உனக்கு முதல் ஆபரேஷன் இல்லே...''

''யோவ், யோவ்! உன்ன...''

''நீ முன்னேயும் சரி, இப்பவும் சரி, அவகிட்ட சொன்னதெல்லாம் ரிஜிஸ்டர்ல பதிவாயிருக்கு. உன் கையெழுத்தும் இருக்கு.''

''யோவ், நீ பயம் காட்றியா?''

ரமணி சிரித்தான்.

''நான் சலசலப்புக்குப் பயப்படாதவன் தனம். இனிமே நீ என் சிநேகிதன் ரங்கனை அழ வைச்சே, நானும் ரௌடிக்கு ரௌடியாயிடுவேன். இதை நினைவிலே வைச்சுக்க.''

''இன்னாய்யா செஞ்சுப்பூடுவே?''

வீராப்பாய்க் கேட்டாளே தவிர, தனத்தின் குரலில் நடுக்கம் தொனித்தது.

''நீ அவன்கூட ஒழுங்காக் குடித்தனம் செய்ஞ்சா, மாசா மாசம் உன் வீட்ல அடுப்பு எரிய பணம் வரும். ரங்கன்கிட்ட மோதினே, அது எங்கிட்ட மோதின மாதிரி. அடுத்த வாட்டி ஆபரேஷன் பண்ணிக்க உன் கையிலே சல்லிக்காசு இருக்காது... நான் வரேன்.''

''ஐயா!''

''என்ன?''

''அவர் கையிலே என்ன ஆபரேஷன்னு சொல்லிடாதே ஐயா... மனம் வெடிச்சுப் போய் கொளம் குட்டையிலே விழுந்துடும்.''

''நீ ஒழுங்கா இருந்தா சத்தியமாச் சொல்ல மாட்டேன். அது சரி, உனக்கு எதுக்கு ஐந்நூறு ரூபா?''

தனம் பதில் கூறவில்லை. திடீரென ஒரு பொய்யும் உதயமாகவில்லை.





மானேஜர்: இந்த மாதிரி நீங்க நடத்துக்கு விங்கன்னு நான் எதிர்பார்க்கவே யில்லை. கேட்கவே வெட்கமா இருக்கு!

கிளார்க்: என்ன ஸார், சொல்றீங்க?

மானேஜர்: ஐம்பது ரூபாய் லஞ்சம் வாங்க வேண்டிய விஷயத்துக்கு வெறும் பத்து ரூபாய் வாங்கி இருக்கிங்களே!

— எஸ். முகம்மது யூசுப்.

[redacted]

"இந்தா... நூறு ரூபா.. டானிக் கினிக் வாங்கிச் சாப்பிட்டு, ஒடம்பைத் தேத்திக்க.. ரங்கனையும் கவனிச்சுக்க."

அவள் பதில் பேசாமல் பணத்தை வாங்கிக் கொண்டாள்.

இரவு எட்டு மணிக்குக் கதவு தட்டப்படும் ஓசை கேட்க, ரங்கன் பீதியுடன் எழுந்து கதவைத்திறந்தான். தனம் அவனைக் கிழிக்கப் போகிறாள் என்ற எண்ணம் பயமாக மோதி, கையை நடுங்க வைத்தது.

"யோவ், என்னாய்யா அப்படிப் பார்க்கிறே... அல்லாம் ஓட்டல்லேந்து வாங்கியாந்தேன். என்னாலதான் ஒனக்கு சோறாக்கிப் போட முடியலே... நீ என்னதான் தும்பே? இதைப் பிடி...."

அவள் கொடுத்த பையை ரங்கன் வாங்கிக் கொண்டான். தன் கண்களையும் காதுகளையும் கூட அவனால் நம்ப முடியவில்லை. அவன் மனைவி தனமா இது?

"பிரியாணி, பரோட்டா, குர்மா அல்லாம் வாங்கியாந்திருக்கேன்."

"உனக்கு?"

"அஞ்சாறு நாளுக்கு நான் ரொட்டியும் ஆர்லிக்ஸூம்தான் சாப்பிடலாம்னு டாக்டர் அம்மா சொல்லியிருக்காங்க. அதான் ரொட்டி மட்டும் வாங்கியாந்தேன். குந்துய்யா, போடறேன்."

அவன் உட்கார்ந்தான்.

"தனம்."

"இன்னாய்யா?"

"என்னாலே, நீ கேட்ட ஐந்நூறு ரூபாப் பணம் கொண்டு வர முடியலே."

"பணம் கெடக்குதய்யா, நீ துன்னு."

"இதுக்கெல்லாம் ஏது பணம், தனம்?"

"ஏன்யா நீ எவ்வளவு என் கையிலே குடுத்திருக்கே? நான் அல்லாத்தையுமா செலவழிச்சேன். நூறு ரூபா இருந்திச்சு. ஹங், நீ ஆசையா புதன் கிளமை புதன் கிளமை பேப்பர் வாங்குவியே அதுவும் வாங்கியாந்தேன்."

"பேப்பரை மொதல்ல பாக்கறேன், தனம்."

"முடியாது. பரோட்டா ஜூடா இருக்கு. நீயும் நானும் சேர்ந்து சாப்பிடலாம்."

ரங்கனால் அவளுடைய பேச்சைத் தட்ட முடியவில்லை. ஹரியானா, ராஜஸ்தான் லாட்டரி முடிவுகள் இன்றைய தினசரியில் வெளியாகியிருக்கும். அவனுக்கு எங்கே பரிசு விழுந்திருக்கப் போகிறது? சாப்பிட்ட பிறகு பார்த்துக் கொண்டால் போகிறது. அதை விடப் பெரிய அதிர்ஷ்டமாய், தனம் இதுவரையில் காட்டியிராத அன்பைப் பொழிகிறாள்! அவளுக்கு மட்டும் ஆபரேஷன் நடந்திரா விட்டால், இன்று இரவு எவ்வளவு ஆனந்தமாக இருந்திருக்கும்?

ஒரு பரோட்டாவைச் சாப்பிடுவதற்குள் வயிறு கனத்தது.

"தனம்!"

"என்னய்யா?"

"பிரியாணி கெட்டுப் போகாதில்லே? நாளைக்குச் சாப்பிடறேன்."

"ஏன்யா?"

"இதைத் துன்னு தண்ணி குடிச்சதிலே, வயிறு 'கம்'னு ஆயிடுச்சு."

"உன் இஷ்டம்" தனம் ரொட்டியை ஹார்லிக்ஸில் முக்கி எடுத்துச் சாப்பிடலானாள்.

அன்றைய மாலை தினசரியைப் பிரித்துப் பார்ப்பதற்கு முன், ரங்கன் தன்னுடைய பெட்டியைத் திறந்து டயரியை எடுத்தான்.

"இன்னாய்யா பாக்கறே?"

"ஒண்ணுமில்லே தனம். லாட்டரிச் சீட்டு நம்பரையெல்லாம் இதிலேதான் ரமணி குறிச்சுக் குடுப்பார்."

"நீ லாட்டரிச் சீட்டு வாங்கியிருக்கியா?"

"அஞ்சு வருசமா வாங்கறேன்."

"பிரைஸ் அடிச்சிருக்கியா?"

"ஒரு வாட்டி கூட ஒரு அம்பது ரூபா பரிசு கூட விழுந்ததில்லே."

"நமக்கெல்லாம் விளாதுய்யா. அதுக்குத் தனி ராசி வோணும்."

"அஞ்சு வருசம் முன்னாடி கும்பகோணத்திலே ஒரு கிளி சோசியன் சொன்னான் நான் பணக்காரன் ஆவேன்னு."

"யோவ், நீ என்ன ஆளுய்யா. பத்துப் பைசா கொடுத்தா, அந்த ஆளு கிளிக்கு நெல்லையோ பொரியையோ குடுப்பான். அது பத்துப் பன்னண்டு சீட்லே ஒரு சீட்டை இழுக்கும். அதை இவன் ராகத்தோட படிப்பான். ஒரு எளவும் புரியாது."

"எனக்குப் புரிய வைச்சான். கொஞ்சம் இரு, தனம்... ஹங், ராஜஸ்தான் லாட்டரி... நம்பர் AB 2987654 இரு. பேப்பரைப் பாக்கறேன்... ராஜஸ்தான் லாட்டரி... தனம்...

# புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும் ஹமாம்!



கண்டுகொள்வீர் ஹமாம் புரியும் ஜாலத்தை,
இதுவரை காணாத கூடுதல் புத்துணர்ச்சியும்
பொலிவும் உமக்கு, புதுமை குன்றாமல்
நீடித்துக் கமழும் நறுமணம், சொகுசான
நுரைவளம்—வழங்கும் என்றும் புதுமையான
ஹமாம், புத்துணர்ச்சியையும்
பொலிவையும் உணருவீர்.

## ஹமாம்

குடும்ப சோப்




டாட்டா தயாரிப்பு

CLARION/B/T/23/203 TAM

தனம்... இதப் பாரு... பாரு, தனம்... இருபத்தஞ்சு லட்சம் ரூபா விழுந்திருக்கு... மொதப் பிரைஸ் அடிச்சுட்டேன், தனம்!''

''யோவ் சரியாப் பாருய்யா.''

''நீயே பாரு... இதோ பேப்பர்ல வந்த நம்பர். **AB 2987654**... இங்க பாரு, டயரியிலே ரமணி சார் குறிச்சுக் குடுத்த நம்பர்!''

''ஆமாம். ரெண்டும் ஒரே நம்பரா இருக்கு. இப்ப டிக்கட்டை எடு. அதையும் பார்த்துடலாம்.''

''டிக்கட் ரமணி சார் கையில இல்ல இருக்கு.''

''அந்த ஆள் கையிலயா?''

''ஆமாம், தனம். நான் வாங்கற எல்லா டிக்கட்டையும் அவர்தான் பத்திரமா வைச்சுப்பாரு.''

''அடப்பாவி!''

''ஏன் தனம்?''

''அந்த ஆளு உன்னை ஏமாத்திட்டா?''

''என்ன பேச்சுப் பேசறே, தனம்? அவர் எனக்குக் கடவுள் மாதிரி.''

''கடவுள் கூடப் பணம்னா ஏமாத்திடும்யா. அதுசரி, இருபத்தஞ்சு லட்சம்னா எவ்வளவு?''

''எனக்கே தெரியலே, தனம். ரமணி சார் சொன்னாத்தான் புரியும். நாளைக்கு ஆபீஸ் போனதும் அவரை விட்டே லாட்டரிச் சீட்டைப் பணமாக்கிடலாம்.''

''யோவ், இன்னாய்யா நீ, வெவரங் கெட்ட ஆளா இருக்கே.. இப்பவே அந்த ஆள் ஊட்டுக்கு ஓடுய்யா. டிக்கட்டை வாங்கியாய்யா!''

''வேணாம் தனம். அவர் ஏமாத்த மாட்டாரு. நல்லவரு.''

''யோவ் பேப்பரைப் பாருய்யா. அஞ்சு லட்சம், ஒரு லட்சம், அம்பதாயிரம் பத்தாயிரம் ஆயிரம்னெல்லாம் போட்டிருக்கு. அல்லாத்தையும் விட இருபத்தஞ்சு லட்சம் ஜாஸ்தின்னு உனக்குப் படலே!''

''படுது, தனம்.''

''யோவ், அந்த ஆள் முழியே எனக்குப் புடிக்கலே, ஓடுய்யா.''

''அவரு மயிலாப்பூர்ல அபிராமபுரத்திலே இருக்காரு.''

''எந்த டில்லியிலே இருந்தா உனக்கு இன்னாயா? போய் டிக்கட்டை வாங்கியா... மூணாவது ஊட்ல மாணிக்கம்னு ஒருத்தரு இருக்காரு. ஸ்கோல் வாத்தியாரு. படிச்சவரு. நல்லவரு. அவர் கையில சொல்லி, நாம பணத்தை வாங்கிக்கலாம்.''

''மணி ஒம்பதுக்கு மேல ஆயிடுச்சு தனம். நாளைக்கு விடிஞ்சதும் போறேன்.''

''துப்புக்கெட்ட மனுசனாயிருக்கியே.. ஒரு ஆட்டோ பிடிச்சு ஓடுய்யா. நானும் கூட வரேன்.''

''வேண்டாம் தனம். உன் ஒடம்புக்கு ஆவாது. நானே போறேன்.''

''அந்த ஆளு கையில பிரைஸ் அடிச்ச விசயத்தைச் சொல்லிடாதே. அப்புறம் அது உஜாராயிடும். அவர்ட்ட குடுத்து வைச்சிருக்கிற அல்லா டிக்கட்டும் வோணும்னு சொல்லி வாங்கியா. அப்பத்தான் ஒன் பேர்ல சந்தேகம் வராது.''

ரங்கன் தயங்கினான். இந்த உலகமே ரமணியைத் தூண்டினாலும், அவன் ஏமாற்ற மாட்டான். இதுவரையில் நல்லதையே நினைத்து, நல்லதையே செய்து வரும் ரமணி துரோகம் செய்ய மாட்டான். இது சத்தியம்! ரமணியின் மனத்தின் பரிசுத்தத்தை உணர தனத்துக்கு ஏது வாய்ப்பு? அதுதான் இப்படிப் பேசுகிறாள்.''

''யோவ், நீ போக மாட்டே?''

வேறு வழியில்லாமல் அவன் ரமணியின் வீடு செல்லப் புறப்பட்டான். கடைசி பஸ் அவனுக்குக் கிடைத்தது.

இரவு அவனால் திரும்பி நடக்க முடியவில்லை. கண்கள் இருண்டன. கால்கள் பின்னின.

பணம் என்றால் கடவுள் கூட ஏமாற்றும் என்றாள் தனம்! எப்பேர்ப்பட்ட உண்மையை அவள் கூறி விட்டாள்?

ரமணி, இடீரென்று வெளியூர் சென்றிருப்பதாக அவனுடைய தாயார் மூலமாகத் தெரிய வந்தது. தான் கொடுத்து வைத்திருந்த லாட்டரி டிக்கட்டுகளை எடுத்துத் தருமாறு கெஞ்சினான் ரங்கன். ஏற்கெனவே ரங்கனை அறிந்திருந்த அவளும் அலமாரியைத் திறந்து, ஒரு நீண்ட உறையை அவனிடம் கொடுத்தாள்.

பழைய பழைய டிக்கட்டுகளெல்லாம் அழகாகக் கோர்த்து வைக்கப்பட்டிருந்தன. சமீபத்தில் வாங்கிய ஹரியானா டிக்கட்டும் இருந்தது. ஆனால் —

**AB 2987654** இல்லை!

(தொடரும்)

திருச்சி உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குச் சென்றிருந்தேன். சுவாமி தரிசனத்திற்கு வந்திருந்த ஒருவர், காலணியைக் கழற்றித் தன் தோள் பையில் செருகிக் கொண்டு கோவிலுக்குள் செல்வதைப் பார்த்து அதிர்ந்தேன். கோவிலுக்குள் காலணிகளை எடுத்துச் செல்லக் கூடாது என்றுதானே பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள்? காலணியை விட்டுச் செல்வதால் அப்படியென்ன பெருஞ்செலவு வந்து விடப் போகிறது? ஏன் இந்தக் கஞ்சத்தனம்?

— தாயு. ஆண்டாள்.



# உலகம் பிறந்தது எனக்காக



படித்த படு நாகரிகமான இளம் தொழிலதிபர் சத்யராஜ் ஒரு பக்கம். வரதட்சிணைக் கொடுமையால் வாழ்விழந்த தங்கையை வாழவைக்கும் வெறியில் குடிகாரனாகி, தில்லுமுல்லு செய்தாவது சம்பாதிக்கும் கைநாட்டான சத்யராஜ் இன்னொரு பக்கம். இருவர் கதையும் ரயில் தண்டவாளம் மாதிரிப் பாதிப் படத்துக்கு மேல் ஓடி, அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாய் ஒன்று சேர்ந்து, ஒருத்தர் பிரச்னைக்கு ஒருத்தர் ஒத்தாசை செய்து மங்களம்... சுப மங்களம்.

செமை மசாலா. கான்டெஸா காரை பொலிபோடும் அளவுக்கு காஸ்ட்லி.

இரட்டை வேடத்தில் சத்யராஜ் பிசிறு தட்டாத வித்தியாசம் காட்டியிருக்கிறார் என்றாலும் கைநாட்டு சத்யராஜுக்குப் பங்கு கூடுதல். வித்யாவிடமும் தங்கை சரண்யாவிடமும் குழந்தையாய் என்ன அடக்கமாய்க் குழைகிறார்! பார்க் செய்து வைத்திருக்கும் ஸ்கூட்டர்களெல்லாம் தனது என்று ஒரு பட்டிக்காட்டுப் பேர்வழியை நம்ப வைத்து பேரம் பேசி ஐயாயிரம் கறந்தபோதும், எவருடைய பங்க் கடையையோ திறந்து போட்டுத் தன்னுடையது என்று ஒரு மலையாளியிடம் மூவாயிரம் ரூபாய் முழுங்கிய போதும் காட்டிய சாமர்த்தியமெல்லாம் ஒரு போலீஸ்காரரின் சைக்கிளை யாரோ ஓர் அப்பாவி தலையில் கட்டப் பார்க்கும் வேளையில் தவிடுபொடியாவது வேடிக்கை. தொட்டுக் கொள்ளும் ஊறுகாய், துணை நிற்கும் செந்தில்.

கான்வென்ட் தமிழாய்ப் பேசிக் கொண்டு மேல் விழுந்து கொஞ்சும் பேபி டால் ரூபிணியிடம் துளி ரியாக்ஷன் காட்டாத தொழிலதிபர் சத்யராஜ் அந்த அவஸ்தையிலிருந்து விடுபட்டு, தெருவிலே தொம்பைக் கூத்தாடி கௌதமி கம்பி மேல் நடந்து கொண்டிருந்த போது காரோட்டிச் சென்று முட்டுக் கழியைத் தட்டிவிட, அவர் கச்சிதமாய் அந்தத் திறந்த காரின் பின்சீட்டில் மல்லாந்து விழ, கூட்டத்தினரின் பாய்ச்சலுக்குத் தப்ப அப்படியே அவர் கெஸ்ட் ஹவுசுக்கு விரைந்து வந்து சேர்ந்து, மயங்கிக்கிடந்த கவர்ச்சிக் கௌதமியைக் கைலாகு கொடுத்துக் கட்டிலில் கொண்டு வந்து போட்டுக் கண்ணகலப் பார்த்துக் கொண்டு நிற்பது தூளான இளங்கிளை த்ரில்.

தங்கை சரண்யா படுபாந்தம். 'நீ நல்லா இருக்கணும்னுதான் சொல்றேன். குடிக்கறதை விட்டுடுண்ணே!' என்று வார்த்தைக்கு வார்த்தை ஜீவனும் முகத்திலே பாவமும் தந்து நெகிழ்த்தி விட்டார்.

லம்பாடி கௌதமி செமை காட்டுத்தனம். ஹைஹீல் ஷூவில் நடக்க அணைப்புக் கொடுத்து சத்யராஜ் பழக்கி விட்டு, அவர் நடைபழகிய பின்னும் அணைப்பைத் தவிர்க்காத போது, 'அதான் நானா நடக்கிறேனே அப்புறம் எதுக்கு இப்படி...' என்று கேட்கும் போது பார்வையில் படு குறும்பு.

கவுண்டமணி ஒரு குளறுபடியான காமிக் டிராக்.

சோ — மனோரமா திரும்ப ஜோடி சேர்ந்திருக்கிறார்கள். சோ அரசியல் குத்தலில் கலகலக்க வைத்தாலும், மனோரமாவை ஓரம் கட்டியிருக்கிறார்.

என்னமோ பெரிதாய் ஆர். டி. பர்மன் இசை என்று போட்டிருக்கிறது. சாறு பிழிந்த மாங்கொட்டையைச் சப்பிப் பார்க்கிற மாதிரி இருக்கிறது.

பாவம் ஸ்ரீவித்யா! மகன் சத்யராஜைக் கண்ணம் கண்ணமாய் அறைகிறாரே, அந்த ஓரிடத்தில் மட்டும்தான் அடையாளம் காட்டியிருக்கிறார்.

ரசிக பலவீனங்களுக்குத் தீனி போட்டு வசூல் நாட்டத்தில் குறியாய்த் தயாரிக்கப்பட்ட படம்.

— பி. எஸ். எஸ்.




# முடிவு... ...அவள் கையில்...

கடிகாரத்தைப் பார்த்தார் சாமிநாதன்.

ஆயிற்று இன்னும் அரை மணி நேரத்தில் அவர்கள் வந்து விடுவார்கள். அன்றைய பெண் பார்க்கும் நிகழ்ச்சி வெறும் சம்பிரதாய நிகழ்ச்சிதான்.

பெண் ஏற்கெனவே பிள்ளையைப் பார்த்தாயிற்று. பிள்ளையும் ஏற்கெனவே பெண்ணைப் பார்த்தாயிற்று. ஒருவரையொருவர் விரும்பியும் ஆயிற்று. ஒரே அலுவலகத்தில் அவன் மேலதிகாரியாக இருந்தான். அவள் அவனுடைய டைப்பிஸ்ட்டாக இருந்தாள். கூடவே வழக்கமான பொருளாதார ஏற்றத்தாழ்வும் இருந்தது.

ஒரு நாள் தயங்கித்தயங்கித் தன் மன அந்தரங்கத்தை அவள் திறந்து காட்டிய போது, சாமிநாதன் உடனடியாக முடிவுக்கு வந்தார் -- இந்தக் கல்யாணம் நடக்கப் போவதில்லை. அதை வெளிப்படையாகச் சொல்லவும் செய்தார்.

''ஏம்மா, ரெண்டு வேளைச் சாப்பாடு நிச்சயமா உண்டுங்கற நிலைமையே உனக்கு ஒரு வேலை கிடைச்சப்புறம்தான். இதுல கல்யாணச் செலவுக்குப் பணத்துக்கு எங்கே போறது?''

உண்மைதான். நினைவு தெரிந்த நாட்களிலிருந்தே வறுமையின் உறவாடல் அவளுக்கு மிகவும் பழக்கமாகிப் போயிருந்தது. நிரந்தரமாக ஒரு வேலையில் சாமிநாதன் இருந்ததாக அவள் கனவில் கூட அறிந்ததில்லை.

பின்னர், விவரம் புரியத் தொடங்கிய போது, அதன் காரணத்தை அவள் யோசித்துப் பார்த்ததுண்டு. அவரிடம் ஏதோ பலவீனம் இருந்தது என்பது மட்டும் புரிந்தது. அது என்ன என்பதைக் கண்டறிய முடியவில்லை. மனம் திறந்து எல்லாவற்றையும் பேசும் அம்மாகூட அந்த ஒரு விஷயத்தில் மௌனம் சாதித்து வந்தாள்.

இயல்பாகவே அவள் புத்திசாலி. வளர, வளர, கல்வியும் உலக ஞானமும் பெருகப் பெருக அவள் புரிந்து கொண்டாள். அப்பாவின் ஒரு பகுதி வாழ்க்கை கருப்பானது. அது அம்மாவுக்கும் தெரியும். ஆனால் அவள் தெரிந்து கொள்வதை அம்மா

**அபர்ணா நாயுடு**

விரும்பவில்லை....

இதை உணர்ந்து கொண்டபோது நாசூக்காக ஒதுங்கிக் கொண்டாள். அது அவளுக்குச் சம்பந்தமில்லாத விஷயம். அதைக் கண்டறிவதற்காக ஊடுருவ முயற்சி செய்வது தேவையில்லாத விஷயம்.

ஆனால் — அதன் பின் அப்பாவிடம் முழுமையாக ஒட்ட முடியவில்லை. வளரும் குழந்தைகளுக்கு 'அப்பா' என்பவர் ஓர் ஆதர்ச உருவம். அதில் எந்த விதக் குறையும் தென்பட்டு விடக் கூடாது என்பதற்காக அம்மா மறைத்துவிட்ட 'உண்மை' அவளை அவரிடமிருந்து விலகிப் போகச் செய்தது. வெளியே அவள் எதையும் காண்பித்துக் கொள்ளவில்லை. என்றாலும், மனத்தளவில் அந்த விரிசல் விசாலமடைந்துதான் வந்தது.

அவளுக்காக, அவள் வளர்ச்சிக்காக, அவளுடைய முன்னேற்றத்துக்காக அவர் இதுநாள் வரையில் எதுவுமே செய்ததில்லை. அவராலேயே மறுக்க முடியாத உண்மை அது. அதுதான் போகட்டும் என்றால், அவளுடைய மகிழ்ச்சிக்குக் குறுக்கே நிற்காமலாவது இருக்கலாம் அல்லவா?

''கல்யாணச் செலவுக்குப் பணத்துக்கு எங்கே போறது?''

இந்த ஒரு கேள்வியிலேயே அவருடைய எண்ணப் போக்கு அவளுக்குப் புரிந்து விட்டது. கல்யாணமில்லாமல், அவளுக்கென்று ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொள்ளாமல், அவள் உழைத்துச் சம்பாதித்துக் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். அவர் வேளைக்குச் சாப்பிட்டுக் கொண்டு வெட்டிப் பொழுதாகக் காலத்தை ஓட்டிக் கொண்டிருக்க வேண்டும்.....

இந்த எண்ணம் எழுந்த போது, முதல் முறையாக அவள் உள்ளம் அப்பாவுக்கெதிராகப் பாறையாக இறுகியது. சொன்னாள்.

''கல்யாணச் செலவு பத்தி நீங்க கவலைப்பட வேண்டியதில்லை. அந்த அவங்களே பார்த்துப்பாங்க. இன்னும் ரெண்டு நாளில சம்பிரதாயமாப் பெண் பார்க்க வருவாங்க.''

சொல்லி விட்டு அந்த இடத்தை விட்டுப் போய் விட்டாள்....

அடுத்த நாள் அந்தப் பையன் வந்தான். அவரிடம் பேசினான். அந்தத் திருமணத்துக்கு அவருடைய சம்மதம் கோரினான். அந்தக் கல்யாணத்தினால் அவருக்கு ஏற்படவிருந்த வருமான இழப்புக்குத்தான் ஈடு செய்து விடுவதாகக் கூறினான். அது பற்றிய விவரங்களை அவன் மனம் திறந்து சொன்ன போது —

சட்டென்று முடிவுக்கு வந்தார்.

அந்தக் கல்யாணத்தினால் அவருக்கு லாபம்தான். அது மட்டுமில்லை. அதையே காரணமாகக் காட்டி லாபத்தை அவரால் பெருக்கிக் கொள்ளவும் முடியும். அதற்கான வழி முறைகள் அவருக்கு அத்துபடி. எனவே —

''நாளைக்குப் பெண் பார்க்க வரீங்க... இல்லையா?''

''ஆமாம். ஒரு சம்பிரதாயத்துக்காகத்தான். என்னுடைய விருப்பத்தை நிறைவேத்தறது ஒண்ணுதான் அம்மாவோட நோக்கம். அது மட்டுமில்லை. உங்க பெண் சுசீலாவை ஏற்கெனவே அம்மா பார்த்து அவளுக்குப் பிடிச்சுப் போயாச்சு.''

''அது எப்போ?''

''சுசீலாவைப் பார்க்கணுங்கறதுக்காகவே அம்மா ஒரு நாள் ஆபீசுக்கு வந்திருந்தா....''

அவன் போன பின்னரும், வெகு நேரம், நடக்கவிருந்த திருமணத்தினால் தனக்குக் கிடைக்கவிருந்த வசதிகள் குறித்துக் கணக்கிட்டுக் கொண்டிருந்தார் சாமிநாதன்.

**வா**சலில் கார் வந்து நின்றது.

சமையலறைக் கதவருகே நின்றிருந்த சாமிநாதன் அங்கிருந்தே ஜன்னல் வழியாகப் பார்வையை ஓடவிட்டார். முதலில் அந்தப் பையன்தான் இறங்கினான். அவனைத் தொடர்ந்து இறங்கிய அவன் அம்மா....

'லோசனியா அது?

படீரென்று பின் மண்டையில் ஓங்கி அடி விழுந்த உணர்வு.....

ஆமாம். லோசனிதான். வருஷங்கள் முப்பது ஓடியிருந்தாலும் அப்படியே இருந்தாள். தலையில் மட்டும் நரை தெரிந்தது. மற்றபடி சொல்லும்படியான மாற்றம் எதுவுமில்லை. கண்ணாடி அணிந்திருப்பதை ஒரு மாற்றம் என்று சொன்னாலன்றி.

லோசனியின் மகனா அவன்? தெரி

---



''எங்கம்மா கல்யாணத்துக்குப் போக உங்க பட்டுப் புடைவை, சாட்டின் ஜாக்கெட், கம்மல், மூக்குத்தி, காசு மாலையை இரவலா வாங்கிக்கிட்டு வரச் சொன்னாங்க. அப்படியே ஒரு அம்பது ரூபாய் கைமாத்தும் கேட்டாங்க, மாமி!''

''இதோ பாரு... உங்கம்மாவுக்கு எதுக்கு வீண் சிரமம்...? அட்ரஸ்ஸை மட்டும் கேட்டுட்டு வா; நானே போயிட்டு வந்திடறேன்!''

— குமுதி. எஸ். சேதுராமன்.

யாமல் போயிற்றே! இப்போது அவள் முன் அவர் எப்படி நிற்க முடியும்? முகத்தை நேராக எப்படிப் பார்க்க முடியும்? தயக்கமின்றி எப்படிப் பேச முடியும்? இது எங்கே கொண்டு போய்விடப் போகிறது? ஐயோ....

"என்னங்க அப்படித்திகைச்சுப் போயிட்டீங்க?"

கேட்ட மனைவிக்குப் பதில் சொல்லத் தயங்கிய போது சுசீலா அ வ ச ர மா க வந்தாள்.

"அம்மா, அவங்க வந்தாச்சு."

"போய் அவங்களை உட்காரச் சொல்லு. பின்னாலேயே வரேன்."

மனைவியிடம் சொன்ன போது குரல் மிகமிகச் சன்னமாக ஒலித்தது. அவர்கள் அங்கிருந்து நகர்ந்ததும் அப்படியே சுவரில் சாய்ந்தார்.

**மூ**ப்பதாண்டுகளுக்கு முன் அ வ ர் காதலித்ததாக நடித்தபோது, அதை உண்மையென ஏற்று அவர் மீது நேசம் கொண்ட லோசனி —

கல்யாணத்துக்குத் தன் வீட்டில் ஒப்புதல் கிடைக்கவில்லை என்று பொய்யாக அவர் உரைத்த போது அதை நிஜம் என்று நம்பிக் கண்ணீர் வடித்துப் பதைத்துப் போன லோசனி —

ஊரை விட்டுப் போய் வேறெங்காவது கல்யாணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்தலாம் என்று அவர் கூறிய போது அந்த வார்த்தைகளில் நம்பிக்கை வைத்து, அதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்குத் தேவையான பணத்துக்கு வழி செய்வதற்காகத் தன் நகைகளைக் கழட்டி அவரிடம் கொடுத்த லோசனி —

அந்த நகைகளைப் பணமாக்கி அவர் ஊரை விட்டே ஓடிப் போய்விட —

உண்மை தெரிந்து, அவள் தந்தை போலீஸுக்குப் போய், பத்து நாட்களுக்குப் பின் அவர் பெங்களூரில் பிடிபட்டு, மோசடிக் குற்றத்துக்காகச் சிறைக்குப் போய், வெளி வந்த பின்னர் அந்த ஒரு காரணத்தாலேயே அவர் வாழ்க்கையில் நிலைப்பட முடியாமல் போய், திருமணம் நடந்து, பிறந்த ஒரே மகளின் வருங்காலம் பாழ்பட்டுப் போய் விடாமல் இருக்க வேண்டுமேயென அவரும் அவர் மனைவியும் அதை மூடி மறைத்து, இந்த அளவுக்கு அவள் முன்னேறிய பின்னர், இப்போது அனைத்தையுமே போட்டு உடைத்து விடக் கூடிய நிலையில் அடுத்த அறையில் வந்து அமர்ந்திருக்கும் லோசனி —

அவள் இப்போது அவரைப் பார்த்ததும் என்ன சொல்லப் போகிறாள்?

**கா**ப்பி எடுத்துப்போக அங்கே வந்த மனைவி, "என்னங்க, அந்தம்மாவும் பிள்ளையும் அங்கே உட்கார்ந்துட்டிருக்காங்க. இங்கேயே நின்னுக்கிட்டு என்ன செய்யறீங்க?" என்று கேட்ட போது, என்ன பதில்

## அருள்வாக்கு



**ம**நுஷ வேஷம் பிரமாதமாய்ப் போட்டவர் ராமர். ஸீதையை ராவணன் கொண்டு போய் எங்கே வைத்திருக்கிறான் என்று தெரியாத மாதிரியே நடித்தார். சொல்லி முடியாத துக்கப்பட்டார். அப்போது அவள் இருக்கிற இடத்தைக் கண்டுபிடித்துச் சொல்லி இவருக்கு உத்ஸாஹமும் தெம்பும் பலமும் தந்தது யார் என்றால் ஆஞ்ஜநேய ஸ்வாமிதான்.

ஸீதையைப் பிரிந்து இவர் பட்ட துக்கத்தை விட இவரைப் பிரிந்து ஸீதை பட்ட துக்கம் கோடி மடங்கு. பிரியபத்னி பக்கத்தில் இல்லையே, தன்னைப் பிரிந்து அவள் கஷ்டப்படுவாளே என்ற கஷ்டம் மட்டும்தான் ராமருக்கு. ஆனால் அவளுக்கோ இதோடு ராக்ஷஸ ராஜ்யத்தில் மஹாகாமுகனால் சிறை வைக்கப்பட்டிருப்பதால் மஹா கஷ்டமும் சேர்ந்திருந்தது. 'அபலா' என்றே ஸ்திரீக்குப் பெயர். ஸாக்ஷாத் ஜகன் மாதாவான மஹாலக்ஷ்மி ஸீதையாக வந்து அபலையிலும் அபலையாக அசோகவனத்தில் படாத கஷ்டப்பட்டு, அந்தக் கஷ்டத்துக்கு முடிவு பிராணனை விடுவதுதான் என்று சுருக்கு போட்டுக் கொள்ள இருந்த போது அவளுக்கு உத்ஸாஹத்தை, தெம்பை, பலத்தைத் தந்தது ஆஞ்ஜநேயர்தான்.

அவர் செய்த அரும்செயல்கள் ஒன்றில்லை இரண்டில்லை, ஆனால் இதற்கெல்லாம் சிகரமாக எதைச் சொல்லலாமென்றால் இந்த லோகம் முழுவதற்கும் ஸ்ரீயைக் கொடுத்து ஸௌபாக்யத்தைக் கொடுத்து அநுக்ரஹிக்கும் தாயார் மனம் குலைந்து மட்கிக் கிடந்தபோது ஆஞ்ஜநேய ஸ்வாமி காய்ந்த பயிருக்கு மழையாகப் போய் அவளுக்கு உயிரும் உத்ஸாஹமும் தந்தாரே அதுதான். "ஜானகீ சோக நாச நம்" என்று இதைத்தான் சிறப்பித்துச் சொல்கிறோம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

சொல்வது என்று புரியவில்லை.

உள்ளத்தில் பதைப்பு. உடலில் லேசான நடுக்கம். இதயத்தின் 'லப்டப்' வேகம் பிடித்துக் காதில் ஒலித்தது.

''ம்... போங்க சீக்கிரம். மரியாதைப் பட்டவங்க அவங்க. தப்பா நினைச்சுக்கப் போறாங்க.''

''கமலா... கமலா...''

மேற்கொண்டு வார்த்தைகள் வர மறுத்தன.

அதற்குள் கசிலாவே அங்கே வந்து, ''என்னப்பா, வாங்க'' என்று அழைத்த போது, தயங்கித் தயங்கித் தலை குனிந்து யந்திரமாய் நடந்து அவர்கள் அமர்ந்திருந்த இடத்துக்கு வந்து நிமிர்ந்தபோது அவர்கள் கண்கள் சந்தித்தன. கலங்கிய அவர் கண்கள் கல்மிஷமற்ற அவள் கண்கள்.

அவருடைய கரங்கள் அவளை நோக்கிக் குவிந்தன.

வணக்கம் சொல்லி, வரவேற்பா?

செய்து விட்ட துரோகத்துக்குக் கேட்கும் மன்னிப்பா?

தயவு செய்து உண்மையை வெளியிட்டு விடாதே என்கிற கெஞ்சுதலா?

அல்லது மூன்றுமா?

கலங்கிய கண்களோடு லோசனியைப் பார்த்த போது, அவள் அவரை அறிந்து கொண்டதாகவே தெரியவில்லை.

அவள் அங்கே இருந்த அடுத்த பத்து நிமிடங்களும் அவருக்கு நரகவேதனை. அவள் அதை உணர்ந்ததாகவே தெரிய வில்லை. பொதுவான உலக நடப்புகள் குறித்துப் பேசினாள். காப்பி சாப்பிட்டாள். விடைபெற்றாள். போய் விட்டாள்.

அவர்கள் போனதும் கமலா கேட்டாள்.

''என்னங்க, முடிவு சொல்லாமலே போயிட்டாங்களே!''

''முடிவு நம்ம கிட்டவா இருக்கு? அவகை யில இருக்கு!''

கூறிவிட்டு வெளியே போய் விட்டார்.

**ம**னம் பெரிதும் குழம்பியது. தளர்வாக நடந்து கொண்டிருந்த அவருடைய பார்வை யில் தெருவின் காட்சிகள் பதிய மறுத்தன.

''லோசனி, நீ ரொம்பவும் உயர்ந்துட்டே!''

மனத்துக்குள் சொல்லிக் கொண்ட போது, அவருடைய சிறுமை இமயத்தின் கனத்தோடு நெஞ்சில் அழுத்தியதை உணர முடிந்தது. கணத்தில் நிலைமையைப் புரிந்து கொண்டு, நொடியில் முடிவெடுத்து, ஒன்றுமே நடந்திருக்காதது போல அவர்களி டையே அவள் பேசிப் புறப்பட்ட போது ஏற்பட்ட திகைப்பு இன்னும் நீங்காமலே நிலைத்திருக்க —

எதிரே நின்றிருந்த பொதுத் தொலை பேசிக் கூண்டு பார்வையில் பதிய, சட் டென்று அவளிடம் பேச வேண்டும் என்கிற அவா உள்ளத்தை உந்தியது. ஏன், எதற்காக என்றெல்லாம் காரண — காரியங்களை யோசிக்க இடம் கொடாமல் புயல் வேகத் தில் பற்றிய அவா.

கூண்டினுள் நுழைந்தார். கட்டித் தொங்க விடப்பட்டிருந்த டைரக்டரியில் பையனின் பெயரை அவசரமாகத் தேடினார். எண்கள் தெரிந்ததும் காசை எடுத்து வைத்துக் கொண்டு சுழற்றினார்.

மறுமுனையில் அவளுடைய குரல் ''யாரு?'' என்று கேட்டபோது நெஞ்சில் படபடப்பு தோன்றியது. காசைப் போட்டார். ''லோசனி.... நான்.... நான்.... சாமி னாதன்....'' சொன்னபோது குரல் கம்மியது.

''நான் இப்போதான் உள்ளே வந்தேன்...'' அவசரமாகப் பேசினாள். ''பையன் காரை ஷெட்டில் விடப் போயிருக்கான். அவன் வரதுக்குள்ளே நான் பேசிடணும். நீங்க எதுக்காகக் கூப்பிட்டாலும், இப்போ குறுக்கே பேசாதீங்க. சொல்லவிரும்பறதைச் சொல்லிடறேன்.

''நீங்க செய்துட்ட துரோகத்துக்காக உங்க பெண்ணை நான் பழிவாங்கப்போறதில்லை. காரணம், உங்களுடைய குற்றத்துக்கு அவள் தண்டனை அடையறதுல எந்த நியாயமும் இடையாது. இன்னொண்ணும் இருக்கு. ஒருத் தரை முழுமனசோட விரும்பி, ஏமாந்து, அதனால ஏற்படற துன்பத்தையும் துக்கத் தையும் அனுபவ பூர்வமாக உணர்ந்தவ நான். அதனால இன்னொரு பெண்ணுக்கும் அதே மாதிரியான துக்கம் ஏற்படறதை — அதுவும் என் காரணமா ஏற்படறதை நான் விரும்பலை.

''இந்தக் கல்யாணம் முழுக்க முழுக்க என் பொறுப்பில நடக்கும். நீங்க ஒரு விருந் தாளியா மட்டும் வந்து தலை காட்டினாப் போதும். அதுக்கப்புறம் உங்களுக்கும் அவளுக்கும் எந்தச் சம்பந்தமும் இருக்கப் போறதில்லை. அவ இந்த வீட்டுப் பெண் ஆயிடுவா.....''

பட்டென்று மறுமுனையில் போன் வைக் கப்படும் ஒலி கேட்டது.

போனை அதன் தொட்டிலில் வைத்த சாமினாதன் தான் இருக்கும் இடத்தையும் மறந்து குலுங்கிக் குலுங்கி அழுதார். உள் மனத்தின் அழுக்குகள் அந்தக் கண்ணீரில் கரையத் தொடங்கின.

---

''குமாஸ்தா குப்புசாமிக்குக் குழந்தை மனசு....''

''அதுக்காக மேஜையில் சாய்ந்து தூங் காம ஆபீஸ்ல, தூங்கறதுக்கும் தூளி கட்டிக்கணும்னா, சம்மதிக்க முடியுமா என்ன?

— லலிதா செல்லப்பா



''தர்ட்டி ஃபார்ட்டி''
மத்யமர் : விமர்சனம்

**மத்யமன் தோண்டும் குழி!**

* இந்தக் கதையை மேலோட்டமாகப் பார்த்தால் மத்தியதர வகுப்பைச் சார்ந்தவன் ஒவ்வொரு விஷயத்திலும் எவ்வாறு ஏமாற்றப்படுகிறான் என்பது புரிகிறது. சிறுகச் சிறுக, அவன் சேர்த்து வைத்த பணம் எப்படி ஒரேயடியாக விரயமாகிறது என்பது புரிகிறது. கதை அப்படித்தான் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கொஞ்சம் ஆழமாகப் பார்த்தால் அவனை ஏமாற்றும் பி.டி.ஏ ஊழியர்



# தவளைப் பாய்ச்சல் நடை!

சிவண்ணாவும் ஒரு மத்தியதர வகுப்பைச் சார்ந்தவனே என்பது புரியும். ஆக, மத்தியதர வகுப்பைச் சார்ந்த ஒருவனே மற்றொரு மத்யமனுக்குகுழிதோண்டுகிறான்.ஏமாற்றப்பட்டவனின் ஆசைகள் கற்பனைகள், வேதனை, இயலாமை ஆகியவற்றை அழகாக எழுத்தாளர் சித்திரித்துள்ளார்.

தூத்துக்குடி — 4. பா.சங்கர்.

**தவளைப் பாய்ச்சல்!**

* சுஜாதாவின் உரைநடையில், சில சமயம் கம்ப்யூட்டர் லாங்க்வேஜ், சில சமயம் டெலகிராபிக் லாங்க்வேஜ், சில சமயம் அற்புதமான punches. இதற்கெல்லாம் மேல் "தவளைப்பாய்ச்சல்" நடை. இந்தத் தவளைப் பாய்ச்சல் நடையைப் புதுமைப்பித்தனின் சிறுகதைகளில் சிறப்பாய்க் காணலாம். ''தவளைப்பாய்ச்சல்'' நடை கதைக்கு வேகம் தருகிறது; வாசகனை இடைவெளியில் நடந்ததை யூகிக்க வைக்கிறது; அலுப்புத்தரக் கூடிய விஷயங்களைத் தவிர்த்து வாசகனை நேரடி அனுபவங்களுக்கு உட்படுத்துகிறது.

''தவளைப்பாய்ச்சல் நடையைச் சிறப்பாகச் செய்கிற சிங்கங்''களில் ஒருவர் சுஜாதா என்றாலும் இந்த நடையில் வாக்யம் முற்றுப் பெறாமல் தவிப்பது ஒரு பலவீனம்தான்.

செக்கந்திராபாத். எம். அருள்.

**நஞ்சுண்ட ஈசுவரன் போல்...**

* நஞ்சுண்ட ஈஸ்வரனுக்கு எப்படி விஷம் உள்ளேயும் செல்லாமல், வெளியேயும் வராமல், தொண்டையில் சிக்கிக் கொண்டதோ அது போலவே இக்கதையிலும் நஞ்சுண்டராவ் தான் ஏமாந்து வாங்கிய வீட்டு மனையை வாங்கியவரிடமே வாபஸ் செய்யவும் முடியாமல், விற்றாலும் யாரும் வாங்கத் தயாராக இருக்கமாட்டார்கள் என்ற நிலையில் தானே வைத்துக் கொள்வதும், முடிவில் அவர் கொலை வெறியோடு புறப்படுவதாகக் காட்டி, படுதமாஷாகத் தானே பாறையை வெட்ட ஆரம்பித்ததாக முடித்தது கதையின் வெற்றியையும், சுஜாதாவின் கைத்திறனையும் காட்டியது.

அற்புதபுரம். ஏ. பாஸ்கரன்.

**தன்னம்பிக்கைத் திரி...**

* 'ஏமாறுபவர்கள் இருக்கும்வரை ஏமாற்றுபவர்களும் இருப்பார்கள்' என்பதை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட கதையானாலும், 'வாழ்வின் எந்த நிலையிலும் கலங்காமல் பிரச்னைகளை எதிர் நோக்கி நின்றால் வெற்றி பெறலாம்' என்ற நல்ல முடிவை அளித்திருப்பதற்காக, ஆசிரியரை நாம் பாராட்டியே ஆக வேண்டும்.

நஞ்சுண்டராவைப் போல நாமும் பல இடங்களில், பல விதங்களில் ஏமாற்றப்படுகிறோம். ஆனால் நாமோ கவலைப்பட்டு, உள்ளம் துவண்டு போய் மேற்கொண்டு என்ன செய்வது? என்பதே தெரியாமல், மேலும் மேலும் துன்பத்திலேயே உழல்கிறோம். நஞ்சுண்டராவைப் போல் துன்பதை எதிர்த்து நின்றால், அதை தவிடு பொடியாக்கி விடலாம் என்ற நல்ல கருத்தை

ரூ 50 சிறப்புப் பரிசு பெறுபவர்
எம். அருள், டெக்னிகல் ஆபீஸர்,
வி. எம். எஸ். அறை,
வி. வி. எம். பி.,
டனனாகா, ஹைதராபாத் — 500 007.

மற்ற விமர்சனங்கள் ரூ 25 சன்மானம் பெறுகின்றன.

வலியுறுத்தி, அணைகின்ற விளக்கைப் போன்று, தோல்வியால் துவண்டு போன வர்களின் வாழ்க்கையைத் 'தன்னம்பிக்கை' என்னும் தூண்டுகோலால், 'திரி'யைத் தூண்டி விளக்கை மீண்டும் பிரகாசிக்கச் செய்த ஆசிரியருக்கு நன்றி.

மதுரை, ப. வெங்கடேஷ்.

### தப்புத் தண்டா என்றால் ஒதுங்கி...

* முடிவு மத்யமர்களுக்கே உரியது. இந்த இனம்; எழுதும்! பேசும்! ஆனால் தப்புத் தண்டா என்றால் மனசாட்சிக்குப் பயந்து ஒதுங்கிவிடும்!

இந்த நடை முறை உண்மையை நஞ்சுண்ட ராவ் பாறாங்கல் உடைத்துத் திரும்புவதன் மூலம் உறுதிப் படுத்தியிருக்கிறார் கதைஞர்!

சென்னை, பொடுசி.

### பெண்களின் சாமர்த்தியம்

* காய்கறி வாங்குவதிலிருந்து, வீட்டு மனை வாங்குவது வரை, ஆண்களை விட, பெண்கள் சாமர்த்தியசாலிகள் என்பதை, சுஜாதா, இந்தக் கதையில், ஒரு வரியில் கோடிட்டுக் காட்டிவிட்டார்.

நஞ்சுண்டராவ் ''விசாரித்துப் பார்த்து விட்டேன். அங்கே தர்ட்டி ஃபார்ட்டி ஒண்ணரை லட்சத்துக்குக் குறையாதாம்'' என்றதும், மனைவி ''நமக்கு மட்டும் எதற்கு, அறுபதாயிரத்துக்குக் கொடுக்கிறார்களாம்?'' என்று கேட்கிறாள்!

பெண்களின் சாமர்த்தியத்தைப் புரிந்து கொண்ட கதாசிரியர் சுஜாதா அவர்களுக்கு நன்றி.

திருநெல்வேலி, ஜானகி கிருஷ்ணன்.

### தன்னம்பிக்கை தளரக் கூடாது

* கதையின் முக்கிய கருத்து ''தன்னம்பிக்கையுடன் முயற்சி செய்'' என்பதுதான். வீட்டு மனை வாங்க நஞ்சுண்டராவ் அலையும் போதாகட்டும், தான் ஏமாந்து போனது தெரிந்ததும் பணத்தைத் திரும்பப் பெற முயற்சிப்பதிலாகட்டும், அதுவும் திரும்பப் பெற வழி இல்லாமல் போகவே, தானே பாறைகளைத் தகர்த்துவிட முயற்சிப்பதிலாகட்டும், தன்னம்பிக்கையுடன் கூடிய முயற்சியை அற்புதமாக வெளிக்காட்டியிருக்கிறார் ஆசிரியர்.

ஸ்ரீவில்லிப்புத்தூர், எஸ். சம்பத்.

### என்ன பாவம் செய்தாள் அவன்?

* ''தர்ட்டி ஃபார்ட்டி'' ஜாகுவார் வேகம். விடுபடம் பார்த்த நினைவு வேறு சேர்ந்து கொண்டது, நஞ்சுண்டராவ் ஏமாறப் போகிறாரா என்ற ஆதங்கம் பற்றிக்கொள்கிறது. ரியல் எஸ்டேட்காரர்கள் செய்யும் அநியாயம், ராவ் கையில் கடப்பாரையை எடுத்த போது, நானும் ஒன்றை எடுத்துக் கொண்டு அவர் பின்னால் போனால் தேவலை என்று என்னை எழுந்து நிற்க வைத்து விட்டது. ஆனால் நடுத்தரவர்க்கத்துக்கு அந்தத் துணிவு, இயல்பாகவே இருப்பதில்லை என்பதை சுஜாதா, சர்வ சாதாரணமாகத் திருப்பம் கொடுத்து உணர்த்திய போது, எழுந்தவன் உட்கார்ந்து விட்டேன். ஏமாறுவதற்கே பிறந்த வர்க்கம் — சாபத்துக்குள்ளான வர்க்கம் — என்பதால் நமக்கேன் வம்பு என்ற சகஜ வெளிப்பாடு எழும்பி பிடரியில் ஒன்று வைக்கிறது. பாறையை வெட்டி எடுத்து விடலாம் என்றறிந்த ராவ், ''நீயும் வா கோதாவரி — ஒத்தாசைக்கு'' என்கிறாரே, என்ன பாவம் செய்தாள் அவள்? வயிறு ரொம்பப் பற்றிக் கொள்கிறது.

சிதம்பரம் — 1. டி.டி. ராமலிங்கம்.

---

## அடுத்த இதழில்

* 'மன் ஏஜ் பிரச்னைகள்' — எப்படி சமாளிப்பது?'
* சுஜாதா சிறுகதை



சிம்ரஞ்ஜித் சிங் மான்: மரணத்தின் பிடியிலிருந்து மக்களவைக்கு...



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ.300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:


அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த
தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,
D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.


****** இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு ******



* கை மேல் பலன்!

# ஒருமைப்பாடுக்காக ராஜீவ் உண்ணாவிரதம் இருந்தது பற்றி...?

* ஏ. ஜஹ்பர் காதர், சென்னை.

? திருமணத்துக்கு முன் ஜாதகம் பார்ப்பது தேவைதானா? இதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா? எதிர்க்கிறீர்களா?

! தேவை இல்லை என்பதுதான் என் கருத்து. ஆனால் ஜோதிடம், ஜாதகத்தில் நம்பிக்கை வைத்துப் பார்க்கிறவர்களை எதிர்க்க நான் விரும்பவில்லை. எடுத்துச் சொல்லலாம்; எதிர்த்தால், தனிநபர் சுதந்திரத்தில் தலையிட்டதாகி விடும்.

* ஏ.சிவக்குமார், திருவெண்ணெய் நல்லூர்.

? தேசிய ஒருமைப்பாட்டுக்காகத் தமிழக இ.காங்கிரஸின் உண்ணாவிரதம் பற்றி?

! ஒருமைப்பாட்டுக்காக உண்ணாவிரதம் இருப்பதிலேயே கட்சிக்குள் ஒருமைப்பாட்டைக் காணோம்; இவர்கள் தேசிய ஒருமைப்பாடு பற்றிக் கவலைப்படுவது வேடிக்கைதான். அதுவும் பன்னிரண்டு மணி நேர உண்ணாவிரத சாதனையைப் பழரசம் அருந்தி முடித்துக் கொள்வது பிரமாதமான காமடி டிராக்!

* பா. வேங்கடேசன், சென்னை.

? விலை வாசி குறையப்போவதாக அறிவிப்பு வந்துள்ளதே?

! அது ஆருடம். பலிக்காத ஆருடம். 'பட்ஜெட்டில் பெட்ரோல், டீசல் விலையை ஏற்றியது, விலைவாசி உயர முக்கிய காரணம்' என்று நிதி அமைச்சர் தண்டவதே ஒப்புக் கொண்டதுதான் அறிவிப்பு.

* எம். விஜயா, பையூர்.

? 'துவாரகா மடாதிபதியைக் கைது செய்தது தவறு' என்று ஜெயேந்திர சுவாமிகள் கூறியுள்ளது பற்றி?

! சிக்கலான பிரச்னையை விடுவிக்க எல்லா மதத் தலைவர்களும் மடத் தலைவர்களும் அரசுக்கு ஒத்துழைப்புத் தர வேண்டுமே தவிர, பிரச்னையை மேலும் சிக்கலாக்கக் கூடாது.

* எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

? 'அமைதிப்படை மீது அவதூறு சொல்வது தவறு' என்றும், 'ரா' என்ற மத்திய உளவுத்துறை பற்றி கருணாநிதி கூறியதை ஏற்க முடியாது' என்றும் வி.பி. சிங் கூறியுள்ளாரே?

! பிரதமர் காட்டமாகக் கண்டிக்காமல் சாந்தமாகத்தான் தவறைச் சுட்டிக்காட்டியிருக்கிறார். முதல்வர் குங்குமத்தில் மறுப்பு எழுதாமலிருந்தால் சரி!

* ஏ.பி. வரதராஜ பெருமாள், திருத்தங்கல்.

? சத்திய சாயி பாபாவை நேரில் சந்தித்ததுண்டா?

! உண்டு. அவரிடமிருந்து பெருகும் அன்பை உணர்ந்ததும் உண்டு. சாதி, மத, இன வர்க்க பேதமின்றி அனைவரிடமும் அந்த அன்பு பரவி அவர்கள் உள்ளங்களிலும் அன்பைப் பெருக்கும் அற்புதத்தைக் கண்டதுண்டு. அந்த அன்பு புரிந்துள்ள மகத்தான சாதனைகளைப் பார்த்து வியந்ததுண்டு. அன்பின் ஆற்றலைப் புரிந்து கொள்ளாதவர்கள் நாட்டுக்கும் ஞாலத்துக்கும் பிரச்னைகளை உருவாக்கியவாறு இருக்கிறார்களே, என்று வருந்தியதும் உண்டு.

* ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? அன்று கூனிக் குறுகி நின்று மா ஜி நடிகைக்கு மலர்ச்செண்டு அளித்த வாழப்பாடியார் இன்று வைஜயந்தியின் 'மேக் அப் அரசியலுக்கு இடமில்லை' என்று பேசுகிறாரே?

! தம்முடைய மேக்—அப்பைக் கலைத்துக் காட்டுகிறார்!

* எம். இராஜேந்திரன், லால்குடி.

? 'சுலபமான வேலை எது?' என்ற கேள்விக்குத் தங்கள் பதில், என் போன்ற கேள்வி அனுப்பும் அன்பர்கள் மனத்தைப் புண்படுத்துகிறதே?

! நேருஜி சொன்ன ஒரு யதார்த்த உண்மையைக் குறிப்பிட்டேன். அப்படிச் சொன்னதால் கேள்வி கேட்பவர் எல்லாருமே முட்டாள்கள் என்று நேருஜியோ நானோ கருதுவதாக ஆகி விடாது. கெட்டிக்காரத்தனமாகக் கேட்கப்படும் ஒரு தவறான கேள்வி கூட, பதில் கூறுகிறவர் எச்சரிக்கை

நீங்கள் கேட்டவை — தராசு

யாக இல்லையெனில், அவரைக் கவிழ்த்து விடும் ஆற்றல் வாய்ந்தது! உதாரணமாக, ஸாம் பிட்ரோடா பற்றி ஒரு பத்திரிகை நிருபர் கேட்ட தவறான கேள்விக்கு உளற லான பதிலைக் கூறி அமைச்சர் ஜானேஷ் வர் மிச்ரா இப்போது திருதிருவென்று விழிக்கும் நிலையில் உள்ளார்! ஸாம் பிட் ரோடா இடம்பெறாத ஒரு கமிட்டியிலிருந்து 'அவர் ராஜினாமாவைக் கோருவேன்!' என்று கூறி, மாட்டிக் கொண்டிருக்கிறார்.

* இரா. ஆதிநாராயணன், தஞ்சை.

? ''மலிவு விலை மதுவைப் பாலிதீன் பையில் தரும்போது, அதில் கருணாநிதி படத்தையும், 'சமூக நீதி தந்த சரித்திர நாயகன்' என்ற வாசகத்தையும் அச்சிட்டு, விநியோகிக்கலாம்'' என்று காளிமுத்து கிண்டல் செய்கிறாரே?

! இதை நாம் ஒப்புக் கொள்வதென்றால், பின்னர், ஆவின் பால் பாக்கெட்டிலும் இதர பல அரசுத் தயாரிப்புக்களிலும் இதே காரியத்தைச் செய்து கருணாநிதி விளம்பரம் தேடிக் கொள்ள இடமளித்ததாகுமே! காளி முத்துவின் கிண்டல், கலைஞருக்குச் சுண்ட லாகி விடுமே!

* கே. ரமேஷ் ராம், செங்குன்றம்.

? 'பாரதீய ஜனதா வளர்வதால் தேசத் துக்கு ஆபத்து' என்று ராஜீவ் பேசியிருப்பது பற்றி?

! பயிர்கள் வளர்வதைக் கண்டு களைகள் கவலைப்படவே செய்யும்!

* ஏ.எம். பழனிசாமி, கோணவாய்க்கால் பாளையம்.

? தமிழகத்தைத் தாக்கிய புயல், ஆந்திரா சென்றதில் உங்களுக்குச் சந்தோஷமா? சங்கடமா?

! ஆந்திரா சகோதரர்கள் சொல்லி மாளாத அளவில் அவதிக்குள்ளாகியிருக் கும் போது நாம் சந்தோஷப்பட முடியுமா, அன்பரே? சங்கடம்தான். 'கடும் கோடையி லும் மழை பெய்து நிலத்தைக் குளிர்வித் திருப்பது இங்கே கலைஞரின் நல்லாட்சி நடப்பதால்தான்' என்று சிலர் சந்தர்ப்பம் தெரியாமல் பேசுவது சங்கடத்தை அதி கரிக்கச் செய்கிறது! தமிழக அரசு, ஆந்திரா வில் நிவாரணப் பணிகளுக்கு இருபத்தைந்து லட்சம் வழங்கியிருப்பது சற்றே ஆறுதல்.

* ரூ 20 பரிசு பெறுபவர்:
ஆர். கோபாலன்,
2, சத்திய மூர்த்தி தெரு,
ஸ்ரீ ரங்கம் — 6.

* இந்திரா கோபாலன், திருச்சி.

? நாட்டின் ஒற்றுமைக்காகவும் ஒருமைப் பாட்டுக்காகவும் முன்னாள் பிரதமர் ராஜீவ் உண்ணாவிரதம் இருந்தது குறித்து?

! கைமேல் பலன்! நாகாலாந்து இ. காங் கிரஸ் ஆட்சியும் கவிழ்ந்து விட்டது! அவ்வளவு ஒற்றுமை!

* ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்*

? காஷ்மீரைச் சுபஸ்வரம் செய்யப் பார்க் கும் இஸ்லாமாபாத், இந்திய ராணுவத்தை இந்திய கிரிக்கெட்டாக எண்ணிவிட்டதா என்ன?

! இந்திய ராணுவம், இந்திய கிரிக்கெட் இல்லைதான், என்றாலும், செலக்ஷன் கமிட்டி, ராணுவ விஷயத்திலும் சரியில்லை என்பது கவலை தரும் விஷயம்தான்! போஃ போர்ஸ், நீர்மூழ்கி பேரம் எல்லாம் ஒருபுற மிருக்க, இப்போது, நமது மிராஜ் விமானங் களுக்குத் தேவையான ஆயுதங்களை வாங்காமலேயே இரண்டு ஆண்டுகளை ஓட்டி இருக்கிறார்கள் என்று ஆடிட் ரிப்போர்ட்டில் தெரிய வந்திருக்கிறது! பாது காப்பு விஷயத்தில் இத்தனை அலட்சியம் காட்டுவது எப்பேற்பட்ட ஆபத்து!



* பெருகும் அன்பு...

* கிண்டல் கண்டலானால்?





ஒப்புக் கொண்டார்!

* குங்குமத்தில் மறுப்பு!

* மேக்அப் கலைந்தது!





# ஆலங்கட்டி மழை

என் கையில் ஆலங்கட்டி இருந்தது.

ஈஸ்வரி கன்னத்தோடு ஆலங்கட்டியை வைத்துச் சில்லிட்டிருந்தாள். கூழாங்கற்களாக விரல்களுக்குள் இளகி, இடுக்குகளில் வடிந்து கொண்டிருந்தது. வளையல்களின் வழியாக முழங்கை வரை தாரை தாரையாக இறங்கித் தண்ணீர் சொட்டியது. இதோ இதோ என்று ஆலங்கட்டிகளை வீசிக் கொண்டிருந்த காற்றின் வீச்சில் ஈஸ்வரியின் முகம் மேலும் மறைந்து கொண்டிருந்தது.

'குட்டி... உள்ளே ஓடியா.. நீர்க் கொண்டிரும் குட்டி' — ஈஸ்வரியின் சந்தோஷமான எச்சரிக்கைக்குக் கட்டுப்படாமல் செம்பா ஓடி ஓடி ஆலங்கட்டிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தது. இப்படி ஏதாவது சமயா சமயத்தில் பெய்தால் அங்கும் இங்குமாய் பொறுக்குவதற்காகவே இவ்வளவு பெரிய வாசல் வைத்து வீடு கட்டியது போல இருக்கிறது.

செம்பா உடனடியாகப் பேர் வைத்து விட்டாள். 'ஐஸ் மழை, ஐஸ் மழை' என்று பத்து நிமிஷத்திற்கு முன் குதித்த குதிப்பின் வெளிச்சம் என்னிடமிருந்து ஈஸ்வரி கண்ணுக்குப் போய் விட்டிருக்கிறது. ஈஸ்வரி எல்லாவற்றையும் பெற்றுக் கொள்கிறாள். 'ஆவி சேர்த்து' வாங்கிக் கொள்கிறாள். 'இது எதற்கு எனக்கு' என்று கேட்காமல் அனைத்தையும் ஏற்றுக் கொண்டிருப்பதில் முகத்தில் ஒரு அழகே வந்து விட்டிருக்கிறது. ஓர் உறுதியும் வந்திருக்கிறது.

என்னைக் கட்டிக் கொண்ட தினத்திலிருந்தே அவளுக்கு இந்த உறுதி தேவைப்பட்டிருக்கும் என்று தோன்றுகிறது. நான் படிக்கிற புத்தகங்கள், என்னைப் பார்க்க வருகிறவர்களுடன் நான் பேசுகிற பேச்சுக்கள், என் வேலைப் பளு எல்லாவற்றையும் விடப் பெரிய புதிராக ஈஸ்வரிக்கு நானே இருந்திருக்க வேண்டும்.

ஏதோ ஓர் அற்பமான காரியத்திற்காக, பின் வீட்டில் வாடகைக்கு இருக்கிறவர்களுடன் அம்மா சண்டை போட்ட சமயம், நான் சொன்ன சொல் அம்மாவுக்கு விரோதமாகப் போய் விட்டது.

அம்மாவுக்கு அன்றைக்கு என்ன வருத்தமோ, கோபமோ. புதைமணலில் செருகுவது மாதிரி பத்துப் பதினைந்து வருஷமாக மூச்சு முட்டித் திணறுகிறவள், வயல் மூங்கி, வீடு மூங்கி, நகை மூங்கி மிஞ்சியது மூன்று



வீட்டு வாடகைதான் என்ற நிலைமையில், 'வெயில்படாமல் பங்களா வீட்டில் வளர்ந்து இப்படிச் சீரழிந்து நிற்பதாகப்' புலம்புகிற அம்மாவுக்கு என் சொல் இடறியிருக்க வேண்டும். மற்ற அனைவரும் தப்பித்துக் கொள்ள, நான் மட்டும் அவள் கைப்பிடியில் சிக்கிக் கொண்டது போல் ஏசினாள். சாப மிட்டாள்.

அப்பாவை ஒன்றும் சொல்ல முடியாத ஆங்காரம் பூராவும் என் மேல் திரும்பியது. லீவு நாள் என்று மத்தியானம் சும்மாதான் படுத்துக் கிடந்தேன். இரண்டு மாதத்திற்கு முன்பு கல்யாணம் ஆனது என்பதால் ஜமுக்காளம் புதிதாக இருந்தது. ஈஸ்வரியும் பக்கத்தில் இருந்தாள். 'ராத்திரி பகல் என்று இல்லாமல் கதவைத் திறந்து போட்டுக் கிட்டு...' என்று என்னென்னவோ கத்தினாள் அம்மா.

எது எது தொலைந்து போனதோ அதை யெல்லாம் வெட்ட வெளியில் தேடுவது போல், எல்லாத் திசைகளிலும் காற்றைத் துழாவித்துழாவி அம்மா வீசின சொற்களில் நான் அழ ஆரம்பித்தேன். அப்படி நான் கொஞ்சம் கொஞ்சமாக அழ ஆரம்பித்த பொழுதே, ஈஸ்வரி கொஞ்சம் கொஞ்சமாக உறுதியைச் சேகரித்திருக்க வேண்டும்.

என் அழுகையால் ஈஸ்வரி சற்று மிரண்டது போல் இருந்தது. 'சும்மா இருங்க. சும்மா இருங்க' என்று தோளில் கை வைத்த ஞாபகம் இருக்கிறது. எழுந்திருந்து போய் வாசல் கதவையும் ஜன்னல் கதவுகளையும் சார்த்தி விட்டு வந்தது போல் இருக்கிறது.





'எல்லாம் சரியாகப் போகும். எல்லாம் சரியாகப் போகும்' என்று என் வலியற்ற நெற்றியை அமுக்கி விட்டது தெரியும். இந்த ஜமுக்காளத்தை மீண்டும் உதறி இன்னொரு தலையணையுடன் தானும் வந்து படுத்தது தெரியும்.

**நா**ன் விழித்துப் பார்த்த போது விளக்கு ஏற்றப்பட்டிருந்தது. சுடர் அலைந்து அலைந்து, இரண்டு எதிர் எதிரான முக்கோணச் செருகலாக இழுக்கப்பட்டிருந்த நட்சத்திரக் கோலத்தின் மேல் விளையாடியது. எலெக்ட்ரிக் லைட் எரிந்து கொண்டிருந்தது. ஈஸ்வரி நோட்டுக்களைத் திருத்திக் கொண்டிருந்தாள். நான் விழிப்பதற்குப் புரண்டு தலையணையில் புதைத்துக் கொண்டு அவளைப் பார்த்த போது, மர ஸ்டூலில் உட்கார்ந்து மேஜையில் முழங்கை யூன்றித் திரும்பி —

'காப்பி குடிக்கிறீங்களா அல்லது தோசைக் கல் போடட்டுமா' என்றாள். ஈஸ்வரியின் முகத்தில் மத்தியானத்திற்கு இப்பொழுது ஒரு திடமான அழகு வந்து சேர்ந்திருந்தது.

இந்த விதத்திலேயே ஈஸ்வரி ஒவ்வொரு முறையும் என்னைக் காப்பாற்றி வருகிறது போல இருக்கிறது. நெருக்கியடிக்கும் இருட்டுக்குள் தலைகுப்புற விழும் போது எல்லாம், ஈஸ்வரிதான் சரி செய்கிறாள். எழுந்திருந்து பார்க்கும் போது வெளிச்சம் வந்திருக்கும். ஒருவிதத்தில் வெட்கம் கூட உண்டாகிறது. மிகுந்த வெட்கமடைந்தது இந்த வீட்டில் வைத்து அல்ல, பழைய வீட்டில் வைத்து.

**ப**ழைய வீட்டை வேண்டும் என்றே தான் காலி பண்ணினோம். செம்பா என்கிற இந்த செண்பகக்குழல்வாய் மொழிக்கு முந்தியவளும் பெண்தான். அவளை உண்டாகியிருக்கும் போதுதான் தினசரி காலையில் ஒரு மணி நேரம் சாயந்திரம் ஒரு மணி நேரம் பஸ்ஸில் அலைய முடியாது இந்த உடம்போடு என்று பள்ளிக்கூடம் இருக்கிற இந்த ஊருக்கே வீடு பார்த்து வந்தது. வீடு பார்த்துப் பால் காய்ச்சிய பிறகு ஈஸ்வரி இரண்டு மாதம்தான் இருந்திருப்பாள். அப்புறம் பரமகல்யாணியைத் தோளில் போட்டுக் கொண்டுதான் வந்தாள்.

பரமா இருந்த காலமே கொஞ்சம். அதிலும் வீட்டில் இருந்த காலம் ரொம்பக் குறைச்சல். வடக்குத் தெருவில் ஏற்கெனவே ஈஸ்வரி டீச்சர் என்றால் டக் என்று சொல்லி விடுவார்கள். இப்போது ஈஸ்வரி டீச்சர் மகள் வீட்டு அடையாளம் ஆகி விட்டது.

பரமா, பரமா என்று யாராவது ஒருத்தர்




தூக்கிக் கொண்டு போய் விடுவார்கள். எதிர்த்தாற் போல இருந்த சப்–போஸ்ட் ஆபீஸில் 'சின்ன டீச்சருக்கு' நிறையச் செல்லம். அரசமரச் சலசலப்புக்குக் கீழ் எப்போதும் குளிர்ந்து. குடங்களும் பேச்சுக் களுமாகக் கப்பிக் கயிற்றில் மூங்கி நிமிர்கிற கிணற்றடியில் பெரிய மனுஷி மாதிரி கடசல் செப்புக் குடத்தைத் தூக்கிக் கொண்டு பரமா தண்ணீர் எடுக்கப் போயிருக்கும் போது.

''எங்க நாச்சியாருல்லா தண்ணி எடுத் துட்டுப் போறாக போலிருக்கு' என்று பெட் டிக்கடை மூப்பனார் குனிந்து முத்தி விட்டுப் போவார். கன்னத்தைக் கிள்ளி, கிள்ளிய தன் விரலை முத்திக் கொள்கிற மூப்பனாரின் விரல் களைப் பரமா தள்ளித் தள்ளி விடுவதும், மூப்பனார் மீண்டும் மீண்டும் அடுத்த கன்னத் தைக் கிள்ளுவதும், அவர் கடைக்குச் சோடா கலர் போட வந்த பையன் சைக்கிளில் காலை ஊன்றிக் கொண்டு நிற்பதும் இதே வடக்குத் தெருவில்தான் நடந்தது.

இந்தத் தெரு வழியாகத்தான் தொட்டில் கட்டி அதைக் கொண்டு போனதும். அந்தச் சமயத்தில் எந்தப் பேப்பரை எடுத்தாலும் மூளைக் காய்ச்சல் என்றிருந்தது. பரமா வுக்கு அதுதானா என்று தெரியவில்லை. ஆனால் அதுதான் என்பதுபோல வைத்துக் கொண்டோம். எனக்குக் காரணமும் பெய ரும் அவசியமற்றது என்று ஆகிவிட்டது. ஜன்னல் கதவில் நசுங்கிச் செத்த பல்லியின் ஞாபகம் போல, ரொம்பவும் சிக்கலான ஒன் றாகப் பரமாவின் சாவு சதா நசுக்கிக் கொண்டிருந்தது.

வாழைத் தோப்பும் செம்மண் காடும், தென்னம்பிள்ளையும் ஆற்றுப்படுகையு மாக இருக்கிற இந்த மண்ணின் பசிக்கு, எங்கள் வீட்டுப் பட்டாசலில் இருந்து பரமாவை எப்படி எடுத்துக் கொள்ளலாம். செங்கல் செங்கல்லாக நைந்து பொடிந்து சிதிலமாகிக் கொண்டிருக்கிற ஒரு குடும்பத் தின் வெவ்வேறு அலைக்கழிப்புக்கள் ஓய்ந்து. இப்போதுதான் தோளில் கிடந்த துண்டை எடுத்துத் தரையைத் தட்டி உட் கார்ந்த போது ஏன் இப்படி ஆக வேண்டும்? எனக்கு ஏன் இது நிகழ வேண்டும்? ஈஸ் வரிக்கு ஏன் நிகழ வேண்டும்?

**ப**த்து நாட்களுக்கு அப்புறம் ஈஸ்வரி அன்றைக்குத்தான் பள்ளிக்கூடம் போயிருந் தாள். இனிமேல், 'பையப் பையச் சரியாப் போகும்' என்று ஈஸ்வரியின் அம்மா ஊருக் குப் புறப்பட்டுக் கொண்டு விட்டார்கள். மனசு கேட்காமல் சாயங்காலம் ஈஸ்வரி வருகிறவரை இருந்தார்கள். குளோரி டீச்சர் தான் ஈஸ்வரியை அழைத்துக் கொண்டு வந்தது.

குளோரி டீச்சர் பக்கத்தில் இருந்தாலே எல்லாம் சரியாப் போகும். அப்படி ஒரு முகம், கண், குரல் அவர்களுக்கு. குளோரி டீச்சரின் குடையிலும் தோள் பையிலும் கூட ஏதோ ஒரு மாயம் இருக்க வேண்டும். வியாச நோட்டுக்களைத் தூக்கிக் கொண்டு வருகிற பிள்ளைகளின் தோள்மேல் கையைப் போட் டுக் கொண்டு, குடையின் பெரும் பகுதி நிழலை அப்படித் தங்களுடன் வருகிற பிள்ளைகளுக்கு ஒப்புக் கொடுத்துக் கொண்டே வருகிற குளோரி டீச்சரின் ஆதர வில் ஈஸ்வரி தூரத்தில் வரும்போதே அதிக பாரம் குறைந்து விட்டது போலிருந்தது.

குளோரி டீச்சரும் உடனே போய்விட வில்லை. சற்று அதிக நேரம் இருந்தார்கள். ''அம்மாவை வேண்டுமானால் நான் பஸ் ஏற்றி அனுப்பிவிடுகிறேன் ஸார். நீங்கள் வீட்டில் இருங்கள்'' என்று என்னிடம் பரி வாகச் சொன்னார்கள். யார் எதைச் செய்வது என்று தீர்மானிக்க அவசியமின்றிச் சில நேரங்களில் அந்தந்த நேரமே அவற் றைக் கவனித்துக் கொள்ளும் போலிருக் கிறது. குளோரி டீச்சர் அப்படிச் சொன்னது. அதற்குச் சரி என்று அத்தை, அவர்களுடன் போனது எல்லாம் அப்படித் தானிருந்தது.

இரண்டு பேரும் போனதும், ஈஸ்வரியும் நானும் மட்டுமே இருக்கிற தனிமையைச் சந்திக்க வேண்டியது ஆகிவிட்டது. ஒரு பூனைக்குட்டி, புறவாசலிலிருந்து மழைக் காலத்தில் நத்தித் தத்தி நடையில் ஏறி வந்து உருட்டி உருட்டி விழிக்கிற தவளை, இப்படி மூன்றாவது உயிராக அந்த இடத்தில் ஒன்றி ருந்தால் கூடப் பாதுகாப்பாக இருந்திருக் கும்.

நிலம் பெயர்ந்து பள்ளத்துக்குள் தவறி யது போல, இரண்டு பேரும் தள்ளப்பட்டு, பரமாவை நினைத்துக் கொண்டு அழு தோம். 'யம்மா' என்று அப்போதும் நான் தான்வாய்விட்டு அழுதேன். ஈஸ்வரி என்னை விடக் குலுங்கிக் குலுங்கி அழுதாள். உள் ளுக்குள் ஏதோ திறந்து கொண்டு வழிந் தோடி முட்டி முட்டி மோதுவது போல அழு தாள்.

நீண்ட நேரத்துக்குப் பின் ஈஸ்வரி ஒரு நீண்ட கேவலுடன் படுத்திருப்பது தெரிந் தது.

**ஒ**வ்வொரு முறையும் ஈஸ்வரி மேன் மேலும் உறுதி அடைந்தது என்னவோ நிஜம் தான்.

ஆலங்கட்டியை என்னுடன் ஓடி ஓடிப் பொறுக்குவதும், கன்னத்தோடு அதை வைத்துச் சிலிர்ப்பதும், மிகுந்த ஆனந்தத்துடன் செம்பாவை இப்படி வாசலில் குனிந்து குனிந்து பொறுக்க அனுமதிப்பதும் வேறு எதனால்? கனகாம்பரச் செடிகளுக்குள், நீலகிரித் தைல மரத்துக்குக் கீழ், தண்ணீர்த் தொட்டியில், வாழையின் குருத்து இலை மேல் என்று கடகடவென்று விழுகிற குளிர்ந்த கழச்சிக்கல் போன்ற கட்டிகளை, 'அப்பா, அப்பா' என்று உள்ளங்கையில் செம்பா நீட்டிக் கொண்டே இருந்தது.

செம்பா போல, பத்து வருடங்களுக்கு முன் நான் ஆலங்கட்டியை நீட்டிய போது யாரும் இருக்கவில்லை. அப்போதும் பிப்ரவரியோ, மார்ச்சோ தான். இதேபோல் மத்தியானம் கூட. அக்காக் குருவி கூப்பிட்டுக் கொண்டே இருந்த சப்தம் ஞாபகமிருக்கிறது.

ஏற்கெனவே பெரிய வீடு ஒத்திக்குப் போயிருந்தது. பெரிய அண்ணன் வீட்டு அண்ணி செத்துப் போனதில் இருந்தே யாரு மற்றவனாகி விட்டிருந்தேன். மேல் படிப்பில் இரண்டாவது தடவையும் தோல்வி. முதல் முறையாகக் கொலு வைப்பது நின்று போயிருந்தது. அக்காவின் ஹார்மோனியப் பெட்டியை விற்பது போன்ற சூழ்நிலையில் அக்காவே ஊரிலிருந்து தற்செயலாக வர, ஒரே சண்டையும் மனவருத்தமும் ஆயிற்று. நல்ல மழைக்காலம். தூக்க மாத்திரைகளை நான் சாப்பிட்ட தினத்தில் கூட அசாத்தியமான மழை. வாடகைக்கு இருப்பவர்கள் அடிக்கடி மாறிக் கொண்டிருந்தார்கள். விளங்காத வீடு என்ற பெயர் விலக்க விலக்கப் பாசி போல் கவிந்து கொண்டே இருந்தது. யாரும் யாருடனும் பேசுவதில்லை. அப்படிப் பேசுவதெனில், நாயும் பூனையுமாக ஒவ்வொருத்தரும் அடுத்தவரைக் குதறிக் கொள்வது மாதிரி. வாய்க்கால் ஓரம் இருக்கிற நான்கு தென்னைகளில் ராத்திரியோடு ராத்திரியாக ஏறிக் காயைப் பறித்து விற்று விட்ட அண்ணனை அப்பா அடித்து வெளியே தள்ளியதில் அண்ணனின் முதுகெல்லாம் சிராய்ப்பு. அண்ணனின் பிள்ளைகள் அழுது திகைத்

# மேனகாவின் லேட்டஸ்ட் தடை முயற்சி!

●● திட்டக் கமிஷனின் அணுகுமுறையை விமரிசித்துத் திட்டோ திட்டு என்று திட்டி, அஜித்சிங்கும் தேவிலாலும் தனித் தனியே ஹெக்டேக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்களாம். இதில் இன்னொரு விசேஷம், திட்டக் குழு உறுப்பினர்களிடம் லெக்சர் செய்து கொண்டிருந்த தேவிலால் இப்போது திட்டக் குழுக் கூட்டங்களுக்கே செல்வதில்லை என்கிறார்கள். ராஜீவ் ஆட்சியானாலும், வி.பி. சிங் ஆட்சியானாலும் அதிகார வர்க்கம் எல்லாம் ஒன்றேதானே? அதனால் திட்டக் குழு உறுப்பினர்கள் ஒரு பக்கம் இழுக்க, அதிகார வர்க்கம் எதிர்ப்பக்கம் இழுக்கிறது!



●● வெளிநாடுகளில் விற்பனையாகும் அந்நிய பிராண்டு பெயர்கள் கொண்ட சிகரெட்டுகளை இந்தியாவில் விற்பனை செய்ய, சில நிறுவனங்கள் முயற்சி செய்து வருகின்றன. ''இதை அனுமதிக்கவே கூடாது. வெளிநாட்டு சிகரெட் பெயர் மோகத்தில் புதிதாக இன்னும் பலர் சிகரெட் குடிக்க ஆரம்பித்து, தங்களையும் கெடுத்துக் கொண்டு, சுற்றுச் சூழலையும் பாழாக்குவார்கள்'' என்கிறார் மேனகா!

●● ராஜீவ் காந்தியின் ஆட்சியின் போது, உரத் தொழில் அமைச்சகத்தில், ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் வழியாகவும், அல்லாமல், டெண்டர் மூலமாகவும் அல்லாமல், மொராக்கோவிலிருந்து பாஸ்ஃபாரிக் ஆசிட் இறக்குமதி செய்தார்கள். அது மட்டுமல்லாமல், சணல் பைகள் வாங்குவதில் முறைகேடுகள் நடந்ததாகவும், மொத்தத்தில் அரசுக்கு இதனால் இருபது கோடி ரூபாய் நஷ்டமானதாகவும் இப்போது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதைக் கேள்விப்பட்ட உடனே, தேவிலால், சம்பந்தப்பட்ட மூன்று உர உற்பத்தி நிறுவனங்களின் நிர்வாக அதிகாரிகளையும் சீட்டைக் கிழித்து வீட்டுக்கு அனுப்பியதோடு, இவற்றில் முக்கிய பங்கு வகித்ததாகக் கருதப்படும் செயலர் ஒருவரையும் மாற்றி விட்டார். உரத் தொழில் வட்டாரங்களில் இது கொஞ்சம் அதிர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது.

தொகுப்பு: **சித்தார்த்.**

**தலைநகர்ச் செய்திகள்**

தன. பொங்கலுக்கு ஒரே ஒரு கரும்பு நான் தான் எப்படியோ வாங்கிக் கொடுத்தேன். பனங்கிழங்கு சண்முகத்தக்கா கொடுத்தது தான்.

நான் போட்ட கோலத்தையும் இழுத்த காவிப்பட்டையையும் பார்த்துக் கொண்டே போன ரமணி இதுவரை என்னுடன் பேசியதில்லை என்னும் அப்போதாவது பேசியிருக்கலாம். அம்மாவுடன் எங்கள் வீட்டுக்குச்சியில் வாடகைக்கு இருந்து கொண்டு ஏதோ ஒரு சர்க்கார் வேலைக்குப் போகிற அவளுக்கு நான் ஜன்னலில் இருந்தும் உத்தரக் கட்டையிலிருந்தும் தொங்கிக் கொண்டிருக்கிற நூலாம்படை போலப் பட்டிருக்க வேண்டும். பொதுக்குழாயில் வளர்ந்து கிடக்கிற பாசி போல, அழுக்கும் காரமுமாகக் கொட்டப்படுகிற வாளித் தண்ணீராக இருந்திருக்க வேண்டும்.

அன்று விடுமுறை தினங்களில் ஒன்றோ அல்லது அந்தப் பெண்தான் விடுமுறை எடுத்திருந்தாளோ தெரியவில்லை. ஆனால் இன்றே போல ஆலங்கட்டி மழை பெய்தது. கதை போலவும், செய்தித்தாளில் எப்போதோ ஓரிரு முறை வாசித்ததாகவுமே இருந்த அது முதல் முறையாக எனக்கு முன்னே பெய்தது. கொல்லம் ஓடுகளில் தென்னங்குரும்பைகள் விழுந்து உருள்வது போல அவை விழுந்தன. செம்பருத்தி மூட்டுப்பக்கம் உட்கார்ந்திருந்த எனக்கு ரொம்பத் தாமதமாகத்தான் அவை வானத்திலிருந்து விழுவதாக நம்ப முடிந்தது. எதையும் எளிதில் நம்ப முடிகிற அளவுக்குத் தினங்கள் அப்போதில்லை.

ஒன்று இரண்டு என உள்ளங்கைகளில் வைத்துக் கொண்டு வானத்தை அண்ணாந்து பார்த்தேன். வானம் அற்புதமாகக் கலைந்து கிடந்தது. பெரியதொரு மாமரத்தில் செப்புச் செப்பாகத் துளிர்கள் தழைத்து ஜீவனுடனிருக்க, மூடாக்குப் போட்டிருந்த வெயில் ஒரு கண்காட்சியையே அதன்மீது நடத்திக் கொண்டிருந்தது. வானத்தின் கலையும் அந்த மாந்தளிர்களின் தொய்வும் என் உள்ளங்கைகளில் உருகிக் கொண்டிருந்த பனிக் கல்லும் எதையோ எனக்குத் தொடர்ந்து சொல்லிக் கொடுப்பது போலிருந்தது.

அப்படி உணர்ந்த நிமிடத்தை யாருடனாவது பகிர்ந்துகொள்ளத் தோன்றியது. அடர்ந்திருந்த தனிமையை உடைத்து, உடைப்பின் அருவமான துகள்கள் மணிக்கட்டிலும் மோதிய தோள் பட்டையிலும் இருக்க, நான் யாரையாவது தேடிய போது, இந்த ரமணி தான் உள்ளே படுத்திருந்தாள்.

பெயர் சொல்லி அவளை அழைக்கும்படியாகவே அந்தக் கணம் முழுமையாக இருந்தது. அப்படியே அழைத்தேன். ரமணிக்கு அதிர்ச்சியா, ஆச்சரியமா என்று தெரியவில்லை. ஏற்கெனவே ரமணிக்கு வெளிறினாற்போல முகம். மேலும் அது சற்று வெளிறி, 'என்ன, என்ன' என்று வெளியே வந்தாள். நானிருந்த நெகிழ்ச்சிக்குச் சம்பந்தமற்ற உலகிலிருந்து வந்தது போலிருந்தாள்.

என்னுடைய உள்ளங்கையை நீட்டினேன்.

''ஆலங்கட்டி மழை, மேடம்'' — என்றேன்.

என் கையில் இருப்பதை அவள் வாங்கியிருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் அந்த நிமிடம் நிறைந்துவிட்டிருக்கும். அவளாகவேனும் இன்னும் எங்காவது கரைந்து கொண்டிருக்கிற ஒரு கட்டியைத் தேடி எடுத்திருக்கலாம். எடுக்கவில்லை.

செம்பா பொறுக்குகிறதற்காகவே, இதோ இன்னும் பெய்கிறது. ஏரோப்ளேன் சப்தம் கேட்டதும் பார்க்க ஓடி வருவது போல், கீழ்மேலாகத் தெருப் பிள்ளைகள் 'ஹோ' என்று கத்திக் கொண்டு ஓடுகின்றன. ஒன்று குளிரக் குளிர வாயில் போட்டுக் கொண்டு பல் கூச்சத்தில் கையை உதறுகிறது.

ஈஸ்வரி உள்ளே கூப்பிடக் கூப்பிட, செம்பா தெருவுக்கு ஓடுகிறாள். வேறு யாரிடமேனும் கொடுக்கும்வரை செம்பாவின் கைக்குள் கரையாமல் இருக்குமா என்று தெரியவில்லை.

கொடுக்க முடிகிறதோ இல்லையோ, யார் ஆலங்கட்டியை நீட்டினாலும் செம்பா கண்டிப்பாக வாங்கிக் கொள்வாள். வெற்றுக் கையையாவது பிடித்துக் கொள்வாள்.

பிடித்துக் கொள்வதற்குச் செம்பாவைச் சுற்றி நிறையக் கைகள் இருக்கின்றன.

---



## ஒரு சிறப்பு...

பாண்டிச்சேரி அரசு மருத்துவ மனையில் ஒரு சிறப்பு. மருத்துவ மனை பிரசவ வார்டில் ஏழைப் பெண்கள் குழந்தை பெற்றால் குழந்தைக்கு உடனடியாக ஒரு சோப், ஒரு டவல், ஒரு பவுடர் டின் இலவசமாக வழங்குகிறார்கள்!

— விருதை ராஜா.

ஆரோக்கிய ரகசியம்:

# சலபாசனம்

வி. என். குமாரசாமி

7



* வெட்டுக்கிளி தோற்றத்தில் அமைந்த சலபாசனம் அதைப் போலவே துள்ளும் சக்தியை அளிக்கும்.

“எனக்கு வயது எழுபது ஆகிறது. சில காலம் முன் குளியலறையில் வழுக்கி விழுந்து இடுப்பு மூட்டு — பந்துக் கிண்ண மூட்டு — கழன்று விட்டது. வைத்தியம் பார்த்துச் சரிசெய்து கொண்டேன். நான் ஆசனம் பழகலாமா?'' என்று கேட்டு ஒரு கடிதம் வருகிறது!

**இப்படிப்பட்டவர்கள், ரொம்ப வயதானவர்கள், மற்றும் கடும் நோயினால், விபத்தினால் பாதிக்கப்பட்டிருப்பவர்கள் — யோகாசன நிபுணர்களை நேரில் கலந்து ஆலோசித்துத்தான் ஆசனம் பழக வேண்டும்.**

நான் இங்கே எழுதுவது பெருமளவு ஆரோக்கியமாக இருக்கின்ற, தொடர்ந்து ஆரோக்கியமாக இருக்கவிரும்புகின்றநேயர்களுக்கே. ஒன்பது, பத்து வயது முதல் ஐம்பது, ஐம்பத்தைந்து வயது வரை உள்ளவர்களுக்கே. இவர்கள் யோகாசனம் பழகி, தியானமும் செய்து வந்தால், உடலும் உள்ளமும் கட்டுப்பாட்டில் இருக்கும். அளவாக, சத்துணவாகச் சாப்பிடுவார்கள். எவ்விதக் கெட்ட பழக்கத்துக்கும் அடிமையாக மாட்டார்கள். நோய், நொடியின்றி நீண்ட நாள் வாழ்வார்கள். டாக்டருக்கும் மருந்துக்கும் செலவு செய்ய அவசியமிருக்காது என்பதுடன், வாழ்க்கையே சாந்தியாகவும் ஆனந்தமாகவும் அமையும்.

இனி, சலபாசனம் செய்யும் முறை:

மிருதுவான விரிப்பில் குப்புறப் படுத்து முகவாய்க் கட்டையைத் தரையில் ஒட்ட வைத்து இரண்டு கால்களையும் நீட்டிச் சேர்த்து வைத்துக் கொள்ளவும். பக்கங்களில் இரண்டு உள்ளங்கைகளையும் மேல் பார்க்க நீட்டி வைத்துக் கொண்டு, முஷ்டியை மடக்கிக் கொள்ளவும். இப்போது மூச்சைப் பிடித்து, இரண்டு கைகளின் முஷ்டியையும் பலம் கொண்ட மட்டும் தரையில் ஊன்றி, இரண்டு கால்களையும் சேர்ந்தாற்போல் இடுப்பு வரை விறைப்பாய்த் தூக்கிப் படத்தில் உள்ள நிலைமைக்குக் கொண்டு வரவும். இப்படி இரண்டு மூன்று வினாடி இருந்து, பிறகு மூச்சை விட்டுக் கொண்டே கால்களை இறக்கிக் களைப்பாறவும்.

இந்த ஆசனத்தை மூன்று முதல் ஆறு தடவை வரை செய்யலாம். பார்க்கச் சுலபமாகத் தோன்றினாலும் செய்து பார்த்தால் கஷ்டம் தெரியும். சிலருக்கு இரண்டு காலும் சேர்ந்தாற் போல் ஒரே சமயத்தில் தூக்க வராது. முட்டி வரை மடக்குவார்கள். தொடையும் சேர்ந்து மேலெழும்பாது. அப்படி எழும்பினாலும் சப்பைக்கால் போல் வளைந்து அகன்று விடும். சிலருக்குக்





''என்ன? அவமானம் தாங்காம ஆபீஸ்ல வச்சு அவன் தூக்க மாத்திரை சாப்பிட்டானா?''

''ஆமா!... ஆபீஸ்ல மத்தவங்கெல்லாம் தூங்கும் போது அவனுக்கு மட்டும் தூக்கம் வராம இருந்திச்சாம்!''

— கஸ்தூரி குரலோன்

கால் எழும்பும் போது தலையும் மேலே எழும்பும்.

இவைகளையெல்லாம் சிறுகச் சிறுகத் தான் திருத்தி, உடலை நம் வசப்படுத்த வேண்டும். சரியான நிலையை மனத்தில் இருத்தி, அதன்படி செய்ய முயற்சியைத் தொடர வேண்டும்.

யோகாசனத்தில் ஒரு முக்கியமான விஷயம். நூறு சதவிகிதம் நிபுணர்களைப் போல் சரியாகச் செய்தால்தான் பலன் என்பது இல்லை. ஒவ்வொரு சிறு முயற்சிக்கும் அதற்கேற்ற பலன் உண்டு! ஆனால் நமது லட்சியம் 'முற்றிலும் சரியாகச் செய்ய வேண்டும்' என்பதாக இருக்க வேண்டும். அந்த லட்சியத்தை நோக்கிப் படிப்படியாக ஏற வேண்டும். வி. ஐ. பிக்கள் வேண்டுமானால் ஹெலிகாப்டரில் மலை உச்சியில் இறங்கலாம். நம் போன்றவர்கள் மெதுவாகப் படி ஏறித்தான் போக வேண்டும். அங்கங்கே நின்று-நின்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு ஏற வேண்டும். உச்சியை அடைந்து விட்டாலோ, ஒரே ஆனந்த பரவசம்தான்! சாந்தி மயம்தான்!

**ச**லபாசனத்தினால் நமக்கு ஏற்படும் பலன்கள்: கனத்தவர்களும் தொப்பை விழுந்தவர்களும் இதைச் செய்தால் நாளடைவில் தொந்தி கரையும். வயிற்று உறுப்புக்களுக்கு இறுக்கம் கிடைக்கிறது. பயிற்சி ஏற்படுகிறது. கால்கள், தொடைகள் பலம் பெறும். இருதயம் பலப்படும். முதுகெலும்பின் அடிப்பாகத்துக்குப் பயிற்சி ஏற்படும்.

வழக்கமாக ஆசனம் செய்து வரும் சகோதரிகள், கர்ப்பங் கொண்ட இரு மாதங்கள் வரை செய்யலாம். அதன் பிறகு செய்யக் கூடாது. கர்ப்பமாக இருக்கும் பெண்கள் புதிதாக எந்த ஆசனமும் செய்யக் கூடாது. இருதயம் பலவீனமாக இருப்பவர்கள் இந்த ஆசனத்தைச் செய்யவே கூடாது.

**ஹி**ந்து நாளிதழில் ஒரு செய்தி வந்திருக்கிறது-பம்பாயில் ஒரு நிறுவனம் 'தேகப் பயிற்சி, உணவுக் கட்டுப்பாடு, மருந்து போன்ற ஏதுமின்றியே உங்கள் உடலை இளைக்கப் பண்ணுகிறோம்' என்று விளம்பரம் செய்ததாம். அதை நம்பி ஒரு பெண்மணி போயிருக்கிறார். அவருக்குக் கடுமையான உணவுக் கட்டுப்பாடு விதித்துப் பட்டினி போட்டுவிட்டார்கள். அதன் விளைவாக அந்தப் பெண்ணுக்குக் குடல் புண், தலைசுற்றல், மயக்கம் போன்றவையெல்லாம் ஏற்பட்டு அவதிக்குள்ளானார். அந்த நிறுவனம் தன்னைப் பொய்யான விளம்பரம் தந்து ஏமாற்றியதுடன், தன் தேக ஆரோக்கியத்தையும் கெடுத்து விட்டதாக வழக்குத் தொடுத்து வெற்றி பெற்றிருக்கிறார். நஷ்டஈடு ஐந்து லட்சம் பெற்றிருக்கிறார்.

'உடம்பை இளைக்கப் பண்ணுகிறேன்' என்று ஆசை காட்டி இப்படியெல்லாம் மோசம் பண்ணுகிறார்கள். உடல் இளைக்க இரண்டே வழிகள்தான் உள்ளன. படிப்படியாக உணவைக் குறைப்பது (பட்டினி அல்ல). படிப்படியாக தேகப் பயிற்சியை அதிகரிப்பது (ஒரேயடியாக அல்ல). இந்த இரண்டையும் செய்ய மனோதிடம் வேண்டும். யோகாசனத்தில் உடலுக்குப் பயிற்சி கிடைக்கிறது. பெருந்தீனி தின்னாமல் நாக்கைக் கட்டுப்படுத்த மனோதைரியம் கிடைக்கிறது. போதாதா? உடம்பு தன்னால் இளைத்து - இளமையாகத் தோற்றமளிக்கிறது.

**ம**ற்ற விதமான தேகப் பயிற்சிக்கும் யோகாசனத்துக்கும் வித்தியாசம் உண்டு. 'ஜாகிங்' என்பார்கள். இறைக்க இறைக்க ஓட வேண்டும். 'டென்னிஸ் ஆடு' என்பார்கள். இவற்றுக்கு ஷூ மட்டுமே இருநூறு ரூபாய், முந்நூறு ரூபாய் என்று செலவு! யோகாசனத்துக்கு என்ன செலவு? ஒரு பைசாக் கூடச் செலவு கிடையாது! இதனால் மற்ற தேகப் பயிற்சிகளைக் குற்றம் என்று சொல்லவில்லை. யோகாசனத்தையும் அவற்றையும் சேர்ந்த மாதிரி செய்யக் கூடாது. ஒன்றைக் காலையில் செய்தால், மற்றதை மாலையில் பயிலலாம். அடுத்தடுத்து அல்ல. வசதியிருப்பவர்கள் டென்னிஸ் ஆடுவதை வேண்டாம் என்று நாம் ஏன் கூற வேண்டும்?

மற்ற ரக தேகப்பயிற்சிகள் உடலை வியர்க்க வைத்து, மூச்சு இறைக்க வைத்து, உடலுக்குப் பயிற்சி அளிக்கின்றன. மேலும் வெற்றி — தோல்வி என்ற போட்டி வந்து விட்டால் மனத்தில் டென்ஷன் உருவாக வாய்ப்புண்டு!

ஆனால் யோகாசனம் அப்படி அல்ல. உடல் வியர்க்காத விதமாக, நிதானமாக, அமைதியாகச் செய்ய வேண்டும். மூச்சு இறைக்க இறைக்கப் பரபரப்பாகச் செய்யக் கூடாது. பிராணாயாமத்தின் போது கூட மூச்சை நாம்தான் கட்டுப்படுத்துகிறோமே தவிர; மூச்சு நம்மை மீறி இறைக்காது. டென்ஷன் உருவாக வாய்ப்பே இல்லை. அமைதியும் சாந்தியும்தான். சமன்பட்ட மனம் தான்!

(தொடரும்)

◦ தமிழழகன் தன் படக் கதாநாயகியைத் தேர்ந்தெடுக்க முறை ஒன்றும் வித்தியாசமானது அல்ல. எழுத்தாளர், இயக்குநர் ஜெயபாரதி பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு தன் 'குடிசை' படத்துக்காக (கதாநாயகியின் படத்தை வரைந்து 'ஃபிலிமாலயா'வில் வெளியிட்டு) இதே தேர்வு முறையைக் கையாண்டு விட்டார்.

ஹோசூர், சப்தரிஷி.

◦ 'கலிகாரம்' கதையில் சபேசன் சார் எடுத்த முடிவு என்னை மிகவும் நெகிழ்த்தி விட்டது.

சிறுமுகை, ஏ. ஜெகதாம்பாள்.

◦ பொதுவாக விபத்து என்றவுடன் வெளிப்படையாகத் தெரியும் இறந்தவரின் குடும்பத்தாருடைய இழப்புக்களைத்தான் நாம் பெரிதாய் நினைக்கிறோம். இது நியாயம்தான். விபத்துக்களுக்குக் காரணமாக உள்ள ஓட்டுநர்களின் வாழ்க்கையில் ஏற்படும் பாதிப்புகள், இழப்புகள், வலிகளும் நம்மால் உணரப்பட வேண்டியவைதான் என்பதைக் காட்டியது சத்தியப்பிரியனின் சிறுகதை.

ஸ்ரீரங்கம், மேகதூதன்.

◦ கோடையில் 'கல்'லென்ற வெளிநாட்டுக்கு அட்டைப் படம் 'கூலாக' இருக்கது.

தஞ்சாவூர் — 1. இரா. ஆதி நாராயணன்.

◦ செயற்கைப் பானத் தயாரிப்பு, விற்பனையின் பின்னணியில் இத்தனை விஷயங்களா? அதிசயம்தான்! கவலையான கட்டுரை.

மொரப்பூர், ச. உமர்கான்.

◦ ''செயற்கை பானங்கள்'' பற்றிய 'கவர் ஸ்டோரி' பயன் மிக்கது. ஆரோக்கியமான எளிய பானங்கள் வரிசையில் 'மோரை' மறந்து விட்டீர்களே!

போகலூர், அ. இராஜப்பன்.

◦ 'இலவசம்' என்பது, இருப்பவர்களைக் கூட வறுமை வேஷம் கட்ட வைத்து விடுவதை, ஆயிரம் ரூபாய் சம்பாதித்தும் பொய் சொல்லி இலவச அரிசி பெற்ற பேராசிரியர் பற்றிய துணுக்குச் செய்தி வெளிப்படுத்தி விட்டது.

சென்னை — 33. வி. எஸ். வாசுப

# நப்பாசை வளரும் நம்பிக்கை தளரும்!

## வட்டமேஜை

◦ விபத்து சிறுகதைக்கு மருதுவின் ஓவியம், டிரைவரின் சோக நிழலைக் கண்முன்னே காண வைத்து விட்டது.

இலால்பேட்டை, எம். ரியாஜ் அஹமது.

◦ 'விபத்து' சிறுகதை கதையாய்த் தெரியல்லே; எதிரில் நடப்பது மாதிரி கண்முன் நிழலாடியது. பினிஷ் டு முடித்து விட்டுப் பக்க மில்லில் கணக்கெழுதப் போனான் டிரைவரின் மகன் என்ற போது கண்களில் கண்ணீர் குளமிட்டது.

தக்கோலம், முஸ்தபா.

◦ ''பழிவாங்க ஒரு தருணம்'' இராஜா பாலசந்தரின் சிறுகதை ஆரம்பத்திலிருந்து முடிவு வரை ஒரே த்ரில் ஆக இருந்தது. முடிவு, அற்புதமாக அமைந்திருந்தது.

சம்பத் நகர், ஏ. குருமூர்த்தி.

◦ இலவச இணைப்புக்களுக்கே ஒரு மகுடம் போல் 'பரமஹம்சர் சொன்ன அமுதக் கதைகள்' சிறப்பாக அமைந்திருந்தது.

கடலூர் — 1. சாந்தன்.

◦ இவ்வாரக் கல்கியில் எனக்கு மிகவும் பிடித்த அம்சம் புது மோதிரம் கதைக்கான வாசகர் விமர்சனம்தான். படித்தவுடன் 'இந்தச் சிறுகதையில் இவ்வளவு விஷயங்கள் அடங்கியுள்ளனவா!' என்று வியந்து போனேன்.

மதுரை — 9. ஜனார்த்தனன்.

◦ 'நாங்கள் எதிர்க் கட்சியைச் சார்ந்தவர்கள்; [illegible] என்ன பண்ண முடியும்' என்று சொல்லாமல், பஸ் நிலையத்தைக் கொண்டு வருவதற்காக சி. எம். காலைப் பிடிக்கக் கூடத் தயங்க மாட்டேன் என்று சொல்லும் காங்கிரஸ் எம்.எல்.ஏ.வான சுந்தரதாஸின் பேட்டியைக் கண்டு ஒரு நிமிடம் அப்படியே அசந்து போனேன்.

தக்கோலம், முஸ்தபா.




◦ 'இதுதாண்டா போலீஸ்' படத்தின் வெற்றிக்குக் காரணமாக இருந்த டைரக்டர் கோடி. இராமகிருஷ்ணா அல்ல. கோடி. இராமகிருஷ்ணாதான். டாக்டர் இராஜசேகர் போஸ்டரில் வெறும் 'ராமகிருஷ்ணா' என்று மட்டும் போட்டதனால்தான் பிரச்னையே! நீர் வேறு கோடி. இராமகிருஷ்ணா என்று குழப்புகிறீரே!

கும்பகோணம், எஸ். வி. ரவி கணேஷ்.

◦ 'நேர்மையைத் தண்டிக்காதீர்கள், தண்டவதே!' என்று ஆளுங்கட்சியை நீங்கள் வினவியிருப்பது உங்களின் துணிவையும், பொது நோக்கையும் வெளிப்படுத்துகிறது.

வியாசர் நகர், அ. க. கிருஷ்ணன்.

◦ ''நேர்மையைத் தண்டிக்காதீர்கள், தண்டவதே'' என்ற தங்களின் தலையங்கம் நெஞ்சைத் தொட்டது. பொருளாதாரத்தில் ஏ. பி. ஸி. டி கூடத் தெரியாத என் போன்றவர்களுக்குக் கூட புரியும் வண்ணம் வரி விதிப்பு பற்றியும், கறுப்புப் பணத்துக்கு வழங்கும் சலுகையால் நேரிடும் மோசமான பின்விளைவுகள் குறித்தும் தெளிவாக, எளிமையாகக் கூறியிருக்கிறீர்கள்.

நேற்றைய அநியாயங்கள் இன்றைய நியாயங்களாக்கப்பட்டால், 'இன்றைய அநியாயங்கள் நாளைய நியாயங்களாகக் கூடும்' என்ற நப்பாசைதான் நேர்மையற்றோர் நெஞ்சில் வளரும். அதே சமயம் நேர்மையானோர் நம்பிக்கைகள் தளரும்...

குன்னூர் — 2. ஆழ்வாரப்பன்.

# அது ஜனரஞ்சகம்; இது மனரஞ்சகம்!



* ஞானி: மனரஞ்சகம்

**நீ**ற்செயலாக இரண்டாவது சானலைத் திருப்பிய போது, 'நிதிசால சுகமா' என்று ஓர் அம்மையார் பாடிக் கொண்டிருந்தார். அருமையான, பண்பட்ட சங்கீதம். கேட்பதற்குச் சுகமாக இருந்தது. பாதியில் தடங்கல் ஏற்பட்டது. அவ்வளவுதான். தண்ணீரைச் சேமிப்பதன் அவசியத்தை வலியுறுத்தத் தெருக் குழாயில் உசிலைமணி குளிக்கத் தொடங்கி விட்டார்.

இந்த மெட்ரோவாட்டர் விளக்கப் படத்தில் காண்பிப்பதைப் போல, உட்கார்ந்து குளிக்கும் அளவுக்கு இப்போது எல்லாம் தெருக் குழாய்களும் இல்லை. அவற்றில் திருகியபோதெல்லாம் தண்ணீர் வருவதும் இல்லை என்பது வேறு விஷயம்.

நிகழ்ச்சிகளில் பங்கேற்பவர்களின் பெயர்களை ஆரம்பத்தில் காண்பிப்பதோடு நிறுத்திக் கொண்டு விடுகிறார்கள். நடுவில் பார்க்கத் தொடங்குபவர்களுக்குப் பெயர் தெரியாமல் போய் விடுகிறது. முடிவுக்கு முன்னரும் போடலாமே!

**இ**ரண்டு சானல்களிலும் புதிய தொடர்கள். ஒன்று சுகாசினியின் படைப்பு— முதல் சானல். மற்றது ஞாநியினுடையது — இரண்டாவது சானல். இரண்டுக்குமே அடிப்படை பெண்ணும் பெண்ணின் மன இயல்புகளும். முதல் வாரத்திலேயே இரண்டும் குறிப்பிடப்பட வேண்டிய அளவுக்குத் திகழ்ந்தன.

* சுகாசினி: ஜனரஞ்சகம்



சுகாசினியின் தொடர் நமக்கு மத்தியில்— நமது குடும்பத்தில் நிகழ்வதைப் போன்ற உணர்வை ஏற்படுத்தியது. திரைப்படக் கல்லூரியில் பெற்றிருந்த பயிற்சியும் திரைப் படங்களில் நடித்திருந்த அனுபவமும் தொடரை இயக்குவதற்கு அவருக்குச் சிறப்பாக உதவியுள்ளன.

பெண்ணின் மன உணர்வுகளை வேறொரு கோணத்தில் ஆராய முற்பட்டிருக்கிறார் ஞாநி.

முந்தியதில் ஒரு குடும்பப் பெண்ணின் மனப் போராட்டம் என்றால், பிந்தியது ஒரு நடிகையின் மனத்தை — அவளும் ஒரு பெண் தான், அவளுக்கும் ஆசாபாசங்கள் உண்டு என்கிற அடிப்படையில் ஆராய முனைகிறது. (அறிமுக உரையில் ஸ்ரீவித்யா அப்படித்தான் கூறுகிறார்.) ஆர்ட் ஃபிலிம் போன்ற உணர்வைத் தோற்றுவிக்கும் அதன் வித்தியாசத் தன்மையே இந்தத் தொடரின் வலு.

முன்னது ஜனரஞ்சகம். பின்னது மனரஞ்சகம்.

**ப**ளிச்சென்று வேறுபட்டுத் தெரிந்தது எதிரொலி.

வெளியூர்களில் — வெகு தொலைவில் வசிக்கும் ரசிகர்கள் தங்கள் தொலைக் காட்சிப் பெட்டிகளில் படம் தெரிவது பற்றிய குறைகளைக் கூறியுள்ள கடிதங்களை மட்டுமே பிரித்தெடுத்து, (சமயங்களில் தூத்துக்குடியில் கூட இரண்டாவது சானல் தெரிந்து முதல் சானலை இடைமறிக்கிறதாம்!) ஒவ்வொன்றுக்கும் அதற்கான 'டெக்னிக்கல்' விளக்கங்களை அளித்ததோடு, அந்தக் குறைபாட்டைச் சரி செய்வதற்கான ஆலோசனைகளையும் அளித்தார்கள்.

அந்த ரசிகர்களின் சார்பில் நன்றி கூறலாமா?

**— கிச்சாமி.**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.



# கல்கி

27.5.90 இதழுடன்
இலவச இணைப்பு

# வெற்றிகளைக் குவியுங்கள்!



# கல்கி

20.5.90 இதழுடன்
இலவச இணைப்பு

# டாக்டர் சொல்கிறார்; கேட்டுக் கொள்ளுங்கள்!

— சென்னை மருத்துவக் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் என். ராமதாஸ்

* ஏசு கிறிஸ்துவின் வாழ்க்கையைப் படமாக எடுத்திருந்தார்கள். 'கிங் ஆஃப் கிங்ஸ்' என்ற ஆங்கிலப் படம். சில வருடங்களுக்கு முன்பு வெளியானது. அதில் ஒரு காட்சி: நடக்க இயலாதவனை நடக்கச் சொல்லுகிறார் ஜீசஸ். அவன் தயங்குகிறான். எழுந்து நிற்கவே தடுமாறுகிறான். நடக்கத் துணிவில்லை. நம்மால் எங்கே முடியப் போகிறது என்ற தயக்கம்.

"உன்னுடைய நம்பிக்கை உன் கால்களை விடப் பலவீனமாக இருக்கிறது — **Your faith is weaker than your legs** என்று சொல்லுகிறார் ஜீசஸ். அவ்வளவுதான்! துணிந்து எழுந்திருக்கிறான் அவன். நிற்க முடிகிறது என்ற உணர்வே நடக்கத் துணிவு தருகிறது. முதலில் சற்றுத் தடுமாறினாலும் பின்னர் ஆவேசத்தோடு நடக்கிறான்.

ஜீசஸின் வார்த்தைகள் அவனை உசுப்பி விட்டதுதான் காரணம்.

சிலரைக் கொள்கைகள் உசுப்பி விடும்;

சிலரைச் செய்கைகள் உசுப்பி விடும்;

இன்னும் சிலரைப் பிறரின் வார்த்தைகள் உசுப்பி விடும்.

தலைவர்களின் வார்த்தைகளால் தொண்டர்கள் எந்த அளவுக்கு உசுப்பி விடப்படுகிறார்கள் என்று நமக்குத் தெரிந்ததுதானே? இந்தத் தூண்டுதல் மட்டும் ஆக்கபூர்வமான திசைகளில் அமைந்து விட்டால் நம் நாடு எவ்வளவோ முன்னேறி விடாதா!

எப்படி முடியும்?

ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியின் போது ஏற்றி வைக்கப்படுகிற கொடியில் ஐந்து வளையங்கள் இருப்பதைப் பார்த்திருப்பீர்கள். ஐந்து கண்டங்களையும் அவற்றின் ஒற்றுமையையும் குறிப்பிடுவதாகக் கூறுவார்கள். வேறு ஒருவிதமாகவும் விளக்கலாம்.

1. தன்னம்பிக்கை;
2. வெல்ல வேண்டும் என்ற ஆசை;
3. குறிக்கோளை உருவாக்கிக் கொண்டு அதை அடைவதற்கான கனவுகளில் மூழ்குதல்;
4. கட்டுப்பாட்டுடன் கூடிய பயிற்சி;
5. எத்தனை சாத்தியக் கூறுகள் இருக்கின்றன என்று ஆராய்தல்.

இந்த ஐந்து விளக்கங்களும் வெற்றி காணத் துடிக்கும் வீரனின் மனசுக்குள் தூண்டுதலை உருவாக்கிக் கொண்டே இருக்க வேண்டும். பொறியாக முதலில் உருவாகும் தூண்டுதல், பிறகு வெற்றி அடைந்தே தீருவது என்ற உறுதியை மனசுக்குள் பிரம்மாண்டமாக வளர்த்து விடும்.

யாருக்கு?

பயப்பட்டுச் சாகிறவனுக்கு அல்ல.

நம்மால் எங்கே முடியப் போகிறது என்று துவண்டு போகிறவனுக்கு அல்ல.

வெற்றி காணப் போகிறோம் என்று திடமாக, உறுதியாக நம்புகிறவனுக்கு.

எந்த வியாதியாக இருந்தாலும் வருமுன் காத்தல் (**Prevention**) வந்தபின் நோய் கண்டறிதல் (**Diagnosis**), சிகிச்சை (**Treatment**) என்ற மூன்று கட்டங்கள் உண்டு. நோய் வருமுன் தடுப்பதுதான் சாலச் சிறந்தது என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

நோய்கள் வருவதற்குப் பல காரணங்கள். பல வழிகள். எல்லாவற்றிலிருந்தும் நமது முன்னெச்சரிக்கையால் தப்பித்து விட முடியாதுதான். உதாரணமாகக் காற்றில் உள்ள கிருமிகளின் மூலமாகப் பரவும் சில நோய்களிலிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்ள முடியாது. என்றாலும் தண்ணீர் மூலமாக வரும் வியாதிகளை நாமே தவிர்க்கலாம். காய்ச்சிய தண்ணீரைக் குடிப்பதன் மூலமும், கண்ட இடங்களில் வைக்கப்பட்டுள்ள சுத்தமில்லாத தம்ளர்களில் தண்ணீர் குடிக்காமலிருப்பதன் மூலமும் வியாதிகளிடமிருந்து நம் காத்துக் கொள்ளலாம்.

சரி, நோய் வந்து விட்டது. இனி என்ன செய்ய? உதாரணத்துக்குத் தலைவலியை எடுத்துக் கொள்வோம். வெறும் மாத்திரை போட்டால் சரியாகும் தலைவலியிலிருந்து, அறுவை சிகிச்சை செய்தால் தான் சரியாகும் என்கிற தலைவலி வரை 97 வகையான தலைவலிகள். எந்தத் தலைவலிக்கு மருந்து சாப்பிடுவது? வெறுமனே கடைக்குச் சென்று ஏதாவதொரு மாத்திரையை வாங்கிச் சாப்பிட்டு விடுவதா? கூடவே கூடாது. அப்படிச் சாப்பிட்டால் அதன் பின்விளைவுகள் பாதகமாகி விடும் அபாயம் உண்டு. எனவே, டாக்டரிடம்



விளையாட்டு வீரனுக்கு மட்டுமல்ல இந்த விளக்கம். வாழ்க்கையின் எந்தத் துறையில் ஈடுபட்டிருப்பவனானாலும் சரி. இதைப் பின்பற்றினால் பலன் நிச்சயம்.

குறிக்கோளைக் குறித்து வைத்துக் கொள்ளுங்கள்

'முயன்று பார்த்தால், ஒருவேளை நீ வானத்தில் பறக்கக்கூட முடியும்' என்பார்கள் ஆங்கிலத்தில். அது வெறும் பேச்சு அல்ல. உன் குறிக்கோளை உயரத்தில் வை. அதை அடைய எல்லா முயற்சிகளையும் மேற்கொள் என்று



செல்வதுதான் நல்லது.

டாக்டரிடம்தான் போக வேண்டுமென்றால் நாம் எதற்கு நோயைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும்? டாக்டரிடம் மனம் விட்டுப் பேசி நமக்குள்ள நோயின் அறிகுறிகளைத் தெளிவாகக் கூற உதவும். அதை விட முக்கியம், சில சகஜமான நோய்கள் ஏன் வருகின்றன என்பதைப் புரிந்து கொண்டால் அவை நமக்கு வராமல் முன்னெச்சரிக்கையாக இருக்க முடியும்.



**வாந்தி:**

'பையன் ரெண்டு நாளா வாந்தி எடுக்கிறான்' என்று டாக்டர்களிடம் பெற்றோர்கள் சொல்வதுண்டு. உணவு கெட்டுப் போயிருந்தால் அல்லது மூடி வைக்கப்படாததால் ஏதாவது பல்லி, பூச்சி என்று விழுந்து விஷம் ஏறி இருந்தால் வாந்தி வரும். கடும் வெயிலில் போய் விட்டு வந்தாலும் சிலருக்கு வாந்தி எடுக்கும். (இதைக் குடை பிடித்துக் கொள்வதன் மூலமும் பருத்தி ஆடைகளை அணிவதன் மூலமும் தவிர்க்கலாம்) வெயில் காலத்தில் அடிக்கடி தண்ணீர் குடிக்க வேண்டும். குடிப் பழக்கம் உள்ளவர்களுக்கு வாந்தி சகஜம். கடுமையான தலைவலி இருக்கும் போதும் வாந்தி வரும். சிறுவர்களுக்கு மூளைக் காய்ச்சல் வருமுன் வாந்தி வரலாம். எந்த வாந்தியையும் அலட்சியப்படுத்தாதீர்கள். தொடர்ந்து வாந்தி எடுக்கும் பட்சத்தில் உடலில் அசதியும், வலியும் தோன்ற ஆரம்பிக்கும். பொதுவாக வாந்தி, ஜுரத்துடன் சேர்ந்தே வரும்.

**வயிற்றுப் போக்கு:**

இதில் இரண்டு விதங்கள் இருக்கின்றன. ஒன்று, வெறும் தண்ணீராகப் போவது. மற்றொன்று இரத்தமும், சீதமும் கலந்து போவது. குழந்தைகளுக்கு வெயில் காலத்தில் வயிற்று போக்கு வரும். வயிற்றில் பூச்சி இருந்தால், அல்லது பல்பம், காசு, என்று எதையாவது குழந்தைகள் விழுங்கியிருந்தாலும் வயிற்றுப்

கட்டிக் காட்டத்தான்.

குறித்து வைத்துக் கொள்ளுங்கள், உங்கள் குறிக்கோளை.

அதை அடைவதற்கான பாதையைத் தேர்ந்தெடுங்கள். முயற்சிகளை மேற்கொள்ள ஆரம்பியுங்கள். எப்படிச் செயல்பட்டால் குறிக்கோளை அடைய முடியும் என்ற சாத்தியக் கூறுகள் பற்றி, சதா நினையுங்கள். ஏன், பகல் கனவு கூடக் காணலாம் நீங்கள்! இந்தக் கனவுகள் உங்களைத் தூண்டிக் கொண்டே இருக்கும்!

## யாருக்கு வெற்றி கிடைக்கும்?

வேலை இல்லாத இளைஞர் ஒருவர், அடுக்கு மாடி வீடுகளில் சிலவற்றுக்கு, கூடத்து மேஜையில் வைக்க, பூங்கொத்துக்கள் விற்பனை செய்யத் தொடங்கினார். முதலில், தெரிந்த நபர்களின் வீடு; பிறகு அவர்களாகச் சொல்லி அறிமுகமான வீடுகள். பிறகு பல அடுக்குமாடிக் கட்டடக் குடியிருப்புகள்...

இளைஞர் யோசித்தார். வீடுகளோடு மட்டும் இயற்கை அழகை அறிமுகப்படுத்துவதை நிறுத்துவானேன்? நிறுவனங்களில் எத்தனை வரவேற்பறைகளை வனப்புள்ளவையாக மாற்றலாம்! ஒன்று இரண்டு என்று நிறுவனங்களின் பட்டியல் நீண்டன.

மறுபடி யோசித்தார் இளைஞர். நம் திறமை இத்தனைதானா? இன்னும் மேலே, மேலே, உயர முடியுமா? எத்தனை நிறுவனங்களின் முகப்புகள், புல்லும் செடியும் வளர்ந்தோ, கட்டாந்தரையாகவோ இருக்கின்றன! இவற்றை அழகான புல்வெளிகளாகவும், மலர்கள் பளிச்சிடும் முகப்புகளாகவும் ஏன் மாற்ற முடியாது? இதனை **land scoping** என்பார்கள். அங்கே ஒரு மினி குன்று தோன்றும். அதில் சிற்றருவி சலசலக்கும். விளக்கொளி இதமாகப் பரவும்.

ஏற்கெனவே இவரது பூங்கொத்துக்கள் மூலம் அறிமுகமான நிறுவன அதிகாரிகள், இளைஞரின் யோசனையை வரவேற்றார்கள். தங்கள் நிறுவனத்தின் முன்னே உள்ள வெற்றிடங்களை மாற்றியமைக்கச் சொன்னார்கள். இளைஞர், தமது உடனிருக்கும் உதவியாளர் குழுவை விரிவு படுத்தினார். தோட்டக் கலையில் தேர்ச்சி பெற்றவர்களைச் சேர்த்துக் கொண்டார். தொழில் பெருகியது. நகரின் நாலாபுறமிருந்தும் அழைப்புகள் வந்தன.

சாதாரண வீடுகளுக்குப் பூங்கொத்து விற்று வந்த, தனியொரு மனிதரின் சிந்தனையும், முன்னேற வேண்டும் என்ற இடைவிடாத லட்சிய தாகமும், அவரை ஓகோ என்று உயர்த்தின. அவர் இன்று ஒரு தோட்டக் கலை நிபுணர் மட்டுமல்ல; கவர்ச்சிகரமான தொழில் வர்த்தகப் பத்திரிகை ஒன்றின் ஆசிரியர்; அதிபர்!

ஆக இவரது வாழ்க்கையிலிருந்து நமக்கு என்ன தெரிகிறது?

வேலை இல்லை என்று சோர்ந்து போக வேண்டாம். யோசித்தால் பணம் சம்பாதிக்க வழிகள் புலப்படும்.



இந்த யோசனைதான் முக்கியம். வெற்றி பெற வேண்டும் என்ற வைராக்கியம், ஆசை எல்லாம் தேவைதான். ஆனால் இவை போதாது. சிந்தனை தேவை. புதிய முயற்சிகள் தேவை. மற்றவர்கள் செய்யாத எதை நாம் செய்யலாம்? எதைச் செய்தால் மக்கள் கவனத்தை ஈர்க்கலாம்? எதற்கு வரவேற்பு இருக்கும்?' என்றெல்லாம் சிந்திப்பது: திட்டமிடுவது: செயல்படுவது. ஒன்றிலிருந்து ஒன்றாக வியாபாரம் அல்லது தொழிலை விரிவடையச் செய்வது...

**கட்டுப்பாடும், பயிற்சியும்:**

சாதனை புரிய வேண்டும் என்ற எண்ணம் உடைய யாருமே, கட்டுப்பாடும், பயிற்சியும்



போக்கு ஏற்படும். கெட்டுப் போன, விஷமாகிவிட்ட உணவைச் சாப்பிட்டாலும் வரும். ஈ மொய்க்காமல் உணவை மூடிக் காக்க வேண்டியது ரொம்ப அவசியம். அசைவ உணவான, பன்றி மற்றும் மாட்டிறைச்சி சாப்பிடுபவர்களுக்கு வயிற்றில் பூச்சிகள் உற்பத்தி ஆகக்கூடிய வாய்ப்புக்கள் அதிகம். ஹோட்டலில் தொடர்ந்து சாப்பிடுபவர்களுக்கும் வயிற்றுப்போக்கு வருவதுண்டு. சிலர் நாய், பூனை போன்றவற்றைத் தூக்கிக் கொஞ்சுவார்கள். அப்படிப்பட்டவர்கள், அவற்றின் மேலுள்ள கிருமிகளால் தாக்கப்பட்டு, வயிற்றுப் போக்கில் அவதிப்படுவதும் உண்டு. தண்ணீர் மற்றும் கண்ணுக்குத் தெரியாமல் காற்றில் உலாவும் கிருமிகள் மூலமாகவும் வரும். அஜீரணமும் ஒரு காரணம்.

ஆக மொத்தத்தில் ஆரோக்கியமான உணவுப் பழக்கம் நோய்த் தடுப்பில் முக்கியமானது. கொதிக்க வைத்த தண்ணீரைக் குடிப்பது; நன்றாக வேகவைத்த உணவை மூடி வைத்திருந்து கெட்டுப் போகுமுன் சாப்பிடுவது: உப்பு, புளி, காரம் இவற்றில் மிதமாக இருப்பது என்பன ஆரோக்கிய வாழ்வுக்கு அடிப்படை. ''நான் ஓட்டலில் சாப்பிடுகிறேன். அவர்கள் போடுவதைத்தானே தின்று தொலைக்க வேண்டியிருக்கிறது?'' என்று சிலர் முணுமுணுக்கலாம். இவர்களும் கூட அன்றைய மெனுவில் அதிகம் பாதிக்காத விஷயத்தைக் கூடுதலாகச் சாப்பிட்டு மற்றதைக் குறைக்கலாம். சாம்பார், ரசம் இவற்றை குறைவாகச் சாப்பிட்டு தயிர் அல்லது மோர் சாதம் அதிகமாக



○ பிராணாயாமம் இருமலைத் தடுக்கும்!

சாப்பிடலாம். புளிக் குழம்பு போன்றவற்றைத் தவிர்க்கலாம். டிபனுக்கு இட்டிலி வடை பொங்கல் என்று உடலைக் கெடுக்காத அம்சங்களைத் தேர்ந்தெடுக்கலாம். ஆபீஸ் போகிற அவசரத்துக்கு ஒரு வேளை ஓட்டலில் சாப்பிட்டாலும் இரவு ஒருவேளை எளிய உணவாக நாமே

இன்றி வெற்றி காண முடியாது.

விளையாட்டு வீரர்களைக் கவனியுங்கள்.

டிசிப்ளின்.

பிராக்டிஸ்.



வின்.

இந்த மூன்றும் அவர்கள் தாரக மந்திரங்களாக இருக்கும்.

முதலில் தனிப்பட்ட அளவில் கட்டுப்பாடு;

பிறகு கடுமையான பயிற்சி;

அடுத்தபடி வெற்றி இலக்கு.

இவையெல்லாம் தேவைதான். ஆனால் இதற்கும் மேல் சில உத்திகள் தேவை. இந்த உத்திகள் தாம் ஆட்டத்தில் திடீர் திருப்பத்தை ஏற்படுத்தி, வெற்றி பெற்றுத் தருகின்றன.

கிரிக்கெட் ஆட்டத்தில் காப்டன் என்ன செய்கிறார்? ஏழாவது பாட்ஸ்மனை ஒரு கட்டத்தில் மூன்றாவதாக அனுப்புகிறார்! பௌலர் என்று பெயர் எடுக்காத ஒருவரை ஒரு சந்தர்ப்பத்தில் பந்து வீசச் செய்வது கூட உண்டு! இந்த உத்திகள் எதிர்பாராத வெற்றிகளைத் தேடித் தருவது உண்டு.

உலக சாம்பியன்களின் டென்னிஸ் அல்லது கால்பந்து ஆட்டத்தை இதர வளர்ந்த விளையாட்டு வீரர்கள் கூட வீடியோவில் போட்டுப் பார்ப்பது எதற்காக? எப்படி ஆட வேண்டும் என்று கற்றுக் கொள்ள அல்ல. தன்னம்பிக்கை, லட்சிய வெறி, மன உறுதி, உடல் வலிமை இவற்றைப் பெறுவதற்காகவும் அல்ல. எந்தச் சந்தர்ப்பத்தில் எத்தகைய உத்தி பயன் அளித்திருக்கிறது என்பதை அறிந்து கொள்வதற்காக!

இத்தகைய உத்திகள் விளையாட்டுத் துறையில் மட்டுமல்ல; தொழில் துறையில், வியாபாரத் துறையில் பெரிதும் பயன் தரும்.

சமைத்துக் கொள்ளலாம். அல்லது ரொட்டி, பால், பழம் என்று ஆரோக்கிய உணவாகச் சாப்பிடலாம்.

**காய்ச்சல்:**

விஷ ஜுரம் (**Virus fever**), கிருமிகளால் வரும் ஜுரம் (**Bacterial fever**), மலேரியா, பைலேரியா

**வாழ்க்கையில் உயர உத்திகள்:**

கல்கத்தாவில் சரவணன் என்று ஒரு காண்டிராக்டர் இருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் தமிழ்நாடு சென்று திரும்பும் ஐ. ஏ. எஸ். ஆபீஸர்களைப் பார்த்து வைத்துக் கொள்கிறார். ரயிலில் அவர்கள் திரும்பி வரும் போது அதிகாலையில் ஒரு ஸ்டேஷனில் அவர்களுக்கு இட்டிலி சாம்பார், காப்பி சப்ளை செய்ய ஏற்பாடு செய்கிறார். 'பூரி மசலாவே கதி' என்று எண்ணியிருந்தவருக்கு இட்டிலியைப் பார்த்ததும் ஒரே மகிழ்ச்சி! அதைக் கொண்டு வந்தவர் ''சரவணன் அனுப்பினார்'' என்கிறார். 'யார் சரவணன்?' — ஐ. ஏ. எஸ். காரருக்குப் புரியவில்லை. வந்த இட்டிலியை விட மனசில்லாமல் வெட்டுகிறார்.

கொஞ்ச காலம் சென்று ஒரு டெண்டர் தொடர்பாக இண்டர்வியூவுக்கு வருகிறார் ஒருவர். பெயர் சரவணன். 'எங்கோ கேட்ட பெயராக இருக்கிறதே?' என்று ஐ. ஏ. எஸ். தம் நெற்றியை விரலால் தட்டும் போது, ''ஆமாம் நீங்கள் அந்த ரயிலில் வருவதாகக் கேள்விப்பட்டேன்; என்னாலான சின்ன உபகாரம்; டிபன் அனுப்பினேன்'' என்கிறார் சரவணன். ''ஓ! நீங்கதானா அது!''

டெண்டர் கிடைத்து விடுகிறது சரவணனுக்கு!

சரவணன் என்ன லஞ்சமா கொடுத்து விட்டார்? இல்லை! லஞ்சமே தராமல் காரியத்தை முடித்துக் கொண்டார் என்பதுதான் பொருந்தும்!




என்று பலவிதக் காய்ச்சல்கள் இருக்கின்றன. பலவித அம்மை நோய்களின் ஆரம்பம் காய்ச்சல் தான். கூடவே மூக்கொழுகலும் இருக்கும். 'சைனஸ்' பிரச்னை இருந்தாலும், 'டான்ஸில்' கோளாறு இருந்தாலும் காய்ச்சல் வருவதற்கு வாய்ப்புகள் உண்டு.

இப்போதெல்லாம் தண்ணீரை வடிகட்டும் சாதனங்கள் வந்துள்ளன. இவை பாக்டீரியா கிருமிகளை வடிகட்டி விடும். ஆனால் காற்றிலே பரவும் வைரஸ் கிருமிகளைத் தடுக்க முடியாது. இதற்கு நம் உடலிலேயே எதிர்ப்புச் சக்தி தோன்றினால்தான் தப்பலாம்.

கொசு கடிக்காமல் பார்த்துக் கொள்வதன் மூலமே பலவிதமான காய்ச்சல்களைத் தவிர்த்து விட முடியும். உடலில் பூசிக் கொள்ள கொசு விரட்டி போன்றவற்றை விட, கொசு வலை சிறந்தது. ஏனெனில் இதில் செயற்கையான விஷயம் ஏதுமில்லை. மேலும் ஒரு தடவை செலவு செய்து நைலான் கொசுவலை வாங்கி விட்டால் பிறகு பல ஆண்டுகளுக்குச் செலவு இல்லை. கொசுவத்தி, விரட்டி என்றால் அடிக்கடி செலவு!

காய்ச்சல் மிக அதிகமாக இருந்தால் தண்ணீரில் துணியை நனைத்து, பாதிக்கப்பட்டவரின் நெற்றியில் போட்டால் குறையும். டாக்டர்களிடம் போகுமுன்பு தணிக்க வேண்டுமென்றால், 'பாரசெடமால்' மாத்திரைகளைச் சாப்பிடலாம். ஆனால் காய்ச்சல் நீடிக்கும் போது கண்டிப்பாக டாக்டர்களிடம் செல்ல வேண்டும். அலட்சியப் படுத்துவது ஆபத்து.



இன்று சரவணன் ஒரு கோடீசுவரர். ஆனால் முதன் முதலாகக் கல்கத்தா சென்ற போது அவர் டிக்கெட்டில்லாமல் பயணப்பட்டுச் சென்றவர்! சின்னச் சின்ன உத்திகள் அவர் வளர உதவின. பெரிய பெரிய சிந்தனைகள் வாழ்க்கையில் அவரை உயரச் செய்தன.

ஒன்றுமில்லாத நிலையிலிருந்து உன்னத நிலைகளுக்கு உயர்ந்தவர்களின் வாழ்க்கையைக் கூர்ந்து கவனித்தால், அவர்கள் விடாமுயற்சி, தன்னம்பிக்கை, இவற்றால் மட்டும் உயரவில்லை; சரியான சந்தர்ப்பத்தில் சரியான வாய்ப்புக்களைப் பயன் படுத்திக் கொண்டார்கள்; குற்றமற்ற உத்திகளைக் கையாண்டு குபேரர்கள் ஆனார்கள் என்பது தெரியவரும்! இதற்குக் கற்பனா சக்தியைத் தூண்டி விட்டு யோசிக்கத்தான் வேண்டும்.

### தோற்கிறவரும், வெல்கிறவரும்:

தோற்கிறவர்களுக்கும், வெல்கிறவர்களுக்கும் தனித் தனிக் குணங்கள் உண்டு.

1. தோற்கிறவர், தோற்றுப் போகும்படி எளிதில் விட்டு விடுவார்; வெல்கிறவர் விடமாட்டார்; வெற்றியை வசமாக்குவார்.
2. தோற்கிறவர் சோம்பிப் போய்க் கிடப்பார்; வெல்கிறவர் துருதுருவென்று, யோசித்தபடி இருப்பார்.
3. தோற்கிறவர் பிறர் மீது பழியைப் போடுவார்; வெல்கிறவர் பிறர் மீது பாராட்டைப் பொழிவார்.
4. 'இதெல்லாம் முடியாது; ரொம்பக் கடினம்' என்பார் தோற்கிறவர். 'கடினமானதாக இருக்கலாம்; ஆனால் கட்டாயம் சாத்தியம்' என்பார் வெல்கிறவர்.
5. தோற்கிறவர் கண்களுக்குப் பிரச்னைகளே பெரிதாக இருக்கும்; வெல்கிறவர் கண்களுக்கு முடிவுகளே பெரிதாக இருக்கும்.

கார்ல் ஆலன்டோ, எழுபதுகளில், மிகப் புகழ்பெற்ற வித்தைக்காரர். நூற்று இருபத்தைந்து அடி உயரத்தில் தடிமனான கயிற்றைக் கட்டி, இரு முனைகளுக்கும் இடையே துணிச்சலாகப் பல முறைகள் நடந்து காட்டியவர்.

''என்னைப் பொறுத்தவரை, இத்தனை உயரத்தில் 'டைட் ரோப் — வாக்கிங்' தான் என் வாழ்க்கை; மற்ற எதுவும் லட்சியமில்லை. மற்றவை எல்லாம் காத்திருக்கட்டும்!' என்றவர்.

1978ல் ஆலன்டோவின் மனைவி, ஒரு காலை நேர டீவி ஒளிபரப்பில் கூறினார்:

''கயிற்றின் மீது என் கணவர் நடந்த அத்தனை வருடங்களில், ஒருமுறை — ஒரே ஒருமுறை கூட, அவர் கீழே விழுவோம் என்பதைப் பற்றி நினைத்துப் பார்க்கவோ, வெளிப்படையாகச் சொல்லவோ இல்லை!''

எதிர்மறை எண்ணங்கள், வெற்றிப் பாதையில் நடைபோட விரும்புகிறவருக்கு ஒருநாளும் இருக்கக் கூடாது. அப்படி ஏதேனும் இருந்தால்,

### தலைவலி:

எப்போதும் ஒரு பரபரப்பு, டென்ஷன், இவையே தலைவலிக்குப் போதுமானது. இவை தவிர ரத்த அழுத்தம், கண்ணில் கோளாறு, சைனஸ் பிரச்னை, தூக்கமின்மை, அஜீரணம், வெளிச்சம் குறைவான இடத்தில் படித்தல் போன்றவைகளும் தலைவலி வருவதற்கான காரணங்கள். கடுமையான ஜலதோஷம் கூட தலைவலியைக் கொண்டு வரும். உக்கிரமான வெயிலில் சென்று வந்தாலும் தலைவலி வரும். இப்படித் தலைவலியைப் பொறுத்தமட்டில் 97 வகையான தலைவலிகள் இருக்கின்றன. எனவே, அப்போதைக்கு அப்போது கடையில் மாத்திரை வாங்கிச் சாப்பிடுவதை விட்டு விட்டுத் தொடர்ந்து தொல்லை கொடுக்கும் தலைவலியைக் குணப்படுத்த வேண்டுமென்றால் அடிப்படை காரணத்தைக் கண்டுபிடித்துக் குணப்படுத்த வேண்டும்.

இன்னொரு முக்கியமான விஷயம். தலைவலி மாத்திரைகள் சில ஆபத்தானவை. இவை ரத்த நாளங்களைப் பலவீனமடையச் செய்கின்றன. மாதவிடாய் சமயம் தலைவலி தாங்காமல் ஏகப்பட்ட மாத்திரை விழுங்கி வந்த பெண்மணி, திடுமென்று ஒரு நாள் ரத்தநாளம் வெடிக்க, இறந்து போனாள். இத்தனைக்கும் அவள் ஒரு டாக்டரின் மனைவி! கணவனுக்கே சொல்லாமலிருந்து இப்படி பரிதாபக் கதையாக முடிந்தது. எனவே, 'தலைவலியா, மாத்திரை முழுங்கு' என்ற ரீதியில் செயல்படாமல் டாக்டரிடம் போய் நமக்கு ஆபத்தில்லாத மாத்திரை எது என்று கேட்டறிந்து, அவர் சொல்கிற அளவில் சாப்பிட வேண்டும். ''ரொம்பத் தலைவலி இரண்டு மாத்திரையாக விழுங்கி வைக்கலாம்'' என்று அசட்டுத்தனமாக நடந்து கொள்ளக் கூடாது.

### நெஞ்செரிச்சல், புளி ஏப்பம், வாயு கோளாறுகள்:

இவற்றால் பாதிக்கப்படுவதற்கு முக்கிய காரணமே அஜீரணம்தான். அளவோடு சாப்பிடுவது நல்லது. கொழுப்புச் சத்துள்ள உணவுகளையும், கிழங்கு வகைகளையும் தொடர்ந்து சாப்பிட்டாலும் இந்தக் கோளாறுகள் வருவதுண்டு. மனத்தில் அழுத்தம் (Stress) டென்ஷன், ஆகிய வற்றாலும் இந்தச் சங்கடங்கள் வருவதுண்டு. சரிவிகித உணவு இல்லாமை, நேரங் கடந்து சாப்பிடுவது போன்றவையும் நோய்க்கு வழி வகுக்கும். இந்தக் கோளாறுகளால் தாக்கப்படுபவர்கள், தமக்கு இதயத்தில் கோளாறு ஏதாவது ஏற்பட்டு விட்டதோ என்று பயந்து விடும் அளவுக்கு, மார்புப் பிரதேசம் முழுவதும் ஒருவித உணர்வால் அவஸ்தைப்படுவார்கள். 'ஹார்ட் அட்டாக்'கோ என்று பயந்து போகின்றவர்களும் உண்டு. இந்தக் கோளாறுகளுக்கெல்லாம், சகட்டு மேனிக்கு 'ஜெலூஸில்' மாத்திரைகளைச் சாப்பிடு

○ வருமுன்னர் காத்தலே சிறந்தது!

அவற்றை அறவே ஒழித்து விடுவது நல்லது. ஒரு வெற்றி வீரனுக்குச் சுய மதிப்பு எத்தனை அவசியமோ, அத்தனை அவசியம் 'பாஸிடிவ்'வாக அவன் நினைக்கும் எண்ணங்கள்.

## தடைகள், தோல்விகள் அல்ல!

புதிய முயற்சிகளில் ஈடுபடுபவன் சில தடைகளைச் சந்திக்க நேரிடும். அவற்றை எதிர்கொண்டு



முன்னேறும் மனபலம் அவசியம் தேவை. தடைகள், தோல்விகள் அல்ல என்பதை உணருங்கள்.

உங்களை யாரும் குற்றம் சொல்லும் பொழுது, உங்களைச் சொல்லுவதில்லை; உங்கள் செயலைச் சொல்லுகிறார் என்று எடுத்துக் கொள்ளுங்கள்.

உங்களை யாராவது பாராட்டும் பொழுது, பணிவுடன் 'நன்றி' என்று மனம் விட்டுச் சொல்லுங்கள்.

தவறு செய்துவிட்டோம் என்றால், 'சாரி, மன்னியுங்கள்' என்று வெளிப்படையாகச் சொல்லுங்கள். பணிவு, பிறர் மீது நீங்கள் வைத்திருக்கும் மதிப்பை வெளிப்படுத்தும் உணர்வு என்பதை அறியுங்கள்.

உசுப்பி விடுகிற அல்லது தூண்டிவிடுகிற உணர்வு ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் இருக்கிறது. இதுதான் அவனது ஆசையைத் தூண்டி விடுகிறது; வெற்றி அடைய வேண்டும் என்ற உந்துதலைத் தருகிறது. தோல்வியடைபவர்களுக்கு அவர்களது பயமே தடைக் கல்லாக இருக்கிறது.

வெற்றி அடைவது என்பது என்ன?

உயர்வான சில குறிக்கோள்களை வைத்துக் கொண்டு, அவற்றை அடைய, எத்தனை தடைகள் எதிர்ப்பட்டாலும் அவற்றைத் தகர்த்து வெளியேறி முன்னேறிக் கொண்டே இருப்பதுதானே?

தோல்வி மனப்பான்மையைவிட்டுத் தூர விலகுங்கள். 'முடியாது,' 'பயமாக இருக்கிறது' என்பவை மறக்கப்பட வேண்டிய வார்த்தைகள்.

திட்டமிட்டு, தீர்மானித்துக் கொள்ளுங்கள்:

மனித மனம் ஒரு கம்ப்யூடரைப் போன்றது தான். அதற்குக் குறிப்பான கட்டளைகள் தேவை.

அதனால்தான், வீரர்கள் வெற்றியைக் குறித்த கட்டளைகளை மனத்துக்குக் கொடுத்துக் கொண்டே இருக்கும் பொழுது, கோழைகள் அதைப்பற்றி நினைத்துக்கூடப் பார்ப்பதில்லை. நம்மால் முடியும் என்று இவர்கள் மனசால் கூட நினைப்பதில்லை!

தங்க மெடல்களை வென்ற சில விளையாட்டு வீரர்கள்: பாப் மத்தாயாஸ், ரூஸ் ஜென்னர் மில்க் கேம்பல், ரீஃபர் ஜான்சன், இந்தச் சாதனையாளர்கள் சொன்னார்களாம்:

'எங்கள் வெற்றிகள் எல்லாம் ஓர் அங்குலம் இங்கே; ஓர் அங்குலம் அங்கே — என்று சில இடைவெளிகளைத் தாண்டும் முயற்சிகளைப் பொறுத்தது. அதற்காகத் திட்டமிடுகிறோம். எப்படிச் செய்தால் இது சாத்தியப்படும் என்று பிளான் செய்து கொள்ளுகிறோம்!'

'ஆலிஸ் இன் ஒண்டர்லாண்ட்' படித்திருப்பீர்கள். பல சாலைகள் சந்திக்கும் ஓர் இடத்துக்கு வந்து சேர்ந்துவிட்ட ஆலிஸ் எந்தத் திசையில் போவது என்று தெரியாமல் விழித்துக் கொண்டு நிற்கிறாள். பிறகு, அங்கே இருக்கிற செஷயர் பூனையிடம், "நீதான் சொல்லேன், நான் எந்த வழியில் போக வேண்டும்?" என்று கேட்கிறாள்.



வதை விட்டு விட்டு டாக்டரைச் சென்று பார்ப்பதே நல்லது.

நமது வயிற்றில் உணவை ஜீரணிக்க என்சைம்கள் தவிர அமிலமும் சுரக்கிறது. டென்ஷன் போன்றவற்றால் அமிலம் சுரப்பது அதிகரிக்கிறது. இதனால் வாயுக்கோளாறாக ஆரம்பித்து குடல் புண் என்னும் அல்ஸராக முடியும் வாய்ப்பு இருக்கிறது. எனவே நமக்கு ஒத்துவராத வாயு பதார்த்தங்களை அவை எவ்வளவுதான் ருசியாக இருந்தாலும் மிகக் குறைவாகச் சாப்பிடுவது நல்லது. இதற்கு மனோதிடம் தேவை. தேகப் பயிற்சி மிகவும் முக்கியம். வாக்கிங் போவது, அல்லது யோகாசனம் பயில்வது, வாயு பிரிய உதவுவதுடன் மனச்சாந்தியும் அளித்து டென்ஷனைக் குறைக்கும்.

## இருமல்:

வறட்டு இருமல், சளியுடன் கலந்து வரும் இருமல் என்று இரு வகைகள் உள்ளன. கிருமிகளால் நுரையீரல் தாக்கப்படும் போது சளி பிடித்துப் பின்னர் அது இருமலில் கொண்டு போய் விடுகிறது. காசநோயால் பீடிக்கப்பட்டவர்களுக்குத் தீவிர நிலையில் இருமலுடன் சளி மட்டுமல்லாமல் ரத்தமும் வரும். ஆஸ்துமா நோயாளிகள், சிகரெட் பிடிப்பவர்கள், ஆகியோருக்கு வறட்டு இருமல் சகஜம். ஒவ்வாத பொருள்கள், வாசனைகள் காற்றில் கலந்து வரும் போதும், இருமல் நம்மைத் தாக்குகிறது. நமது மூச்சுக் குழாய்ப் பகுதியில் ஏதேனும் அந்நியப் பொருள் பட்டாலும்



"நீ எங்கே போக வேண்டும் என்று நினைக்கிறாயோ, அதைப் பொறுத்தது!" என்கிறது பூனை. "உனக்கே எங்கே போக வேண்டும் என்று தெரியாத போது, நான் எப்படி வழி கூறுவது? நீ எங்காவது போய் நிற்பாய், கடைசியில்!" என்கிறது.

உங்கள் இலக்கு எங்கே இருக்கிறது என்று திடமாக அறிந்த பிறகு, அதை அடைய, தீர்மானமான திட்டங்களை உருவாக்கிக் கொள்ளுங்கள்.

இந்த ஆண்டு நான் என்ன என்ன செய்ய வேண்டும்?

என் குறிக்கோள்கள் என்னென்ன?

என்னுடைய அடுத்த முக்கியப் பணி அல்லது திட்டம் என்ன?

புரையேறும். இருமலைக் குணப்படுத்த பல ஸிரப் மருந்துகள் உள்ளன. ஆனால் இருமல் நீடிக்கும் போது டாக்டரை அணுகி காரணங்களைத் தெரிந்து கொண்டு, அடிப்படை பிரச்னையைக் கண்டறிந்து சரிசெய்ய வேண்டும்.

இருமல் சளி போன்றவை நமது நுரையீரலைத் தாக்காமலிருக்க வாரம் ஒரு முறையேனும் பீச்சுக்குப் போகலாம். அல்லது வீட்டின் மொட்டை மாடியில் காற்றாட சற்று நேரம் உலாவலாம். சுத்தமான பூங்கா அல்லது ஆற்றுப் படுகைக்குப் போய் சற்று நேரம் இருந்து விட்டு வரலாம். அங்கே தூய காற்றை பிராணாயாம முறையில் சுவாசிப்பது அற்புதமான பலன் தரும்.

### சளி:

சளிப் பிடித்ததோ, சனி பிடித்ததோ என்பார்கள். சிகிச்சை செய்து கொண்டால் ஏழு நாட்களிலும், சிகிச்சை செய்யாமல் இருந்தால், ஒரு வாரத்திலும சளி சரியாகும் என்ற பழமொழி மருத்துவ உலகில் உண்டு. நம் உடலில் உள்ள தாங்கும் சக்தி, மற்றும் நோய் எதிர்ப்புச் சக்திக்கு ஏற்ப சளி நம்மைப் பிடிக்கும். திடீரென்று ஒரு மாறுதலான தட்பவெப்ப நிலை, ஐஸ்க்ரீம் முழுங்குவது போன்றவை சளிக்கு வழிவகுப்பவை. தினம் ஐந்து நிமிஷம் மூக்கைப் "பிடித்துக் கொண்டு" பிராணயாமம் செய்பவர்களை ஜலதோஷம் நெருங்கவே பயப்படும்!



○ நாமாகவே மருந்துகளைத் தேர்ந்தெடுக்கக் கூடாது...

### சொறி – சிரங்கு – படை:

சீக்கிரம் பரவும் வியாதி இது. ஒருவருக்கு சொறி, சிரங்கு பிடித்து விட்டால், குடும்பமே ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அவர் சாப்பிட்ட தட்டையும், தண்ணீர் குடித்த தம்ளர்களையும் மற்றவர்கள் உபயோகப்படுத்தக் கூடாது.



''மாப்பிள்ளைப் பையன் உன்கிட்டே அஞ்சு நிமிஷம் தனியா பேசினப்போ என்ன கேட்டார்?''

''பிற்பாடு வரதட்சணையில் கழிச்சுக் கலாம்னு சொல்லி அம்பது ரூபாய் கைமாத்துக் கேட்டார்!''

— ஞா. ஞானமுத்து.

தெளிவாகக் குறித்து வைத்துக் கொள்ளுங்கள்.

உங்களுக்கு வெற்றி வாய்ப்புகள் எங்கெங்கே இருக்கின்றன என்று ஆராய்ந்து பாருங்கள். உங்களால் முடியும் என்று உறுதியாகத் தோன்றுகிற வற்றில் முழு மூச்சுடன் ஈடுபடுங்கள். கட்டுப் பாட்டுடன் செயல்படுங்கள்.

சாதனையாளர்களுக்கு, தங்கள் செய்கைகளில் கிடைக்கும் வெற்றிகள் எல்லாம் 'முன்னோட்டம்' போல, கண்கள் முன்னே காட்சிகளாக விரியும். அவையே அவர்களைத் தூண்டிவிடும் உந்தல்கள்!

## சாதனையாளர்களுக்குத் தனிப்பட்ட குணம் உண்டு:

மருத்துவர் சொல்லுகிறார்: ''நீங்கள் உடல் எடையைக் குறைக்க வேண்டும். டயட் இருக்க வேண்டும்!''

சாதனையாளர் சொல்லுவார்: ''அவ்வளவு தானே? இருந்துவிடுகிறேன்!''

தோல்வி மனப்பான்மை கொண்டவர் சொல்லுவார்: ''ஐயோ! நாலு வாரம் டயட்டா! நம்மால் முடியாது சாமி!''

சாதனையாளர் முயல்கிறார்; ரிஸ்க் எடுக்கிறார்.

தோல்வி மனப்பான்மை உள்ளவர், எதையும் தள்ளிப் போடுகிறார்; பிரச்னைகளைக் கையாளவே அவருக்குப் பயமாக இருக்கும். ஏனென்




''ஆபரேஷனுக்கு நேரமாகி விட்டது. சீக்கிரம் உருளைக்கிழங்கு தோல் கொண்டு வாருங்கள்!'' — இப்படி ஒரு பேச்சை மருத்துவமனையில் கேள்விப் பட்டால் 'ஒரு நிஜமாக' விழிக்காதீர்கள். பிரபல அறுவைச் சிகிச்சை நிபுணரான கேஸ்வானி உருளைக் கிழங்குத் தோலைத் தீக்காயங்களுக்கு டிரெஸ்ஸிங்காக உபயோகித்துப் பார்த்தார். வெகு விரைவில் இயற்கையான புறத்தோல் காயங்களில் வளர்ந்ததோடு, சீக்கிரம் நோயாளியின் தோல் நிறம் இயற்கையான நிறத்தையும் பசுமையையும் அடைந்தது. மேலும் இந்தத் தோலை உபயோகிப்பதும், காயத்திலிருந்து அப்புறப்படுத்துவதும் எளிதாகவும் அதிக வலியின்றியும் செய்ய முடிந்தது!

ஆதாரம்: பிசினஸ் இண்டியா.
தகவல்: கிருஷ்ணவேணி ரங்கநாதன்.

உடைகளையும் மற்றவர் உடைகளுடன் சேர்த்துத் துவைக்கக் கூடாது. படை வீட்டுக்கு வந்து டேரா அடிக்கும் விருந்தாளி போன்றது. சுத்தமாக இருக்க வேண்டும். உடைகளையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

சலவைக்கும் போய் வரும் உள்ளாடைகளை வீட்டில் ஒருமுறை தோய்த்து வெயிலில் உலர்த்தி பிறகு அணிவது நல்லது. குளிக்கும் போது இண்டு இடுக்குகளில் சோப்பு படுகிறதா என்று பார்க்க வேண்டும். சிலர் காதுக்குப் பின்புறம், கால் விரல் இடுக்குகள், அக்குள் இவற்றை மறந்தே விடுவார்கள். அரை மணி நேரம் குளிக்க வேண்டியதில்லை; ஆனால் அவசரக் குளியலும் சரும வியாதிக்கு இடம்தரும்.

## முதுகு வலி:

வாழ்க்கையில் ஏற்படும் அழுத்தம், டென்ஷன், பரபரப்பு ஆகியவை முதுகுவலிக்குக் காரணங்கள். காலையில் எழுந்து குழாயில் தண்ணீர் அடித்தாலும் முதுகுவலி வரும். அதற்குப் பயந்து கொண்டு தண்ணீர் அடிக்காமல் இருக்க முடியுமா? வயதாக ஆக, தசைநார்கள் இறுகிக் கொண்டு விடுகின்றன. இளமை மாறி முதுமை தொடர்வதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நால் இளமையிலேயே 'தோல்வி' என்றால் ஏதோ பயங்கரமான சம்பவம் போன்ற உணர்வு அவர் மனத்தில் ஊறி விடுகிறது. அதனால் தோல் வியைச் சந்திக்கவே பயந்து, முயற்சிகளைத் தவிர்த்து விடுகிறார்.

பூந்தொட்டியில் மலர்களைப் பார்ப்பார் வெற்றியாளர்.

பூந்தொட்டியைச்சுற்றியுள்ள தூசியைக்கவனிப்



முழங்காலை மடித்து முதுகை வளைத்து நிதான மாக இரு கரங்களாலும் பக்கெட் போன்றவற் றைத் தூக்க வேண்டும். கீழே விழுந்த ஒரு பொருளை எடுக்கும் போதும், தாண்டும் போதும், வயதானவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண் டும். குண்டாக இருப்பவர்களை முதுகு வலி சுலபத்தில் தாக்கும். சாதாரண முதுகுவலிகளுக் குக் கடைகளில் விற்கும் 'பாம்' களைத் தடவினால் போதும். ஆனால் முதுகுத் தண்டில் எலும்பு வளருதல், எலும்பு காசநோய், எலும்புப் புற்று நோய் போன்றவையும் கடும் வலியுடன்தான் ஆரம்பமாகும். எச்சரிக்கையாக இருப்பது நல்லது.

**வயிற்று வலி:**

சிறுவர்கள் வயிற்று வலி என்று சொல்லி அழுவதுண்டு. சோதித்துப் பார்த்தால் வயிற்றில் பூச்சி இருப்பது தெரிய வரும். பெப்டிக் அல்சர் உள்ளவர்களுக்கு வயிற்றுவலி நிச்சயம் தோன் றும். பித்தநீர்ப்பை, சிறுநீரகம் ஆகியவற்றில் கல் இருந்தாலும் வயிற்றுவலி ஏகமாக இருக்கும். பெண்களுக்கு மாதவிடாயின் போது வயிற்றுவலி சகஜம். கருப் பை புற்றுநோயும் வயிற்று வலிக்கு ஒரு காரணம். மக்கள் வயிற்றுவலி என்றதும் மருந்துக் கடைக்குப் போய் ஏதாவதொரு மருந்தை வாங்கிச் சாப்பிட்டு விடுகிறார்கள். அது தவறு. அடிப்படையான காரணத்தைக் கண்டுபிடித்துச் சிகிச்சை செய்து கொள்வதுதான் சரி. ஏனெனில்





''பெயிண்டருக்குக் காசை ஒழுங்கா குடுங்கன்னு சொன்னேனே கேட்டீங்களா?''

''இப்ப என்ன ஆச்சு?''

''நம்ம கிளினிக் வாசல்ல 'மீண்டும் வருக'ன்னு எழுதியிருக்கான்!''

— கடையநல்லூர் கணேசன்.

பார் தோல்வியாளர்.

தோல்வியாளர்கள் வெகுதீவிரமாகக் குற்றம்—குறை காண்பார்கள். தம்மையே நொந்து கொள்வார்கள்.

இதற்கு நேர் எதிர் வெற்றியாளர்கள்.

தம்ளரில் பாதிதானே தண்ணீர் இருக்கிறது என்பார் தோல்வியாளர். தம்ளரில் பாதி தண்ணீர் இருக்கிறதே! என்பார் சாதனையாளர்.

### யோசனை கேளுங்கள்:

பிரச்னைகள் முளைக்கும் போது, யார் உங்களுக்குச் சிறந்த ஆலோசனை வழங்குவார்கள் என்று யோசியுங்கள். உங்களைவிடவும் பிரச்னைகளில் மூழ்கித் தவிப்பவரிடம் போய் நிற்காதீர்கள்.

ஓர் அதிகாரி, தமது கைப் பெட்டியை ஆற்றில் வீசியெறிந்து விட்டுப் பாலத்திலிருந்து கீழே குதிக்கும் நிலையில், வேறொரு அதிபர் ஓடி வந்து அவரைத் தடுத்தார், ''குதிக்காதீர்கள்'' என்று.

''என் பிஸினஸ் ஒ ரே டி ய ா க ப் படுத்து விட்டது. என் பணம் எல்லாம் போய்விட்டது. இனிமேல் பேசுவதற்கு என்ன இருக்கிறது!'' என்றார் அதிகாரி.

''அட, எனக்கும்தான் ஏராளமான பிரச்னைகள். ஏகப்பட்ட கவலைகள். நானே எக்கச்சக்கமான பில்களுக்குப் பணம் கொடுக்க வேண்டும்... என்னை விடவா மோசமான நிலைமை உங்களுக்கு? யோசியும்!''

அப்பெண்டிஸைடிஸ் என்ற குடல்வால் நோய் உள்ளவர்கள் காரணம் தெரியாமல் அதை முற்ற விட்டு வயிற்று வலியால் (முக்கியமாக வயிற்றின் கீழ்ப்பகுதி) துடிப்பதும் பிறகு டாக்டர்கள் எமர்ஜென்ஸி ஆபரேஷன் செய்து 'வாலை' வெட்டுவதும் வாடிக்கையான ஒன்று.

### மூட்டு வலி (Joint Pain)

வயதாகும் போது மூட்டுகள் தேய்ந்து போய் விடும். தசைநார்களும் கெட்டிப்பட்டுப் போய் விடுகின்றன. இந்த நிலை மூட்டுகளுக்கு வலியைக் கொடுக்கிறது. சில நேரங்களில் மூட்டுகளில் நீர் சேர்ந்து கட்டிக் கொள்ளும். வலி பிராணன் போகும்.

சில சமயம் ருமாடிஸம் என்னும் வியாதி தாக்கும். இந்த வலி வந்தால் குணப்படுத்த உலக அளவில் இன்னும் மருந்து கண்டுபிடிக்கப்படவில்லை. என்ன சிகிச்சை செய்தாலும் அது தற்காலிகமாகவே இருக்கிறது. மேலும் இதற்காகச் சாப்பிடும் மருந்து பக்கவிளைவுகளையும் ஏற்படுத்தி விடுகிறது. எனவே நமக்கு வந்திருப்பது எத்தகைய மூட்டுவலி என்பதை அறிய, நல்ல டாக்டரை அணுகி கவனமாகச் சிகிச்சை செய்து கொண்டால் சிரமங்களைக் குறைக்கலாம்.

### காது வலி:

நடுராத்திரியில் குழந்தை வீல், வீலென்று அழும். அதற்குக் காரணமும் சொல்லத் தெரியாது. கடைசியில் பார்த்தால் காதில் எறும்பு பூச்சி என்று ஏதாவது புகுந்திருக்கும். கடுமையான ஜலதோஷம், தொண்டைப் புண் இவற்றாலும் காது வலி தோன்றும். காதுகளில் அழுக்கு சேர்ந்தாலும் வலி குடைந்தெடுக்கும். காதுக்குப் பின்னால் மண்டை ஓட்டில் Mastoid எலும்பு இருக்கிறது. இதில் உள்ள காற்றுத் துவாரங்கள் காதுடன் தொடர்பு உடையன. இத்துவாரங்கள் கிருமிகளால் பாதிக்கப்பட்டால் காதில் சீழ் வடிதலும் வலியும் ஏற்படும். எனவே, காதில் அழுக்கு எடுக்கிறேன் பேர்வழி என்று நெருப்புக் குச்சி, ஹெம்கிளிப் ஆகியவற்றைப் பயன்படுத்துவது மிகவும் ஆபத்தானது. எறும்பு புகுந்து விட்டதாகத் தோன்றினால் சுத்தமான நீரை விட்டு நிரப்பி பிறகு தலையை மறுபுறம் திருப்பிப் படுத்தால் அது வெளியே வந்து விடும்.

### தொண்டை வலி:

தொண்டை புண்ணாகி வலி வரும். டான்ஸில் பகுதி கிருமிகளால் பாதிக்கப்பட்டாலும் சிவந்து வீங்கி தொண்டை வலிக்கும். 'மம்ஸ்' என்ற கழுத்துப் பகுதி வீக்கம் (இது அம்மையில் ஒரு வகை) வருவதற்கு முன் கடும் தொண்டை வலி ஓர் அறிகுறி. உப்பை, சுடுதண்ணீரோடு கலந்து நன்கு கலக்கி, பின்னர் தொண்டைக் குழி நனையுமாறு வாய்க்குள் விட்டுக் கொப்புளித்தோமானா

மாறி, மாறி அதிகாரியும் அதிபரும் சுமார் ஒரு ணி நேரம் தங்கள் பிரச்னைகளை எல்லாம் ன்று விடாமல் பரிமாறிக் கொண்டார்கள். றகு—

இரண்டு பேருமாய்ச் சேர்ந்து, பாலத்திலிருந்து ஆற்றில் குதித்தார்கள்!

எனவே பிரச்னை உள்ளவரிடம் உங்கள் பிரச்னைகளைக் கொண்டு போகாதீர்கள். பிரச்னைகளை வென்று சாதனை புரிந்த வெற்றியாளரிடம் யோசனை கேளுங்கள். அவர் உங்கள்



நலனில் அக்கறை கொண்டவராக இருந்தால் நிச்சயம் சில கருத்துக்களைக் கூறுவார். அவற்றில் நீங்கள் பின்பற்றிப் பயனடையக் கூடியவை ஒன்றிரண்டாவது இருக்கும்.

ரங்கன் ஒரு சிறு தொழிலதிபர். நஷ்டம் தொடர்கிறதே என்று, வெற்றிகளைக் குவித்த நண்பரிடம் யோசனை கேட்டார். பேசிக் கொண்டிருக்கும் போதே அந்த நண்பர், இரு விதப் பொருட்களை ரங்கன் தயாரிப்பதையும் அவற்றுள் ஒன்று நல்ல விலை போவதையும் மற்றொன்றில் ஏற்படும் ஏராள நஷ்டம் முன்னதில் கிடைக்கும் லாபத்தையும் விழுங்கி ஏப்பம் விடுவதையும் கண்டு கொண்டார். நஷ்டம் வருகிற இந்தப் பொருளைத் தயாரிப்பதை நிறுத்துங்கள். கௌரவம் பார்க்க வேண்டாம் என்று யோசனை கூறினார். ரங்கன் அந்த யோசனையை ஏற்றார். அந்த வருஷமே நிறுவனம் லாபம் கண்டது! நஷ்டத்தைத் தவிர்ப்பதே லாபம்; செலவுகளைக் குறைப்பதே வருமானம் என்று ரங்கன் கண்டு கொண்டார்.

## ஆக்கபூர்வ சிந்தனை

'பாசிடிவ் திங்க்கிங்' எனப்படும் நம்பிக்கை ஊட்டும் எண்ணங்களையே உங்கள் மனத்தில் பயிராக்குங்கள். வளரவிடுங்கள்.

சோர்ந்து போகும் தருணங்களோ, தோல்வி தரும் முயற்சிகளோ உங்களைப் பொறுத்தவரை நிச்சயம் உருவாகாது.

பிரச்னைகளை ஒரு விளையாட்டு வீரரைப் போல் எதிர்கொள்ளுங்கள். அதில் வெற்றி வாகை சூடி, தங்கப் பதக்கங்களைத் தட்டிச் செல்லவே எப்போதும் திட்டமிடுங்கள்.

எதிர்மறை எண்ணங்களை யார் சொல்லக் கேட்டாலும் ஒரு காதில் வாங்கி இன்னொரு காதில் விட்டுவிடுங்கள்.

எதிர்மறை எண்ணங்களைப் பின்னுக்குத் தள்ளுங்கள். அவை காற்றோடு கரைந்து போகட்டும்.

நீங்கள் முன்னேறும் வேகத்தில், பிரச்னைகளை ஒரு போர் வீரனின் உறுதியுடன் வீழ்த்துங்கள்.

வெற்றிகளைக் குவியுங்கள்.

— சாருகேசி

(ஆதாரம்: டெனிஸ் வைட்லியின் GO FOR GOLD, காசோராலாவின் GO FOR IT சொற்பொழிவுகள்)

---

தொண்டை வலிக்கு நிவாரணம் கிடைக்கும்.

### பல் வலி:

சாக்லேட், பெப்பர்மிண்ட் என்று சதா வாயில் அடக்கி, ஐஸ்கிரீம்களையும் மானாவாரியாக விழுங்கும் உங்கள் வீட்டுப் பிள்ளைகளுக்குப் பின்னாட்களில் பல் சொத்தையாகப் போவது நிச்சயம். சாக்லேட் சாப்பிடக் கூடாது என்றல்ல. உணவுண்ட பிறகு சாப்பிடலாம். அப்புறம் வாயைக் கொப்புளித்து இனிப்பு வாயில் தங்காமல் நீருடன் வெளியேற்றி விட வேண்டும். பல் வலியை பல் ஒன்றோடு மட்டும் சம்பந்தப் படுத்தக் கூடாது. பல் கெட்டுப் போனால் அதிலிருந்து உடலின் வேறு பகுதிகளிலும் பலவித மான வியாதிகள் வரும். எனவே பற்களைச் சுத்தமாகப் பாதுகாப்பது ரொம்ப முக்கியம். சாப்பிட்ட பின்னர் வாயை நன்கு கொப்புளிக்க வேண்டும். இரவு தூங்கப் போகுமுன் கட்டாயமாகப் பல் துலக்கி விட்டுத்தான் தூங்க வேண்டும். இல்லையேல் காலையில் எழுந்தால், வாயில் துர்நாற்றம் வீசும். காரணம் அழுகிய உணவுத் துகள். இதனால் பற்களைப் பற்றியுள்ள சிவந்த இகறு படிப்படியாகப் பாழாகும். நோய் முற்றினால் பற்கள் ஆட்டம் காணும்-பல் சொத்தை ஆகும். சொத்தைப் பல்லை எடுத்து விடுவது, பற்களில் பள்ளம் இருந்தால் அடைப்பது போன்றவற்றின் மூலம் பல் வலியை ஒழிக்கலாம். அதை விடச் சிறந்தது, வாயைச் சுத்தமாக வைத்திருந்து பல் வலியே வராமல் தடுப்பது.

### கடைசியாக ஒன்று:

படித்தவர்கள், விவரம் அறிந்தவர்கள், மருந்துக் கடைகளை நாடி சுயமருத்துவம் செய்யும் ஆபத்தான போக்கு ஒரு பக்கம் இருக்க, படிக்காத பாமர மக்கள் மத்தியில் அறியாமை தலைதூக்கி ஆடுவது மறுபுறம். பாம்புக்கடி, தேள் கடி, இருமல், காய்ச்சல் போன்றவற்றைக் குணமாக்க, யாரோ ஒரு பூசாரியிடம் போய்க் கயிறு மந்திரித்துக் கட்டிக் கொள்வதும், வேப்பிலை அடித்துக் கொள்வதுமே அவர்களுடைய சிகிச்சையாக இருக்கிறது. இந்த அறியாமையால் நோய் முற்றிய நிலையில், நோயாளிகள் டாக்டர்களிடம் கொண்டு வரப் படுகிறார்கள். அப்போது சிகிச்சை பலனளிக்காமல் இறந்து போவோரும் உண்டு. சமீபத்தில் சென்னைத் தொலைக் காட்சியில் ஒளிபரப்பான திரைப்படத்தில் "அம்மனிடம் மந்திரிக்கக் கொண்டு போகாமல், டாக்டரிடம் போனதேன்" என்றெல்லாம் வசனம் பேசுகிறார்கள். மக்களைத் தெளிவுபடுத்த வேண்டிய தொலைக் காட்சியே இதுபோன்ற படங்களை ஒளிபரப்பலாமா? என்னிடம் வரும் நோயாளிகளுக்கு நான் சொல்வது: "கடவுளை நம்புங்கள்; அதே சமயத்தில் டாக்டர்களிடம் முறையான சிகிச்சை செய்து கொள்ளுங்கள்."

தொகுப்பு: ப்ரியன்

# மின்னலடிக்குது அதிவெண்மை



